ஸ்ரீ காமகோடி க்ரந்தாவளி - 39

ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் இயற்றிய

# ஆத்மார்பண ஸ்துதி



ஸ்ரீ காமகோடி க்ரந்தாவளி - 39

# ॥ आत्मार्पणस्तुतिः ॥

## श्रीमद् अप्पय्यदीक्षितविरचिता

# ஆத்மார்பண ஸ்துதி

**ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதர் அவர்களால்**
**இயற்றப்பட்டது**

ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய
ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகளான
**ஸ்ரீ சந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதீ**
**ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள்**
அருளிய திவ்ய ஸ்ரீமுகத்துடனும்

**ய. மஹாலிங்க சாஸ்திரிகள்**, எம்.ஏ., பி.எல்.
தமிழில் எழுதிய உரையுடனும் கூடியது



பிரசுரித்தவர்
**ஸ்ரீ காமகோடி கோசஸ்தானம்**
4. பிரான்ஸிஸ் ஜோஸப்புத் தெரு, சென்னை -1.

இரண்டாம் பதிப்பு: 1971

விலை: ரூ.1.50

லிபர்டி அச்சகம். சென்னை -1



ஸ்ரீ ஜகத்குரு காஞ்சீ காமகோடி பீடாதிபதிகள்
ஸ்ரீ சந்தர சேகரேந்த்ர ஸரஸ்வதீ
ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள்

॥ श्रीः ॥

मुद्रा

श्रीमत्परमहंस परिव्राजकाचार्यवर्य
श्रीमच्छंकर भगवत्पाद प्रतिष्ठित
श्रीकाञ्चीकामकोटि पीठाधिप जगद्गुरु
श्रीमञ्चन्द्रशेखरेन्द्रसरस्वती श्री पादैः

क्रियते नारायणस्मृतिः ।

शिवतत्त्वविवेक, शिवार्कमणिदीपिकादि चतुरधिकशतप्रबन्ध निर्मातॄणां शिवभक्ताग्रेसराणां श्रीमदप्पय्यदीक्षितानां कृतिषु आत्मार्पण स्तुतिनामकं स्तोत्ररत्नमतिशयेन विराजते । यतः एतत् श्रीदीक्षितैः स्वीयमनोवृत्तिं परीक्षितुकामैः स्वेनैव संपादितायामुन्मादावस्थायां विरचि तत्वात् उन्मत्तपञ्चाशदिति प्रख्यातम्, परमेश्वरे स्त्रीयस कलसमर्पण च वरीवर्ति । एतादृशग्रन्थरत्नं गैर्वाणवाण्यनमि परतत्वादन्वर्थाभिधं ज्ञानामपि सुलभबोधाय द्राविडभाषापदवाक्यार्थसनाथं श्रीकामकोटि कोशस्थानाधिकारिमिः मुद्राप्यास्मत्सन्निधावुपहृतमवलोक्याम न्दमानन्दं भजामः ।

एतत्स्तोत्रमणेः पठन, श्रवणादिना सर्वेश्वरं सेवमाना : भक्ताः एवं सद्ग्रन्थप्रचारणेन लोकस्योपकुर्वन्तः श्रीकोशस्थान निर्वाहकाच श्री चन्द्रमौलीशकृ पापात्रभूताः निखिलानि श्रेयांसि प्राप्नुवन्त्वित्याशास्महे ।

नारायणस्मृति

विजययात्रास्थानम्
श्रीकाञ्चीक्षेत्रम्
मम्मथ - पौष - शुद्ध दशमी

ஶ்ரீ:
ஶ்ரீ முகம்

ஶ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜக ஆசார்யர்களான
ஶ்ரீமத் சங்கர பகவத் பாதர்களால் பிரதிஷ்டை
செய்யப் பெற்ற ஶ்ரீ காஞ்சீ காமகோடி பீடா
தீச்வரர்களான ஜகத்குரு ஶ்ரீமத் சந்த்ர
சேகரேந்த்ர ஸரஸ்வதீ ஶ்ரீபாதர்
களால் நாராயணஸ்மரணம்
செய்யப்படுகிறது.

சிவதத்வ விவேகம், சிவார்க்கமணி தீபிகை முதலிய நூற்று நான்கு (104) நூல்களை இயற்றியுள்ளவர்களாயும், சிவபக்தர்களுடைய முன்னணியில் இருப்பவர்களுமான ஶ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் அவர்களின் கிரந்தங்களுள் '**அத்மார்ப்பண ஸ்துதி**' என்னும் பெயருடைய ஸ்தோத்ர ரத்னமானது மேன்மையுடன் விளங்குகிறது. ஏனெனில், இது தன் மனதின் எண்ணத்தைப் பரிசோதித்துப் பரர்க்க விருப்பமுடையவர்களான ஶ்ரீ தீக்ஷிதர் அவர்களினால் ஸ்வயமாகவே ஏற்றுக் கொள்ளப்பட்ட உன்மாதாவஸ்தையில் இயற்றப்பட்டதால் '**உன்மத்தபஞ்சாசத்**' என்று புகழ்பெற்றதாகவும் பரமேச்வரனிடம் தன்னுடைய ஸகல சொத்துக்களையும் அர்ப்பணம் செய்வதையே கருத்தாகக் கொண்டிருப்பதால் பெயர்ப் பொருத்தமுடையதாகவும் இருக்கிறது. இத்தகைய உயர்ந்த கிரந்தத்தை ஸம்ஸ்கிருத பாஷை அறியாதவர்களும் எளிதில் புரிந்துகொள்வதற்காக தமிழில் ப்ரதிபதார்த்தம் கருத்துரை இவைகளுடன் ஶ்ரீ காமகோடி கோச ஸ்தான நிர்வாஹிகள் வெளியிட்டு நம் முன்னிலையில் வைத்துள்ளதைப் பார்த்து மிகவும் ஸந்தோஷிக்கிறோம்.

இந்த உயர்ந்த ஸ்தோத்ரத்தை படிப்பது, சிரவணம் செய்வது முதலியவைகளால் ஸர்வேச்வரனை ஸேவிக்கிற பக்தர்களும், இவ்விதமே உத்தம கிரந்தங்களை ப்ரசாரம் செய்துகொண்டு அதன் மூலம் உலகத்திற்கு உபகாரம் செய்துவரும் ஶ்ரீ கோச ஸ்தான நிர்வாஹகர்களும் ஶ்ரீ சந்த்ர கௌளீசருடைய க்ருபைக்கு தகுதியுடையவர்களாக ஆகி எல்லா ச்ரேயஸ்களையும் அடையட்டும் என்று ஆசீர்வதிக்கிறோம்.

நாராயணஸ்ம்ருதி:

விஜயயாத்ராஸ்தானம்
ஶ்ரீ காஞ்சீக்ஷேத்ரம்
மன்மத - பௌஷ - சுத்ததசமீ.

உ

# உபோத்காதம்

## ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதர்

வட ஆற்காடு ஜில்லாவில் ஆரணிக்குப் பக்கத்தில் அடையப்பலம் என்று ஒரு கிராமம் இருக்கிறது. அங்கு பாரத்வாஜ கோத்திரத்தைச் சேர்ந்த ஸ்ரீரங்கராஜ தீக்ஷிதர் வசித்து வந்தார். அவருக்குப் புதல்வராக ஸ்ரீமான் அப்பய்ய தீக்ஷிதர் A.D.1520 - ல் அவதரித்தார். தீக்ஷிதருக்கு மாதுல க்ருஹம் விரிஞ்சிபுரத்தில். ஸ்ரீரங்கராஜ தீக்ஷித ரின் தகப்பனார் பிரஸித்தி பெற்ற ஆசார்ய தீக்ஷிதர். அவர் விஜயநகரம் கிருஷ்ண தேவராயரால் தன் ஆஸ்தானத்தில் விசேஷமாக கௌரவிக்கப்பட்டவர். அவருடைய இரண்டாவது ஸம்ஸாரம் ஒரு வைஷ்ணவ கன்னிகை. இந்த இளைய ஸம்ஸாரத் திற்கு முதல்பிள்ளையாக பிறந்தவர் ஸ்ரீரங்கராஜ தீக்ஷிதர். அத்வைதத்தில் இரண்டு கிரந்தங்களை இயற்றியிருக்கிறார். மேலும் அவர் விச்வஜித் யாகத்தைச் செய்தவர். விச்வஜித் யாகத்தில் தன் சொத்துக்கள் பூராவாக வினியோகம் செய்துவிட வேண்டும். இத்தகைய யாகத்தை ரகு மஹாராஜா செய்ததாக ரகுவம்சத்தில் நாம் படிக்கிறோம். அந்த மஹானுடைய மூத்த குமாரர் ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதர். இரண்டாவது குமாரர் ஆச்சான் தீக்ஷிதர். இந்த ஆச்சான் தீக்ஷிதருடைய பௌத்ரரும் நாராயண தீக்ஷிதருடைய புத்ரரும் தான் ஸ்ரீ நீலகண்ட தீக்ஷிதர் என்ற பிரஸித்தி யைப் பெற்ற கவி.

ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதர் தன் தகப்பனாரிடமே சகல வித்தைகளையும் இருபது வயதுக்குள் கற்றுணர்ந்தார். சிவரஹஸ்யத்தில் பகவத்பாத ஸ்ரீ சங்கராசாரி யர், ஸ்ரீ ஹரதத்தாசாரியர் இவர்களின் அவதாரத்தைப் பற்றி பிரஸ்தாபித்து விட்டு ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதரின் அவதாரமும் கூறப்பட்டிருக்கிறது -

**दीक्षितोऽपि भवेत् कश्चित् मदशो भूसुरोऽम्बिके।**
**भासुराचारनिरतः शैवश्छन्दोगवंशजः ||**
**शैवशास्त्रं तदा भूमौ लुप्तं विस्तारयिष्यति ॥**

**தீ³க்ஷிதோ(அ)பி ப⁴வேத் கஶ்சித் மத³ஶோ பூ⁴ஸுரோ(அ)ம்பி³கே ।**
**பா⁴ஸுராசாரநிரத꞉ ஶைவஶ்ச²ந்தோ³க³வம்ஶஜ꞉ ॥**
**ஶைவஶாஸ்த்ரம் ததா³ பூ⁴மௌ லுப்தம் விஸ்தாரயிஷ்யதி ॥**

ஸ்ரீ தீக்ஷிதருடைய உண்மைப் பெயர் வினாயக ஸுப்ரஹ்மண்யன். “அப்பய் யா” என்ற செல்வப் பெயரே உலகப் பிரசித்தி பெற்றதாக ஆகியது.

ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் அதிபால்யவயதிலேயே புகழ்பெற்ற பண்டிதரானார். அக்காலத்தில் ராஜநாத டிண்டிம ஸார்வபௌம கவி என்ற பெரியவர் ஒருவர்

இருந்தார். டிண்டிம கவிகள் விஜயநகர ராஜ்யத்தின் ஆதரவு பெற்று விளங்கினவர் கள். ஸார்வபௌம கவி ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதரைப் பற்றி புகழ்ந்து போற்றிய கவிதை ஒன்று கர்ண பரம்பரையில் வந்திருக்கிறது. இவர்கள் சந்தித்த போது அப்பய்ய தீக்ஷிதருக்கு இருபது வயதும் ஸார்வபௌம கவிக்கு வயது எண்பதும் இருக்கலாம்.

கிருஷ்ணதேவராயர் 1528 - ல் காலமானார். அவருக்குப் பின் அவருடைய இளைய சகோதரன் அச்யுதராயன் 1542 முடிய அரசுரிமை செலுத்தினான். அவரு டைய தம்பி பிள்ளை ஸதாசிவராயன் பின்பு பட்டத்திற்கு வந்தான். ஸதாசிவராயன் சிறியவனானபடியால் கிருஷ்ண தேவராயனின் மாப்பிள்ளையான ராமராயர் ரட்சக னாக விருந்து ராஜ்ய பரிபாலனம் செய்து வந்தார். ஸதாசிவராயர் வயது வந்த பின்னும் சாமர்த்தியசாலியாக இல்லாததால் ராஜ்யபாரம் ராமராயர் கையிலேயே தங்கி விட்டது. ஸதாசிவராயர் பெயருக்கு மட்டும் அரசனாக விருந்தார்.

அந்தக்காலத்தில் தஞ்சாவூர் ராஜ்யம் சாளுவ வீர நரஸிம்மனின் கையில் இருந்தது. ராமராயனின் நெருங்கிய உறவினரான சின்ன திம்மன் திருச்சிறாப்பள்ளி யிலிருந்து கொண்டு தெற்கு பிராந்தியங்களை விஜயநகர ஆட்சிக்கு உட்படுத்தி ஏகாதிபத்தியத்தின் ராஜப்ரதிநிதியாக விளங்கி வந்தார். அவர் ஆட்சிகாலம் 1542 முதல் 1550 வரை. சின்ன திம்மன் சோழ கேரள பாண்டிய தேசங்களுடன் திருவனந் தபுரத்தையும் தென் கிழக்குக் கடற்கரை ராஜ்யங்களையும் ஜயித்து ஜயஸ்தம்பங் களை நாட்டினார். இந்த திக்விஜயங்களைப் பற்றியும் சின்ன திம்மனின் வம்சபரம்ப ரை முதலிய பெருமைகளைப் பற்றியும் ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதர் தன்னால் எழுதப்பட்ட யாதவாப்யுதய மஹா காவியத்தின் வியாக்யானத்தின் முன்னுரையில் தெரிவிக்கிறார். சின்னதிம்மனின் வேண்டுகோளுக்கு இணங்கித்தான் அந்த வியாக் யானத்தை எழுத நேர்ந்ததெனவும் விளக்குகிறார். சுமார் முப்பது வயதில் ஸ்ரீ தீக்ஷி தர் இந்த வியாக்யானத்தை எழுதியிருக்கலாம். :

இதே காலத்தில் தஞ்சாவூர் அரசரான வீர நரஸிம்மனும் ஸ்ரீமத் தீக்ஷிதர் அவர்களைப் பாராட்டிப் போற்றி வந்தார் என்று ஊகிக்க இடமிருக்கிறது. ஸ்ரீ தீக்ஷிதர் சிதம்பரத்தில் வாஜபேய யாகம் செய்தபொழுது அவபிருத ஸ்னானத்தன்று அரசர் அவருக்குக் குடை பிடித்தார் என்று சரித்திரம் கூறுகிறது.

விஜயநகரத்தில் ஆட்சிபுரிந்து வந்த ராமராயன் வைஷ்ணவன். ராஜகுருவான தாதாசாரியரின் ஊழியன். அக்காலத்தில் ராஜாச்சயபலத்தை வைத்துக் கொண்டு தாதாசாரியர் வைஷ்ணவ சமயத்தை விஸ்தரிக்கப் பெருமுயற்சிகள் எடுத்துக் கொண்டார். அவருடன் எதிர்த்துப் போராடி சைவ ஸமயத்தை அழிவினின்றும் காப்பாற்றும் பொறுப்பு ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதருக்கு ஏற்பட்டது. அப்பய்ய தீக்ஷிதரின் கவிதைகளிலும் அக்காலத்தில் சைவ சமயத்திற்கு நேர்ந்த விபத்து நன்று விளங்கு கிறது. சைவ சமயத்தை நாட்டினின்றும் விரட்டி விடுவதென்றும் நாடு முழுவதும் வைஷ்ணவ ஸமயத்தை நிலைநாட்டி விடுவதென்றும் வைஷ்ணவ ப்ரசாரகர்கள் கங்கணம் கட்டிக்கொண்டனர். ராமராயன் பொருள் உதவி செய்து தன் ஆதரவையும் இந்த விஷமமான இயக்கத்திற்குத் தந்தான். ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதர் இந்த விபரீத

முயற்சிகளை முன்னேற விடாமல் தடுத்து சைவ சாஸ்திரத்தை சீர்குலையாமல் பரிபாலித்து நாடெங்கும் பரவச் செய்யப் பல பல வருஷங்கள் பாடுபட்டார்.

1565 ல் தலைக்கோட்டை யுத்தத்தில் துலுக்க சாம் ராஜ்யம் வெற்றி பெற்றது. ராமராயர் தன்னுடைய 97 - வது வயதில் யுத்த களத்தில் வீரஸ்வர்க்கம் எய்தினார். விஜய நகரம் சத்ருக்களின் வெறியாட்டத்திற்குப் பாத்திரமாகி தவிடு பொடியாகியது. சரித்திரப்பிரஸித்தி பெற்ற அந்த அழகிய நகரம் இப்போது மண்ணுக்குள் புதைந்து கிடக்கிறது. 1567 ல் சதாசிவன் காலமானார். ராமராயனின் தம்பியான திருமலை பெனுகொண்டாவில் தன்னை அரசனாக்கிக் கொண்டான். விஜயநகர ஏகாதிபத்யம் சீர் குலைந்தபின் வேலூர் சிற்றரசனான சின்ன பொம்ம நாய்க்கன் தன்னை வலுப் படுத்திக் கொண்டு முன்னணிக்கு வந்தான். அவனுடைய உதவி ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதருக்குக் கிடைத்தது. சின்ன பொம்மன் நல்ல சிவ பக்தன். அவன் ராஜ்ய காலம் 1549 முதல் சுமார் முப்பது வருஷங்கள். ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதரை அதிக காலம் ஆதரித்தவன் சின்ன பொம்மனே. இந்த நீடித்த காலத்தில் அவன் உதவி பெற்று ஸ்ரீ தீக்ஷிதர் அவர்கள் சைவ சமய பிரசாரம் செய்து வெற்றிக்கொடி நாட்டினார்கள். பதினான்கிற்கு குறையாமல் சைவ சாஸ்திர கிரந்தங்களை அவர் இயற்றினார். அவற்றில் முக்கியமானது **சிவார்க்கமணி தீபிகை**. இது ஸ்ரீகண்ட பாஷ்யத்தின் விரிவுரை. இப்பெரிய சாஸ்திரத்தின் கர்த்தாவான ஸ்ரீ தீக்ஷிதரை சின்ன பொம்மன் கனகாபிஷேகம் செய்து கௌரவித்தான். இந்தக் கனகாபிஷேகத்தைப் பற்றி அடையப்பலம் ஜ்வர கண்டேச்வரரின் ஆலயத்திலிருக்கும் 1582 A.D. தேதி யிட்ட சிலாலேகம் குறிப்பிடுகிறது. ஸ்ரீ தீக்ஷிதர் அந்தக் கோவிலை ஜீர்ணோத்தாரணம் செய்ததாகவும் அதன் மூலம் அறிகிறோம். மேலும் அந்தக் கல்வெட்டினால் நாம் அறிந்து கொள்ளும் முக்கியமான விஷயம் என்னவென்றால் சிவார்க்கமணி தீபிகையை ஐந்நூறு வித்வான்கள் ஸ்ரீ தீக்ஷிதர் அவர்களிடமே பாடம் கேட்டார்கள் என்றும் அவ்வித்வான்களுக்கு சின்ன பொம்மன் வர்த்தனைகள் ஏற்படுத்தி வசதிகள் செய்து கொடுத்தான் என்றும் அறிகிறோம். இப்பண்டிதர்கள் மூலம் சைவ சமயமா னது நாடெங்கும் பரப்பப்பட்டது. வைஷ்ணவ சமய பிரசாரம் ஓங்காமல் தடுக்கப் பட்டது. ஸ்ரீ தீக்ஷிதர் அவர்கள் கிரந்தங்கள் இயற்றியதுடன் நிற்காமல் வாதங்கள் செய்தும் விரோதிகளை ஒடுக்கினார்கள். ஸ்ரீ தீக்ஷிதர் அவர்கள் இந்த விதமான தொடர்ந்த எதிர்ப் பிரசாரத்தின் மூலம் வைஷ்ணவ குருக்களின் விரோதச் செயல்க ளுக்கு இலக்கானார் என்று பல கதைகள் கூறப்படுகின்றன. அவரால் இயற்றப்பட்ட **நிக்ரஹாகஷ்ட**த்தைப் படித்துப் பார்த்தால் ஒருவாறு அத்தகைய கதைகள் உண்மையாகவே இருந்திருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. இவ்விதம் தன் உயிரையும் பெரிதாய் நினையாமல் பகவத் கிருபையையே நம்பி ஸ்ரீ தீக்ஷிதர் அவர்கள் சைவ சாஸ்த்ர ப்ரதிஷ்டாபனம் செய்தார்கள். **शैवशास्त्रं तदा भूमौ लुप्तं विस्तारयिष्यति** **ஶைவஶாஸ்த்ரம் ததா[3] பூ[4]மௌ லுப்தம் விஸ்தாரயிஷ்யதி** என்ற ரஹஸ்ய வாக்கியத்தை மெய்ப்பித்தார்கள். **ஸ்ரீகண்ட[2]மதப்ரதீஷ்டாபனசார்ய:** என்று அவரை எல்லோரும் கொண்டாடினார்கள்.

ஆனால் தீக்ஷிதர் அவர்கள் அத்வைதீ. சிவத்வேஷிகளை எதிர்ப்பதற்காக அவர் கட்சி கட்டினாரே ஒழிய சிவ விஷ்ணு பேதம் அற்றவர். இதை அவர்களே கூறுகிறார்கள்.

**विष्णुर्वा शंकरो वा श्रुतिशिखर गिरामस्तु तात्पर्यभूमिः,**
**नास्माकं तत्र वादः प्रसरति किमपि स्पष्टमद्वैतभाजाम् ।**
**किन्त्वीशद्वेषगाढानलकलितहृदां दुर्मतीनां दुरुक्तीः**
**भङ्क्तुं यत्नो ममायं न हि भवतु ततो विष्णुविद्वेषशङ्का ॥**

**விஷ்ணுர்வா ஶங்கரோ வா ஶ்ருதிஶிக²ர கி³ராமஸ்து தாத்பர்யபூ⁴மி:,**
**நாஸ்மாகம் தத்ர வாத³: ப்ரஸரதி கிமபி ஸ்பஷ்டமத்³வைதபா⁴ஜாம் ।**
**கிந்த்வீஶத்³வேஷகா³டா⁴னலகலிதஹ்ரு’தா³ம் து³ர்மதீனாம் து³ருக்தீ:**
**ப⁴ங்க்தும் யத்னோ மமாயம் ந ஹி ப⁴வது ததோ விஷ்ணுவித்³வேஷஶங்கா ॥**

அந்தக் காலத்தில் நிருஸிம்மாச்ரம ஸ்வாமிகள் என்ற பெரியவர் ஒருவர் இருந்தார். அவர் ஸ்ரீ தீக்ஷிதரிடம் தெரிவித்துக் கொண்டார் "இந்த சைவ வைஷ்ணவச் சண்டையில் உங்கள் காலம் கழிந்து விட்டதே. அத்வைதத்தை முக்கியமாகக் கொண்டு நீங்கள் சில கிரந்தங்கள் இயற்றவேண்டாமா" என்று. இந்த ஸூசனையின் பேரில்தான் ஸ்ரீதீக்ஷிதர் அவர்கள் தன்னுடைய 104 கிரந்தங்களிலும் சிறந்ததான ஆசந்த்ரார்க்க ஸ்தாயியான பரிமளம் என்ற கல்பதரு வியாக்யானத்தை இயற்றினார்கள். தொடர்ந்து சில அத்வைத கிரந்தங்களையும் இயற்றினார்கள்.

அத்வைத ஸ்தாபனத்திற்கு விசிஷ்டாத்வைத த்வைத மத கண்டனம் அவசியமானதால் அத்தகைய கண்டன கிரந்தங்களையும் ஸ்ரீதீக்ஷிதர் இயற்றினார். ஆனால் கண்டிப்பதற்கு முன் அந்த அந்த மதங்களை தன் வாக்கினாலேயே விளக்கி சில கிரந்தங்களெழுதினார்கள். ஆகையால் மூன்று மதஸ்தர்களுக்கும் ஆதாரமாக உள்ள கிரந்தங்களைச் செய்திருக்கிறார்கள். சைவத்தையும் சேர்த்தால் நான்கு மதங்கள்; இவைகளை எடுத்துரைக்கும் அவர்களுடைய கிரந்தம் **चतुर्मतसारः சதும்ர்தஸாரः** எனப்படும். ஸ்ரீ தீக்ஷிதர் அவர்கள் மேற்படி மதங்கள் பரஸ்பரம் விரோதிகள் அல்லவென்றும் அத்வைத்திற்கு ஏறும் படிக்கட்டுகள் என்றும் நிரூபணம் செய்திருக்கிறார்கள். மேலும் ரத்னத்ரய பரீக்ஷையில் சிவன், அம்பிகை, விஷ்ணு இவர்களின் அபேதத்தையும் விளக்கியிருக்கிறார்கள்.

ஸ்ரீ தீக்ஷிதர் அவர்களை வித்வத் பரம்பரையானது **अद्वैतविद्याचार्यः அத்³வைதவித்³யாசார்ய:** என்றும் **ஸ்ரீகண்ட²மதப்ரதீஷ்டாபக:** என்றும் **चतुरधिकशतपबन्धकर्ता சதுரதி⁴கஶதப்ப³ந்த⁴கதா** என்றும் போற்றியதில் ஆச்சரியமில்லை.

தீக்ஷிதர் அவர்களை **க2ண்ட3தே3வர்** என்ற மஹா மீமாம்ஸகர் **மீமாம்ஸகமூர்த4ந்ய:** என்று தன் கிரந்தத்தில் போற்றியிருக்கிறார். தீக்ஷிதர் மீமாம்ஸா சாஸ்திரத்தில் அநேக க்ரந்தங்களை இயற்றியுள்ளார்.

இது மட்டுமல்லாமல் அலங்கார சாஸ்திரத்திலும் குவலயானந்தம் சித்திர மீமாம்ஸா முதலிய உயரிய கிருதிகளைச் செய்திருக்கிறார். சில ஸ்தோத்திரங்க ளையும் அவர்கள் இயற்றியுள்ளார்கள். இவைகளில் வரதராஜ ஸ்தவம், துர்க்கா சந்திரகலாஸ்துதி, ஆத்மார்ப்பண ஸ்தவம் முதலியவை முக்கியமானவைகள். குவலயானந்தத்திலும் விதிரஸாயனம் என்ற மீமாம்ஸா கிரந்தத்திலும் அவர்கள் விஜய நகரம் மன்னன் வெங்கிடபதியைப்பற்றிப் பேசுகிறார்கள். பேணு கொண்டா வில் ஸ்ரீரங்கர் என்ற அரசன் 1574 முதல் 1585 வரை ஆண்டார். பின்பு ஸ்ரீரங்கனின் தம்பி வெங்கடபதி (முதலாவது) அரசுரிமை செலுத்தினார். அவர் ராஜ்ய காலம் 1585 முதல் 1614 வரை ஆகையால் ஸ்ரீ தீக்ஷிதர் அவர்களின் முதிர்ந்த வயதில் எழுதப் பட்டவை மேற் கூறிய இரண்டு கிரந்தங்களும்.

ஸித்தாந்த கௌமுதி எழுதிய பட்டோஜி தீக்ஷிதர் ஸ்ரீ தீக்ஷிதர் அவர்களின் சிஷ்யர். பட்டோஜிக்கு ஸ்ரீ தீக்ஷிதர் அவர்கள் வேதாந்தமும் மீமாம்ஸையும் கற்பித் தார்கள். பட்டோஜியை வேங்கிடபதியிடம் அழைத்துச் சென்று ஆதரவு வாங்கித் தந்தார். இரண்டொரு வருஷங்கள் பட்டோஜி வேங்கிடபதியின் ஆதரவில் இருந்த தாகத் தெரிகிறது. ஸ்ரீ தீக்ஷிதர் அவர்களின் பிரேரணையின் பேரில் பட்டோஜி அத்வைதத்திலும் மீமாம்ஸையிலும் இரண்டு கிரந்தங்களை இயற்றினார். மீமாம்ஸா கிரந்தமான **तन्त्रसिद्धान्तदीपिका** வில் பட்டோஜி தன் குரு வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்ளும் சுலோகம் பின்வருமாறு:

**अप्पय्यदीक्षितेन्द्र नशेषविद्यागुरूनहं नौमि ।**
**यत्कृतिबोधाबोधौ विद्वदविद्वद्विभाजकोपाधी ।।**

**அப்பய்யதீ3க்ஷிதேந்த்3ர நமேஷவித்3யாகு3ரூனஹம் நௌமி ।**
**யத்க்ருதிபோ3தா4போ3தௌ4 வித்3வத3வித்3வத்3விபா4ஜகோபாதீ4** ॥

இதில் அவர் கூறியது என்னவென்றால் ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதர் இயற்றிய கிரந்தங் களைப் படித்தவர் தான் வித்வான் என்றும் அவைகளைப் படிக்காதவர் வித்வான் ஆகமாட்டான் என்றும். அவர்கள் காலத்திலேயே அவர்களை வித்வான்கள் **द्वितीय शंकर: த்3விதீயஶங்கர:** என்று போற்றினார்கள். இரண்டாவது சங்கரருடைய அவதாரம் என்பது பொருள். ஸ்ரீ நீலகண்ட தீக்ஷிதர் (தீக்ஷிதர் அவர்களின் தம்பி பேரன்) கங்காவதரணத்தில் பத்து சுலோகங்களில் தன் பெரிய தாத்தாவின் மஹிமை களை வருணித்திருக்கிறார். ஸ்ரீ தீக்ஷிதர் அவர்களின் மருமான் ஸமரபுங்கவ தீக்ஷிதர் தன் யாத்ரா பிரபந்த சம்பூவில் தன் மாதுலரின் பெருமைகளை விஸ்தா ரமாக வருணித்திருக்கிறார். ஸமகாலத்தில் இருந்தவர்களே ஸ்ரீதீக்ஷிதர் அவர்களை ஒரு அவதார புருஷர் என்றே எண்ணினார்கள்.

ஸ்ரீ தீக்ஷிதர் அவர்கள் கடைசிக்காலத்தில் சிதம்பரத்தில் வசித்து வந்தார்கள். அங்கு தான் முக்தியடைந்தார்கள். ஸ்ரீ நடராஜாவின் அடியார்களான சிதம்பரம் தீக்ஷிதர்கள் பரம்பரையில் ஒரு வரலாறு வழங்கி வருகிறது. அதாவது தீக்ஷிதர் அவர்களின் நிர்யாண சமயத்தில் ஸ்ரீநடராஜ ஸந்நிதியில் இருந்த தீக்ஷிதர்கள் கண்ட காட்சி என்னவென்றால் ஸ்ரீ தீக்ஷிதர் ஸ்ரீ நடராஜ ஸந்நிதியில் விரைந்து வந்து பஞ்சாக்ஷரப்படியேறி மூலபிம்பத்தில் ஐக்கியமானார்கள் என்றவாறு. ஸ்ரீ தீக்ஷிதர் அவர்கள் 73 வது வயதில் முக்தியடைந்தார்கள். அதாவது 1593 ல். அநேகம் தீக்ஷிதேந்திர விஜயங்கள் இருந்ததாகத் தெரிகிறது. என்ப்ரபிதாமஹர் மஹாமஹோபாத்யாய மன்னார்குடி ராஜு சரஸ்திரிகள் அவர்கள் சது: ச்லோகீ வியாக்யா என்ற கிரந்தத்தில் ஸ்ரீதீக்ஷிதர் அவர்களின் காலத்தைச் பற்றி விசாரிக்கும்போது பழைய தீக்ஷிதேந்திர விஜயம் ஒன்று இருந்ததாகவும் அதிலிருந்து விருத்தர்கள் வழங்கி வந்த சுலோகத்தால் ஸ்ரீ தீக்ஷிதர் அவர்கள் விக்ரம வருஷத்தில் வருஷத்தில் பிறந்து விஜய வருஷத்தில் ஸ்வர்கா ரோஹணம் செய்தார்கள் என்று தெரிவதாயும் குறிப்பு தருகிறார்கள். இந்த தீக்ஷிதேந்திர விஜயம் இப்போது எங்கிருக்கிறதோ தெரிய வில்லை நூறு வருஷங்களுக்கு முன் என் ப்ரபிதாமஹாள் காலத்தில் இருந்த சிவானந்தயோகி என்ற ஒரு பெரியவர் (கடயம் சேஷ தீக்ஷிதர்) ஸ்ரீ தீக்ஷிதர் அவர்களின் சரித்திரத்தை சம்புவாக எழுதி யிருக்கிறார்கள். அது காரத்தூர் கணபதி சாஸ்திரிகள் அவர்களால் சுமார் முப்பது வருஷங்களுக்கு முன் வெளியிடப்பட்டது. சிவானந்தருக்கு ஸ்ரீ தீக்ஷிதர் அவர்களின் பிறந்த வருஷம் மாதம் தேதி முதலிய விவரங்கள் கிடைக்காததால் அவர் நஷ்ட ஜாதக கணனம் செய்து பிரமாதி வருஷத்தில் ஸ்ரீ தீக்ஷிதர் பிறந்தார் என்று பிரகடனம் செய்தார். ஜாதகத்தையும் நஷ்ட ஜாதக கணனப்படி வெளியிட்டார். இதை நம்பி வெகு பேர்கள் ஸ்ரீ தீக்ஷிதர் அவர்களின் காலத்தை 1553 முதல் 1626 வரை என்று நிர்ணயித்தார்கள். இது பொருந்தாது என்றும் உண்மையான காலம் 1520 முதல் 1593 வரை என்றும் நான் Madras Oriental Researoh Journal 1928-29 வருஷங்களில் இரண்டு ஆராய்ச்சிக்கட்டுரைகள் எழுதியிருக்கிறேன். சமீபத்தில் மைசூரில் பிரணதார்த்தி ஹரசாஸ்திரிகளால் வெளியிடப்பட்ட **रत्नत्रयपरोक्षा ரத்²னத்ரயபரோக்ஷா** முன்னுரையிலும் ஆங்கிலத்தில் இந்தக் கால நிர்ணயத்தைப்பற்றி எழுதியிருக்கிறேன். என் ப்ரபிதாமஹாள் **दीक्षित वम्शाभरणम् தீ³க்ஷித வம்ஶாப⁴ரணம்** என்ற ஒரு கத்ய க்ரந்தம் இயற்றி யிருக்கிறார்கள். தீக்ஷித நவரத்னமாலிகையும் ஒன்று இயற்றியிருக்கிறார்கள். தீக்ஷித வம்சாபரணத்தை ஈச்வர கிருபை இருந்தால் வெளியிடவேண்டும் என்று உத்தேசம். அடையப்பலம் வம்சத்தைச் சேர்ந்தவர்கள் தங்கள் தங்கள் பரம்பரையை அதில் தேடிக்கொள்ளலாம். அவர்கள் ஒன்றுகூடி ஆதரித்தால் அதை வெளியிவிடுவது சுலபமாகும்.

ஆத்மார்ப்பண ஸ்துதியை ஸ்ரீமத் தீக்ஷிதர் அவர்கள் இயற்றியதைப் பற்றி ஒரு கதை சொல்லபடுகிறது. ஸ்ரீதீக்ஷிதர் அவர்கள் ஒரு சமயம் தன்னையே தான் பரீக்ஷித்துக் கொள்ள நினைத்தார்கள். தன்னை மறந்திருக்கும் நிலையிலும் சித்த சுத்தி இருக்கிறதா என்று அறிய விரும்பினார்கள்.

शुभं वा यदि वा पापं यन्नृणां हृदि संस्थितम् ।
सुगूढमपि तज्ज्ञेयं स्वप्रवाक्यात् तथा मदात् ।।

**ஶுப⁴ம் வா யதி³ வா பாபம் யந்ந்ருணாம் ஹ்ருதி³ ஸம்ஸ்தி²தம் ।**
**ஸுகூ³ட⁴மபி தஜ்ஜ்ஞேயம் ஸ்வப்ரவாக்யாத் ததா² மதா³த் ॥**

ஒரு மனிதனின் அந்தரங்க சுத்தியை அவனுடைய ஸ்வப்னப்பிதற்றல்களிலிருந்தும் அவனுடைய உன்மத்தாவஸ்தையிலிருந்தும் அறியலாம் என்பது நீதி சாஸ்திரம். ஸ்ரீ தீக்ஷிதர் அவர்கள் ஊமத்தைச்சாற்றைக் குடித்துவிட்டு சிஷ்யர்களிடம் "நான் பிதற்றுவதை எல்லாம் எழுதி வையுங்கள்" என்று சொன்னார்கள். அவர் உன்மத்த நிலையில் பிதற்றியது இந்த ஆத்மார்ப்பணஸ்துதி. இதற்கு உன்மத்த பஞ்சாசத் **உந்மத்த பஞ்சாஸத்** என்ற மறுபெயரும் உண்டு. அவர் ஈச்வரனை நம்பியிரு ப்பது வெளி வியவஹாரத்தில் மட்டும் அன்று ஆழ்ந்த அந்தக்கரணத்துடன் என்பது இதனால் நிரூபிக்கப்பட்டது. இது கண்டு ஸ்ரீ தீக்ஷிதர் அவர்கள் தன்னிடத்தில் நம்பிக்கை கொண்டார் என்பது வ்ருத்தாந்தம்.

## ஆத்மார்ப்பணம்

ஆத்மார்ப்பணம் என்பது பக்தியின் பராகாஷ்டை.

श्रवणं कीर्तनं शंभोः स्मरणं पादसेवनम् ।
अर्चनं वन्दनं दास्यं सख्यमात्मनिवेदनम् ।।

**ஶ்ரவணம் கீர்தனம் ஶம்போ⁴: ஸ்மரணம் பாத³ஸேவனம் ।**
**அர்சனம் வந்த³னம் தா³ஸ்யம் ஸக்²யமாத்மநிவேத³னம் ॥**

என்ற **नव நவ** பக்தியில் இறுதியான பரிபக்குவ நிலை. பக்தியினால் முக்தி என்பது ஆத்மார்ப்பணத்தின் மூலம்தான். ஸ்ரீ தீக்ஷிதர் அவர்கள் கர்மாவினாலும் ஞானத்தினாலும் பக்தியினாலும் முக்திக்கு அர்ஹர்கள் ஆனவர்கள் என்பதை நாம் தெரிந்து கொள்கிறோம். ஆத்மார்ப்பணத்தைவிட மேலான ஸ்தோத்திர கிரந்தம் இருக்க முடியாது. இது முக்தியையே பலமாக அபேட்சிக்கிறது. நான் என்ற **अहं அஹம்** பாவனை முற்றிலும் அற்றுப்போன பக்தனின் பக்குவ நிலையை இது வெளியிடுகிறது. இந்த நிலையை அடைவது வெகு அரிது. உலகத்தில் ஈச்வர பக்தனின் பக்குவ நிலையை இது வெளியிடுகிறது. இந்த நிலையை அடைவது வெகு அரிது. உலகத்தில் ஈச்வர பக்தர்கள் பகவானுக்குப் பூஜை அபிஷேகம் நைவேத்யம் முதலியன செய்கிறார்கள். மனதையும் பகவானிடம் வைத்து விடுகிறார்கள். பகவானும் பக்தர்களுக்குப் பல விதமான சிரேயஸ்ஸுகளைக் கொடுக்கிறார். ஆனால் இந்த விதமான பக்திக்கும் ஆத்மார்ப்பணத்திற்கும் மலைக்கும் மடுவிற்கும் போல் வித்யாசம் இருக்கிறது. ஆத்மார்ப்பணம் செய்கிறவனுக்கு ஒருவிதமான பற்றும் கிடையாது. அவன்

இந்திர பதவியையும் வேண்டான். சந்திர பதவியையும் வேண்டான். பிரும்மதேவ னின் பெருமையையும் வேண்டான். அவன் வேண்டுவது ஆத்ம சுகம்; நித்யாநந்தம். அது ஸம்ஸாரக்கடலின் கரையைக்கண்டவர்க்குத்தான் கிட்டும். இதைச் சொல்லுகி றார் ஸ்ரீ நீலகண்ட தீக்ஷிதர்.

**नाहं यांचे पदमुडुपतेर्नाधिकारं मघोनः**
**नापि ब्राह्मीं भुवनगुरुतां का कथाऽन्यप्रपञ्चे ।**
**अन्यस्यान्यः श्रियमभिलषन्नस्तु कस्तस्य लोको**
**मह्यं शंभो दिश मसृणितं मामकानन्दमेव ॥**

**நாஹம் யாஞ்சே பத3முடு3பதேர்நாகி4காரம் மகோ4ன:**
**நாபி ப்3ராஹ்மீம் பு4வனகு3ருதாம் கா கதா2(அ)ன்யப்ரபஞ்சே ।**
**அன்யஸ்யான்ய: ஶ்ரியமபி4லஷன்னஸ்து கஸ்தஸ்ய லோகோ**
**மஹ்யம் ஶம்போ4 தி3ஶ மஸ்ருணிதம் மாமகானந்த3மேவ ॥**

ஸாதாரணமாய் யாவரும் பிரார்த்திப்பது அன்னம் வஸ்திரம் ஆச்ரயம் தான்யம் ஐச்வரியம் ஆரோக்யம் ஆயுள் இவைகள் தான்.

ப்ருஹ்மாபர்யந்தம் தேவர்களும் தங்களுக்குத் தகுந்தபடி ஆதிக்கத்தையும் பெருமையையும் தான் விரும்புகிறார்கள். இவை அனைத்தும் துச்சம் என்று எண்ணி மாயையின் மறைப்பினால் விலகியிருக்கும் ஆத்ம ஸுகத்தையே அபேக்ஷிக்கிற வன் ஒருவன் இருந்தால் அவன் ப்ருஹ்மாதி தேவர்களுக்கும் மேற்பட்டவனன்றே. அவன் பரமேச்வரனுடன் ஒன்றாகக் கலக்க அர்ஹதை உள்ளவனான படியால் அவனைப் பரமேச்வரனின் பங்காளி என்கிறார் ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர்.

**भुंक्षे गुप्तं बत सुखनिधिं तात साधारणं स्वं**
**मिक्षावृत्तिं परममिनयन् मायया मां विभज्य ।**
**मर्यादायाः सकलजगतां नायकः स्थापकस्त्वं**
**युक्तं किं तद्वद विभजनं योजयस्वात्मना माम् ॥**

**பு4ங்க்ஷே கு3ப்தம் ப3த ஸுக2நிதி4ம் தாத ஸாதா4ரணம் ஸ்வம்**
**மிக்ஷாவ்ருத்திம் பரமமிநயன் மாயயா மாம் விப4ஜ்ய ।**
**மர்யாதா3யா: ஸகலஜக3தாம் நாயக: ஸ்தா2பகஸ்த்வம்**
**யுக்தம் கிம் தத்3வத3 விப4ஜனம் யோஜயஸ்வாத்மனா மாம் ॥**

ஜனனமரணக்லேசத்திலிருந்து தான் வேண்டியது என்ற ஒன்றிலேயே அவரு டைய ஆர்வம்.

एकोऽसि त्वं शिव जनिमामीश्वरो बन्धमुक्त्योः
केशाङ्गारावलिषु लुठतः का गतिस्त्वां विना मे ।
तस्मादस्मिन्निह पशुपते घोरजन्मप्रवाहे
खिन्नं दैन्याकरमतिभयं मां भजस्व प्रपन्नम् ॥
एतावन्तं भ्रमणनिचयं प्रापितोऽयं वराकः
श्रान्तः स्वामिन्नगतिरधुना मोचनीयस्त्वयाहम् ।
कृत्याकृत्यव्यपगतमतिर्दीनशाखामृगोऽयं
सन्ताड्यैनं दशनविकृतिं पश्यतस्ते फलं किम् ॥

**ஏகோ(அ)ஸி த்வம் ஶிவ ஜனிமாமீஶ்வரோ ப³ந்த⁴முக்த்யோ:**
**கேஶாங்கா³ராவலிஷு லுட²த: கா க³திஸ்த்வாம் வினா மே ।**
**தஸ்மாத³ஸ்மிந்த்ரிஹ பஶுபதே கோ⁴ரஜன்மப்ரவாஹே**
**கி²ன்னம் தை³ன்யாகரமதிப⁴யம் மாம் ப⁴ஜஸ்வ ப்ரபன்னம் ॥**

**ஏதாவந்தம் ப்⁴ரமணனிசயம் ப்ராபிதோ(அ)யம் வராக:**
**ஶ்ராந்த: ஸ்வாமின்னக³திரகு⁴னா மோசனீயஸ்த்வயாஹம் ।**
**க்ருத்யாக்ருத்யவ்யபக³தமதிர்தீ³னஶாகா²ம்ருகோ³(அ)யம்**
**ஸந்தாட்³யைனம் த³ஶனவிக்ருதிம் பஶ்யதஸ்தே ப²லம் கிம் ॥**

ஸ்ரீதீக்ஷிதர் அவர்கள் ஆத்மார்பணம் செய்யும் முக்கிய சுலோகம் பின் வருமாறு. அதில் தன்னையும் தன்னுடையதுகளையும் ஈச்வரனிடம் அர்ப்பணம் செய்து கொள்கிறார்.

अद्यैव त्वत्पदनलिनयोरर्पयाम्यन्तरात्मन्
आत्मानं मे सह परिकरैरद्रिकन्याधिनाथ ।
नाहं बोद्धुं तव शिव पदं न क्रिया योगचर्याः
कर्तुं शक्नोम्यनितरगतिः केवलं त्वां प्रपद्ये ॥

**அத்³யைவ த்வத்பத³நலினயோரர்பயாம்யந்தராத்மன்**
**ஆத்மானம் மே ஸஹ பரிகரைரத்³ரிகன்யாதி⁴நாத² ।**
**நாஹம் போ³த்³து⁴ம் தவ ஶிவ பத³ம் ந க்ரியா யோக³சர்யா:**
**கர்தும் ஶக்னோம்யநிதரக³தி: கேவலம் த்வாம் ப்ரபத்³யே ॥**

இந்த ஸமர்ப்பணத்திற்கு ஆனந்தஸாகரஸ்தவத்தில் ஸ்ரீ நீலகண்ட தீக்ஷிதர் வியாக்யானம் செய்திருக்கிறார். **सह परिकरैः ஸஹ பரிகரை:** என்பதால் ஸ்ரீ

தீக்ஷிதர் வம்சத்தில் பிறக்கும் ஸகல ஸந்ததிகளையும் தன்னுடன் சேர்த்து அடைக்கலமாக அன்றே ஈச்வரனிடம் ஒப்புவித்து விட்டார் என்கிறார்.

**त्वय्यर्पितं प्रतममप्पययज्वनैव**
**स्वात्मार्पणं विदधता स्वकुलं समस्तम् ।**
**का त्वं महेशि कुलदासमुपेक्षितुं मां**
**को वाऽनुपासितुमहं कुलदेवतां त्वाम् ॥**

**த்வய்யர்பிதம் ப்ரத2மமப்பயயஜ்வநைவ**
**ஸ்வாத்மார்பணம் வித3த4தா ஸ்வகுலம் ஸமஸ்தம் ।**
**கா த்வம் மஹேஶி குலதா3ஸ முபேக்ஷிதும் மாம்**
**கோ வாநுபாஶிதுமஹம் குலதே3வதாம் த்வாம் ॥**

சரணாகதிக்குப்பின் என்னைப்பற்றிய கவலை எனக்கில்லை என்றும் அந்தக் கவலை அம்பிகையைச் சேர்ந்ததென்றும் சொல்லுகிறார், தேவியிடம் சரணாகதி செய்த அந்த தேவீ பக்தர்.

**ज्ञानं दिशेयमुत तेन विनोद्धरेयं**
**प्रारब्धमप्यपलपेयमुतानुरुन्ध्याम् ।**
**इत्थं सकृत्प्रपदनैकवशंवदाया**
**मातुर्मयि प्रववृते महतीह चिन्ता ॥**

**ஜ்ஞானம் தி3ஶேயமுத தேன விநோத்3த4ரேயம்**
**ப்ராரப்3த4மப்யபலபேயமுதானுருந்த்4யாம் ।**
**இத்த2ம் ஸக்ருத்ப்ரபத3னைகவஶம்வதா3யா**
**மாதுர்மயி ப்ரவவ்ருதே மஹதீஹ சிந்தா ॥**

**बन्धं हरिष्यसि सुखं वितरिष्यसीति**
**निश्चप्रचं निखिलमम्ब तदास्त एव ।**
**संप्रत्यहं त्वयि निधाय भरं समस्तं**
**यन्निवृणोमि किमितोऽपि ममापवर्गे ॥**

**ப3ந்த4ம் ஹரிஷ்யஸி ஸுக2ம் விதரிஷ்யஸீதி**
**நிஶ்சப்ரசம் நிகி2லமம்ப3 ததா3ஸ்த ஏவ ।**
**ஸம்ப்ரத்யஹம் த்வயி நிதா4ய ப4ரம் ஸமஸ்தம்**
**யந்நிவ்ருணோமி கிமிதோ(அ)பி மமாபவர்கே3 ॥**

இந்த பிரபத்தி எங்கள் குலபரம்பரை சொத்து என்கிறார் சாந்தி விலாசத்தில்.

**आगर्भादाकुलपरिबृढादाचतुर्वक्त्रतोऽपि**
**त्वत्पादाब्जप्रपदनपरान् वेत्सि नश्चन्द्रमौले ।**
**मायायाश्च प्रपदनपरेष्वप्रवृत्तिं त्वमात्थ**
**स्वामिन्नेव सति यदुचितं तत्र देवः प्रमाणम् ।।**

**ஆக³ர்பா⁴தா³குலபரிப்³ருடா⁴தா³சதுர்வக்த்ரதோ(அ)பி**
**த்வத்பாதா³ப்³ஜப்ரபத³னபரான் வேத்ஸி நஶ்சந்த்³ரமௌலே ।**
**மாயாயாஶ்ச ப்ரபத³னபரேஷ்வப்ரவ்ருத்திம் த்வமாத்த²**
**ஸ்வாமின்னேவ ஸதி யது³சிதம் தத்ர தே³வ: ப்ரமாணம் ॥**

ஒரு மனிதன் தன் வாழ்நாளில் செய்யவேண்டியது ஆத்மார்ப்பணம் தான் என்பது இந்த மஹான்களின் உதாஹரணத்தினால் விளங்குகிறது.

மேலே குறிப்பிடப்பட்ட சிவானந்தயோகி (காளஹஸ்தியில் வஸித்துவந்தவர்) திருநெல்வேலி ஜில்லா கடையம் என்ற ஊரில் பிறந்தவர். அவர் ஆத்மார்ப்பண ஸ்துதிக்கு ஒரு வியாக்கியானம் செய்திருக்கிறார். அது மிகவும் விரிவானது. ச்ருதி ஸ்மிருதி சைவ ஆகமங்கள் புராணங்கள் இவைகளிலிருந்து மேற்கோள்களுடன் கூடியது. அது ஒருதரம் காசியில் அச்சிடப்பட்டுப் பிறகு இப்போது கிடைக்காததாக ஆகிவிட்டது. இந்த மஹானின் வியாக்கியானத்தை அனுசரித்து நான் என்னுடைய பதவுரை, கருத்துரை, விரிவுரைகளை எழுதியிருக்கிறேன்.

இதையே ஆங்கிலத்தில் எழுதி ரிஷீகேசத்தில் வஸிக்கும் ஸ்ரீசிவாநந்த ஸரஸ்வதி அவர்களின் Yoga Vedanta Forest University Journal - ல் சமீபகாலத்தில் பிரசாரம் செய்திருக்கிறேன். அதுவும் கூடிய சீக்கிரத்தில் புஸ்தகரூபமாய் வெளி வரும் என்று எதிர் பார்க்கப்படுகிறது. இந்தத்தமிழ் மொழி பெயர்ப்பை வெளியிட அச்சுக்கு பிரதி எழுதிக்கொடுத்து எனக்கு உதவி செய்த சிரோமணி K. ராஜகோபால சாஸ்திரிகளுக்கு என் நன்றி உரியதாகும்.

இதை ஸ்ரீ கோசஸ்தானத்தில் வெளியிடுவதின் மூலம் ஸ்ரீமத் ஆசார்யாளின் அனுக்கிரஹத்திற்கு நான் பாத்திரமாவது என்னுடைய பாக்கியம்.

**ய. மகாலிங்க சாஸ்த்ரி**.

மாயூரம் 9-1-1956.

॥ श्रीगुरुयो नमः ॥

# ॥ आत्मार्पणस्तुतिः ॥

(श्रीमदप्पय्यदीक्षित विरचिता)

# ஆத்மார்பண ஸ்துதி

(அப்பய்ய தீக்ஷிதர் எழுதியது)

## * देवदेव प्रभावकथनम् *

**कस्ते बोधुं प्रभवति परं देवदेव प्रभावं**
**यस्मादित्थं विविधरचना सृष्टिरेषा बभूव ।**
**भक्तिग्राह्यस्त्वमसि तदपि त्वामहं भक्तिमात्रात्**
**स्तोतुं वाञ्छाम्यतिमहदिदं साहसं मे सहस्व ॥ १ ॥**

## * தே3வதே3வ ப்ரபா4வகத2னம் *

**கஸ்தே போ3த்3து4ம் ப்ரப4வதி பரம் தே3வதே3வ ப்ரபா4வம்**
**யஸ்மாதி3த்த2ம் விவித4ரசனா ஸ்ருஷ்டிரேஷா ப3பூ4வ ।**
**ப4க்திக்3ராஹ்யஸ்த்வமஸி தத3பி த்வாமஹம் ப4க்திமாத்ராத்**
**ஸ்தோதும் வாஞ்சா2ம்யதிமஹதி3த3ம் ஸாஹஸம் மே ஸஹஸ்வ ॥ 1 ॥**

**(பதவுரை)** இந்த சுலோகம் மஹாதேவனின் பெருமையைக் கூறுகிறது.

| | | |
|---|---|---|
| **தே3வதே3வ** | = | தேவர்களுக்குள் சிரேஷ்டனே, |
| **யஸ்மாத்** | = | எவரிடமிருந்து |
| **இத்யம்** | = | (இந்திரஜாலம் போல) எங்கும் காணப்படுகிற (விசித்திரமான) |
| **விவித4ரசனா** | = | பற்பல அமைப்புகளோடு கூடின, |
| **ஏஷா** | = | ப்ரத்யக்ஷமான இந்த, |
| **ஸ்ருஷ்டி** | = | சிருஷ்டி காரியமான உலகமானது, |
| **ப3பூ4வ** | = | உண்டாயிற்றோ (அப்படிப்பட்ட), |
| **தே** | = | உம்முடைய, |
| **பரம்பா4வம்** | = | மேலான மஹிமையை, |
| **போ3த்து4ம்** | = | அறிவதற்கு, |
| **க: ப்ரப4வதி** | = | (தேவர்களிலும், மனிதர்களிலும்) யார் சக்தியுள்ளவனாகிறான்? |
| **தத3பி** | = | அப்படி இருந்தபோதிலும், |

| | | |
|---|---|---|
| **இஹ** | = | இங்கு, |
| **த்வம்** | = | நீர், |
| **ப[4]க்திக்[3]ராஹ்யம்** | | |
| **அஸி** | = | பக்தியினால் அறியக் கூடியவராக இருக்கிறீர், |
| **தத்** | = | ஆகையினால், |
| **அஹம்** | = | நான், |
| **த்வம்** | = | உம்மை, |
| **ப[4]க்தி மாத்ராத்** | = | பக்தியை முன்னிட்டே, |
| **ஸ்தோதும்** | = | ஸ்தோத்திரம் செய்ய, |
| **வாஞ்சாமி** | = | விரும்புகிறேன், |
| **மே** | = | என்னுடைய, |
| **அதி மஹத்** | = | மிகப் பெரிய, |
| **இத[3]ம்** | = | இந்த, |
| **ஸாஹஸம்** | = | துணிச்சலை, |
| **ஸஹஸ்வ** | = | பொறுத்துக் கொள்ளும், |

**(கருத்துரை)** இந்த விசித்திரமான பிரபஞ்சத்தைப் படைத்தவரும் தேவர்களுக்குள் முதல்வனுமான உன் அபாரமான மஹிமைகளை யாரால் தான் அறிய முடியும்? ஆயினும்

**अनन्यचेताः सततं यो मां स्मरति नित्यशः ।**
**तस्याहं सुलभः पार्थ नित्ययुक्तस्य योगिनः ॥**

**அனன்ய சேதாம் ஸததம் யோ மாம் ஸ்மரதி நித்யஸாம்: |**
**தஸ்யாஹம் ஸுலப: பார்த[2] நித்ய யுக்தஸ்ய யோகி[3]ன: ||**

என்ற கீதா வாக்கியப்படி பக்தர்களுக்கு அந்த ஈசுவரனும் சுலபர் ஆகிவிடுகிற படியால் பக்தியையே முன்னிட்டு நான் உம்மை ஸ்துதி செய்யப் போகிறேன். என் துணிச்சலைப் பொறுத்துக் கொள்ளவேண்டும்.

**कथ्यं कविं कल्पकं कामरूपं तुष्टुवांसोऽमृतत्वं भजन्ते**

**கத்[2]யம் கவிம் கல்பகம் காமரூபம் துஷ்டுவாம் ஸோம்ருதத்வம் ப[4]ஜந்தே**

என்ற வேதம் உன்னை எந்தவிதத்திலாவது ஸ்துதி செய்யும்படி என்னைத் தூண்டுகிறது.

**(விசேஷவுரை)**

**ढीव्यन्तीति देवाः विष्णवादयः तेषामपि सासकत्वात् देवदेवः ।**
**तथा च श्रुतिः तस्य भासा सर्वमिदं विभाति ।**

**திவ்யந்திதி தே³வா: விஷ்ணவாத³ய:**
**தேஷாமபி ஸாஸகத்வாத் தே³வ தே³வ: ।**
**ததா² ச ஷ்ருதி: தஸ்ய பா⁴ஸா ஸர்வமித³ம் விபா⁴தி ।**

அவனே முதல்வன் என்பது

**ते देवा रुदंमबुवन को भवानिति ।**
**सोऽब्रवीदहमेक: प्रथममासं वर्तामि च**
**भविष्यामि नान्य: कस्यन मतो व्यातिरिक्तं**

**தே தே³வா ருத்³ரமப்³ருவன் கோ ப⁴வாநிதி ।**
**ஸோப்³ரவித³ஹமேக: ப்ரத⁴மமாஸம் வர்தாமி ச**
**ப⁴விஷ்யாமி நான்ய: கஸ்சன மதோ வ்யதிரிக்தம்:**

என்ற வேதவாக்யங்களால் புலப்படும். ஈசன் பக்தி யோகத்தினால் சுலபர் என்பது

त्यानेन व्रुणुते यो माम् सर्वदाहं व्रुणोमि तमू
**த்⁴யானேன வ்ருணுதே யோ மாம் ஸர்வதா³ஹம் வ்ருணோமிதம்**

என்ற ஈசுவரகீதா வாக்யத்தினால் தோன்றும். ஸ்துதிக்க வேண்டும் என்பது

**स्तुहि श्रुतं गत्सदं युवानमं तुष्टुवां लोऽम्रतत्वं भजन्ते |**
**ஸ்துஹி ஷ்ருதம் க³ர்தஸத³ம் யுவானம் துஷ்டுவான் லோऽமுதத்வம் ப³ஜந்தே ।**

இம் மாதிரியான வேத வாக்யங்களால் தெளிவுபடுத்தப்படுகிறது.

### * जगत्स्त्रष्टृस्वरूपविचार: *

**क्षित्यादीनामवयववतां निश्चितं जन्म तावत्**
**तन्नास्त्येव क्वचन कलितं कर्त्रधिष्ठानहीनम् ।**
**नाधिष्ठातुं प्रभवति जडो नाप्यनीशच भाव:**
**तस्मादाद्यस्त्वमसि जगतां नाथ जाने विधाता ॥ २ ॥**

### * ஜக³த்ஸ்த்ரஷ்ட்ரு’ஸ்வரூபவிசார: *

**க்ஷித்யாதீ³நாமவயவவதாம் நிஸ்சிதம் ஜன்ம தாவத்**
**தன்னாஸ்த்யேவ க்வசன கலிதம் கர்த்ரதி⁴ஷ்டா²னஹீனம் ।**
**நாதி⁴ஷ்டா²தும் ப்ரப⁴வதி ஜடோ³ நாப்யனீஸ்ச பா⁴வ:**
**தஸ்மாதா³த்³யஸ்த்வமஸி ஜக³தாம் நாத² ஜானே விதா⁴தா ॥ 2 ॥**

**(பதவுரை)** இது உலகத்தை படைத்தவரின் சொரூபத்தை விரித்துரைக்கிறது.

| | | |
|---|---|---|
| **நாத**[2] | = | ஹே ஸ்வாமி, |
| **அவயயவவதாம்** | = | பலவித உறுப்புக்களின் சேர்க்கை ரூபமான, |
| **க்ஷித்யாதீ**[3]**னாம்** | = | பூமி முதலிய படைக்கப்பட்ட பதார்த்தங்களுக்கு, |
| **ஜன்ம** | = | உற்பத்தி என்பது, |
| **நிச்சிதம் தாவத்** | = | அவசியம் ஒப்புக்கொள்ளப்பட வேண்டியதே, |
| **தத்** | = | அவ்வுற்பத்தியோ வெனில், |
| **க்வசன்** | = | ஓரிடத்திலும், |
| **கர்த்ரதி**[4]**ஷ்டானஹீனம்** | = | உற்பத்தி செய்பவன், உற்பத்திக்கு ஆதாராமாயுள்ள பொருள் என்ற இவ்விரண்டும் இல்லாததாக, |
| **நாஸ்த்யேவ கலிதம்** | = | அறியப்பட்டதே கிடையாது, |
| **ஜட**[4]**:** | = | அசேதனமான எந்தப் பதார்த்தமும், |
| **அதி**[4]**ஷ்டாதும்** | = | உற்பத்தியை நிறைவேற்ற, |
| **ந ப்ரப**[4]**வதி** | = | திறமையுள்ளதாக ஆகாது. (அப்படியே) |
| **அனீஸ:** | = | தனக்கு ஸ்வாதந்தர்யமில்லாத, |
| **பா**[4]**வ:** | = | எந்த சேதனனும், |
| **ந ப்ரப**[4]**வதி** | = | அந்தத் தொழிலை நடத்த) திறமையுள்ளவனாக ஆக மாட்டான், |
| **தஸ்மாத்** | = | ஆகையினால் (கடைசியாக யோசித்துப் பார்த்தால்). |
| **ஆத்**[4]**ய:** | = | இந்த பிரபஞ்ச ஸ்ருஷ்டிக்கும் முதல்வனான, |
| **த்வம்** | = | நீயே, |
| **ஜகதாம்** | = | உலகங்களுக்கு, |
| **விதா**[4]**தா** | = | ஸ்ருஷ்டி கர்த்தாவாக, |
| **அஸி** | = | இருக்கிறாய் (என்றும்), |
| **ஜானே** | = | நான் ஊகிக்கிறேன். |

**(கருத்துரை)** ஒரு குடம் கர்த்தாவான குயவனாலும் அதிஷ்டானமாகிற மண்ணினாலும் உண்டாகிறது. அதுபோல இந்த பிரபஞ்ச ஸ்ருஷ்டிக்கும் ஒரு கர்த்தா வும் அதிஷ்டானமும் அவசியம் தேவை. ஜடபதார்த்தம் சேதனனின் ஸம்பந்தமில்லா விடில் உருமாறாது. ஆனால் யாராவது ஒரு சேதனன் இந்தப் பிரபஞ்ச சிருஷ்டியை செய்திருக்கலாமோவென்றால், தன்னுடைய கர்ம பலன்களுக்குக் கட்டுப்பட்ட எந்தச் சேதனனும் இதைச் செய்திருக்க முடியாது. மாயையும் ஜடமாதலால் அதனாலும் இந்தக் காரியம் இயலாது. ஆகையினால் எல்லாவற்றிற்கும் முதல்வனாயும், ஸ்வயம் ஸர்வ சக்தியுடையவனுமாகிய நீயே இந்த லோகத்தின் ஸ்ருஷ்டி கர்த்தா என்பதற்கு என்ன சந்தேகம்.

**(விசேஷவுரை)**

**कालः स्वभावो नियतिर्यदृच्छा भूतानि योनिः पुरुष इति चिन्त्या ।**
**संयोग एषां न त्वात्मभावादात्माप्यनीशः सुखदुःखहेतोः ॥**
**प्रकृतिश्च प्रतिज्ञादृष्टान्तानुपरोधात्**

**கால: ஸ்வபா⁴வோ நியதிர்யத்³ருச்சா² பூ⁴தானி யோனி: புருஷ இதி சிந்த்யா ।
ஸம்யோக³ ஏஷாம் ந த்வாத்மபா⁴வாதா³த்மாப்யநிஶ: ஸுக²து³க்²க² ஹேதோ: ॥
ப்ரக்ருதிஶ்ச ப்ரதிஜ்ஞாத்³ருஷ்டாந்தானுபரோதா⁴த்**

என்ற உபநிஷத், ப்ரம்ம சூத்திரம் முதலியன காலம் முதலியன சிருஷ்டி கர்த்தாவாகமாட்டா என்பதைத் தெரிவிக்கின்றன.

**ततः प्रथमसृष्टेस्तु सम स्तोपाधिवर्जितः ।
कर्ता महेश एवेष्टः प्रवृत्ताशेषशक्तिकः ॥
शिवात्सत्यपरानन्दप्रकाशैकस्वलक्षणात् ।
आविर्भूतमिदं सर्वे चेतनाचेतनात्मकम् ॥
सर्वेश्वर्यसंपन्नः सर्वेश्वरः शम्भुरा काशमध्ये,**

**தத: ப்ரத²மஸ்ருஷ்டேஸ்து ஸமஸ்தோபாதி⁴வர்ஜித: ।
கர்தா மஹேஶ ஏவேஷ்ட: ப்ரவ்ரு'த்தாஶேஷஶக்திக: ॥
ஶிவாத்ஸத்யபரானந்த³ப்ரகாஶைகஸ்வலக்ஷணாத் ।
ஆவிர்பூ⁴தமித³ம் ஸர்வே சேதனாசேதனாத்மகம் ॥
ஸர்வேஶ்வர்யஸம்பன்ன: ஸர்வேஶ்வர: ஶம்பு⁴ரா காஶமத்⁴யே,**

என்ற ஸூதஸம்ஹிதா வாக்யம், உபநிஷத் முதலியன சிவனே ஸ்ருஷ்டி கர்த்தா ஸகல சக்தி வாய்ந்தவன் என்பதை விளக்கிக் கூறுகின்றன.

### * सर्वदेवोत्तरत्वकथनम् *

**इन्द्रं मित्रं वरुणमनिलं पद्मजं विष्णुमीशं
प्राहुस्ते ते परमशिव ते मायया मोहितास्त्वाम् ।
एतैः सार्धं सकलमपि यच्छक्तिलेशे समाप्तं
स त्वं देवः श्रुतिषु विदितः शम्भुरित्यादिदेवः ॥ ३ ॥**

### * ஸர்வதே³வோத்தரத்வகத²னம் *

**இந்த்³ரம் மித்ரம் வருணமனிலம் பத்³மஜம் விஷ்ணுமீஶம்
ப்ராஹுஸ்தே தே பரமஶிவ தே மாயயா மோஹிதாஸ்த்வாம் ।
ஏதை: ஸார்த⁴ம் ஸகலமபி யச்ச²க்திலேஶே ஸமாப்தம்
ஸ த்வம் தே³வ: ஶ்ரதிஷு விதி³த: ஶம்பு⁴ரித்யாதி³தே³வ: ॥ 3 ॥**

(பதவுரை) இந்த சுலோகம் எல்லா தேவர்களிலும் நீ மேலானவன் என்பதைக் கூறுகின்றது.

| | | |
|---|---|---|
| **தே** | = | உன்னுடைய |
| **மாயயா** | = | மாயையினால், |
| **மோஹிதா:** | = | கலக்கப்பட்ட, |
| **தே தே** | = | அந்தந்த மதாபிமானிகள், |
| **ஹே பரமஶிவ** | = | ஹே பரமேச்வர, |
| **த்வம்** | = | (ஜகத் காரணமாகிய) உன்னை, |
| **இந்த்[3]ர** | = | இந்திரன். |
| **மித்ர** | = | சூரியன், |
| **வருணன்** | = | வருணன், |
| **அனிலன்** | = | வாயு, |
| **பத்மஜம்** | = | ப்ரம்மா, |
| **விஷ்ணு** | = | விஷ்ணு, |
| **ஈஷாம்** | = | ருத்திரன் என்றும், |
| **ப்ராஹு** | = | சொல்லுகிறார்கள், |
| **ஏதை: ஸார்த4** | = | இவர்களோடு சேர்ந்து, |
| **ஸகலமபி** | = | மற்றெல்லாமும், |
| **யச்ச[2]க்திலேஶே** | = | எவருடைய சக்தியின் சிறு பகுதியில், |
| **ஸமாத்தம்** | = | அடங்கி விடுகிறதோ, |
| **ஶ்ரதிஷு** | = | வேதங்களில், |
| **ஶம்பு[4]: இதி** | | |
| **விதி[3]தம்** | = | சம்பு என்று பிரகாசப்படுத்தப்பட்ட, |
| **ஆதி[3]தே[3]வ:** | = | சகல தேவர்களுக்கும் முதன்மையான, |
| **ஸ தே[3]வ:** | = | அந்தக் கடவுள், |
| **த்வம்** | = | நீயே. |

**(கருத்துரை)** உன் மாயையினால் மோஹமடைந்த பற்பல ஜகத் காரணவாதிகள் ஸ்வர்க்கத்திற்கதிபதியான இந்திரனையும், உலகத்திற்கு உஷ்ணத்தையும் வெளிச்சத்தையும் தரும் சூரியனையும், பாபங்களைப் போக்கும் ஸமுத்ராதிபதியான வருணனையும், பலவானாகிய வாயுவையும், ப்ரம்மா விஷ்ணு ருத்திரன் முதலியவர்களையும் உலகத்தின் ஸ்ருஷ்டி கர்த்தாவாகச் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் மேற்கூறிய தேவதைகள் எல்லோரும் உன் மகிமையின் ஒரு திவிலைக்குள் அடங்கிப்போனவர்கள். வேதங்களால் குறிப்பிடப்பட்ட ஆதியான பரம்பொருள் சிருஷ்டிக்கும் காரணம் பரமசிவமாகிய நீயே.

**(விசேஷவுரை)**

**स्त्रीपुम्नपुम्सकादित्वाज्जगतः कार्यढशनात् |**
**अस्ति कर्ता स त्वैत्त जत्यस्मात् प्रपुर्हरः**

**ஸ்த்ரீபும்நபும்ஸகாதி[3]த்வாஜ்ஜகதம்: கார்யத[3]ர்ஷனாத் |**
**அஸ்தி கர்தா ஸ த்வைத்த ஜத்ய மாத் ப்ரபு[4]ர்ஹர:**

என்ற ரௌரவாகமத்திலுள்ள சிவஜ்ஞான போத ஸூத்ரம் சிவனே கர்த்தா என்பதைத் தெளிவுபடுத்துவதாகும்.

**वित्वादात्यासितं विश्वं विश्ववित्कर्तृ पूर्वकम् ।**
**कार्यत्वादनयोः सिद्धं काय कुम्भादिकं यथा ॥**
**अचेतनस्य मायादेः प्रवर्तकतया पतिः ।**
**सिद्धः सर्वार्थविकर्ता व्यापकः सततोदितः ॥**

**விஶ்வம் விஶ்வவித்கர்த்ரு பூர்வகம் ।**
**கார்யத்வாத³னயோः ஸித்³த⁴ம் காய கும்பா⁴தி³கம் யதா² ॥**
**அசேதனஸ்ய மாயாதே³ः ப்ரவர்தகதயா பதிः ।**
**ஸித்³த⁴ः ஸர்வார்த²விகர்தா வ்யாபகः ஸததோதி³தः ॥**

என்பது முதலிய பௌஷ்கர ஆகம வாக்யங்களில் சொல்லப்பட்ட அனுமானங்களா லும் மாயை முதலியன கர்த்தா ஆகமாட்டா, ஈசனே ஜகத் கர்த்தா என்பதும் புலப் படும்.

**शिवात्त्व्यपरानन्वप्रकाशैकसवलक्षणात्**

**ஸிவாத்ஸ்த்ய பராநந்த³ ப்ரகா கஸ்வலக்ஷணாத்**

என்பது முதலிய ஸூதஸம்ஹிதா வாக்யங்களும் கவனிக்கத்தக்கன.

**जन्माधस्य यतः, सास्त्रयोनित्वात्**

**ஜன்மாத்⁴யஸ்ய யதः, ஸாஸ்த்ரயோனித்வாத்**

முதலிய வியாஸ ஸூத்திரங்களும் அவ்விடத்தில் பாஷ்யத்தில் எடுத்துக் காட்டப் பட்ட வேதவாக்யங்களும், அதன் காரணமாகத் தோன்றிய அனுமானங்களும் ஈசனே ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹார, அநுக்ரஹ திரோபாவ மென்ற பஞ்ச க்ருத்ய காரணம் என்பதை வலியுறுத்தும்.

*** श्रीसोमलोकाख्यशिवस्थानवर्णनम् ***

**आनन्दाप्धेः किमपि च घनीभावमास्थाय रूपं**
**शक्तया सार्धं परममुमया शाश्वतं भोगमिच्छन् ।**
**अध्वातीते शुचिदिवसकृत्कोटि दीप्रे कपर्दिन्**
**आद्ये स्थाने विहरसि सदा सेव्यमानो गणेशैः ॥ ४ ॥**

## * ஸ்ரீஸோமலோகாக்2யஶிவஸ்தா2னவர்ணனம் *

**ஆனந்தா3ப்தே4: கிமபி ச க4னீபா4வமாஸ்தா2ய ரூபம்**
**ஶக்தயா ஸார்த4ம் பரமமுமயா ஶாஶ்வதம் போ4க3மிச்ச2ன் |**
**அத்4வாதீதே ஶுசிதி3வஸக்ருத்கோடி தீ3ப்ரே கபர்தி3ன்**
**ஆத்3யே ஸ்தா2னே விஹரஸி ஸதா3 ஸேவ்யமானோ க3ணேஶை: || 4 ||**

**(பதவுரை)** ஸோமலோகம் என்ற சிவனுடைய ஸ்தானத்தை இந்த ச்லோகம் வர்ணிக்கிறது.

| | | |
|---|---|---|
| **கபர்தி3ன்** | = | (கங்கையோடு கூடின) ஜடையை தரித்தவரே! |
| **த்வம்** | = | நீர் |
| **ஆனந்தா3ப்3தே4** | = | ப்ரம்மானந்தப் பெருக்கின், |
| **க4நீபா4வம்** | = | உறைதலினால் ஏற்பட்டதான, |
| **கிமப ச ரூபம்** | = | இத்தன்மையானதென்று விரித்துரைக்க முடியாத ஒரு ஸ்வரூபத்தை, |
| **ஆஸ்தா2ய** | = | தரித்துக் கொண்டு, |
| **ஶக்த்யா உபயா ஸார்த4ம்** | = | உமா ஸ்வரூபமாகிய தன் சக்தியோடு கூட, |
| **பரமம்** | = | மேலான, |
| **ஶாஶ்வதம்** | = | அழிவற்ற, |
| **போ4க3ம்** | = | ஆனந்தானுபவத்தை, |
| **இச்சன்** | = | நீர் விரும்பினவராய், |
| **அத்4வாதீதே** | = | வாக்கிற்கும், மனதிற்கும் எட்டாத (பிரளயம் முதலிய மாறுதல்களுக்கு உட்படாத), |
| **ஶுசிதி3வஸக்ருத் கோடி தீ3ப்ரே** | = | கோடைக் காலத்துக் கோடி சூரியர் சேர்ந்தாற்போல் பிரகாசமாயுள்ள, |
| **அத்3யே ஸ்தா3ணே** | = | அநாதியான சிவலோகத்தில், |
| **ஸதா3** | = | எப்பொழுதும், |
| **க3ணேஶை:** | = | கணஸ்ரேஷ்டர்களால், |
| **ஸேவ்யமான** | = | உபாஸிக்கப்படுகிறவராய், |
| **விஹரஸி** | = | விளங்குகிறீர்! |

**(கருத்துரை)** முன் சுலோகத்தில் இந்திரன் முதல் மும்மூர்த்தி வரையிலுள்ள ஸகல தேவர்களும் எவருடைய சக்தி லேசத்தில் முடிவடைகின்றனரோ, வேதங்களால் உணர்ந்தோதற்கரிய அவ்வித ஆதிதேவனாகிய பரமேசுவரனுக்கு, எவ்வித ஸ்வருபம், எந்த ஸ்தானம், எவ்வித பரிவாரங்கள் என்பதை இந்த சுலோகத்தில் விரித்துரைக்கின்றார். அரூபமான பரமேசுவரனும் லோகானுக்ரஹத்தின் பொருட்டு லீலா விக்ரஹமெடுத்துக் கொள்ளுகிறார் என்பது சாஸ்திரங்களின் கொள்கை. ஜலம் உறைந்து பனிக் கட்டியாவது போல் ஆனந்த வெள்ளம் கெட்டியாகி ஸ்வரூபமானது

என்று சொல்லக்கூடியது பரமேசுவரனின் ஸ்வரூபம். அவருடைய சக்தியே உமை யாகி அவரோடு சேர்ந்தது. அவர் இருப்பதோ கோடி ஸூர்யப்ரகாசமான ஒரு ஸ்தானம். அது ஸ்ருஷ்டிக்கு முன்னால் பரமேச்வரனின் இச்சையால் ஆனது. அந்த ஸ்தானம் அத்வாக்கள் என்ற தத்துவங்களுக்கு அப்பாலுள்ளது. வர்ண, பத, மந்த்ர, புவன், தத்வ, கலா என்பன ஆறு அத்வாக்கள், மூலாதார, ஸ்வாதிஷ்டான, மணிபூர, அனாஹத, விசுத்தி, ஆஜ்ஞா என்ற இவைகளைக் கடந்தே சிவபதமடைய வேண்டிய வர் செல்ல வேண்டும். அந்த ஸ்தானத்தில் தன் அம்சம் பொருந்தின சிறந்த கணங்க ளால் ஸேவிக்கப்படுகிறார்.

**(விசேஷவுரை)**

**स एव मायापरि मोहितात्मा सरीरमास्थाय करोति सर्वम् |**
**स्त्रि यन्न पानादि विचित्रभोगैः स एव जाग्रत् परित्रुप्तिमेति ||**

**ஸ ஏவ மாயாபரி போ[4]ஹிதாத்மா ஸரீரமாஸ்தா[2]ய கரோதி ஸர்வம் |**
**ஸ்த்ரி யன்ன பாநாதி[3] விசித்ரபோ[4]ஜை[3]: ஸ ஏவ ஜாக்[3]ரத் பரித்ருஸிமேதி ||**

என்பது லீலாவிக்ரஹங்களை எடுத்துபோகாதிகளை அனுபவிக்கிறார் என்பதைக் காட்டுகிறது.

**चर्णात्वाच पदात्वाच मन्त्रात्वा भुवनात्वकः |**
**तत्वात्वाच कलात्वाच षटत्वान इमे मताः ||**

**சர்ணாத்[4]வாச பதா[3]த்[4]வாச மந்த்ராத்[4]வா புவனாத்[4]வக: |**
**தத்வாத்[4]வாச கலாத்[4]வாச ஷட[4]த்[4]வான இமே மதா: ||**

என்று ஆறு அத்வாக்கள் கிரணாகமத்தில் கூறப்பட்டுள்ளன. ஸித்தாந்த ஸாரத்தில் பதினெட்டு தத்வ பரிமாணங்கள்

**क्षमातत्वं सतकोटियोजनमपः प्रारप्य गोणात्मकं**

**க்ஷமாதத்வம் ஸதகோடியோஜனமபு: ப்ராரப்[4]ய கோ[3]ணாத்மகம்**

என்று ஆரம்பித்து விரிவாகச் சொல்லப்படுகின்றன. தந்திராகமத்தில் பிராஸாத மந்திர உத்தார படலத்தில்

**समनात्तं पाशजाल मुन्मन्यन्ते परः शिवः**

**ஸமனாத்தம் பாஸஜால முன்மன்யந்தே பர: ஷிவ:**

என்று கூறப்பட்ட இதை சிவயோகிகள் 'த்வாதசாந்த'பதம் என்று கூறுகிறார்கள். அத்வ சோதனைக்குரிய மார்க்கங்களும் முறைகளும், ஆகமங்களில் கூறப்படுகின் றன. மூலாதாரம் முதலிய ஆதாரங்களும் ஆங்காங்கு உள்ள தேவதைகளும் த்வாத சாந்தப் பெருவெளியில் பரசிவத்தின் விளக்கமும் ஆகமங்களிலேயே கண்டு கொள்க.

## * स्वस्वोचिताचारैः शिवप्रीणनम् *

त्वं वेदान्तैर्विविधमहिमा गीयसे विश्वनेतः
त्वं विप्राद्यैर्वरद निखिलैरिज्यसे कर्मभिः स्वैः ।
त्वं दृष्टानुश्र विकविषयानन्दमात्रावितृष्णैः
अन्तर्ग्रन्थिप्रविलयकृते चिन्त्यसे योगिबृन्दै ॥ ५ ॥

## * ஸ்வஸ்வோசிதாசாரை: ஶிவப்ரீணனம் *

**த்வம் வேதா3ந்தைர்விவித4மஹிமா கீ3யஸே விஶ்வனேத:**
**த்வம் விப்ராத்3யைர்வரத3 நிகி2லைரிஜ்யஸே கர்மபி4: ஸ்வை: |**
**த்வம் த்3ரு'ஷ்டானுஶ்ர விகவிஷயானந்த3மாத்ராவித்ருஷ்ணை:**
**அந்தர்க்3ரந்தி2ப்ரவிலயக்ருதே சிந்த்யஸே யோகி3ப்ருந்தை3: || 5 ||**

**(பதவுரை)** யாவரும் தங்கள் தங்கட்குரிய ஆசாரங்களால் சிவபெருமானை திருப்தி செய்விக்கின்றனர் என்று கூறுகிறார். -

| | | |
|---|---|---|
| **விஶ்வனேத:** | = | ஸர்வ லோகங்களையும் நடத்தி வைப்பவனே! |
| **த்வம்** | = | நீர், |
| **வேதா3ந்தை:** | = | உபநிஷத்துக்களால், |
| **விவித4மஹிமா** | = | பலவித பெருமை வாய்ந்தவனாக, |
| **கீ3யஸே** | = | துதிக்கப்படுகிறாய், |
| **வரத3** | = | (பக்தர்களுக்கு வேண்டிய) வரங்களை அளிப்பவனே! |
| **த்வம்** | = | நீ, |
| **விப்ராத்4யை: நிகில:** | = | பிராமணர்களாலும் மற்ற எல்லா வர்ணத்தினராலும், |
| **ஸ்வை: கர்மபி4:** | = | தங்கட்குரிய யஜ்ஞம் முதலிய கர்ம விசேஷங்களால், |
| **இஜ்யஸே** | = | திருப்தி செய்விக்கப்படுகிறாய், |
| **த்வம்** | = | நீ, |
| **த்3ரு'ஷ்டானுஶ்ர விகவிஷயானந்த3 மாத்ராவித்ருஷ்ணை:** | = | மனுஷ்ய போகங்கள், ஸ்வர்க்க போகங்கள் இவைகளினால் ஏற்படக்கூடிய ஆனந்தத்தைச் சிறிதளவும்கூட விரும்பாத வைராக்யமுடைவர்களான, |
| **யோகி3ப்3ருந்தை3:** | = | சிவயோகிகளால், |
| **அந்தர்க்3ரந்தி2 ப்ரவிலயக்ருதே** | = | சரீரத்திற்குள் (மூன்று ஸ்தானங்களில் நாடிகளின் சிக்கல்களால் ஏற்பட்டிருக்கும் முடிச்சுகள் பொருட்டு, |

**சிந்த்யஸே** = தியானத்தில் புகுத்தப்படுகிறாய்.

**(கருத்துரை)** விஷயங்கள் இருவகை. ஒன்று **दृष्टम्** **த்³ருஷ்டம்** அதாவது இவ்வுலகில் அனுபவிக்கப்படுகின்ற அன்ன பானங்களும், வீடு, பணம், பெண் பிள்ளை இவைகளும். மற்றொன்று **आनुश्रविकं** **ஆனுஷ்ரஷிகம்** - அதாவது சாஸ்திரங்களில் சொல்லப்பட்ட அப்ஸரஸ் முதலிய ஸ்வர்க்க போகங்கள். முன் சுலோகத்தில் சொன்னபடி ஈசுவரன் வாக்கிற்கும் மனத்திற்கும் எட்டாத பரசிவஸ்தானத்தில் இருப்பாராயின் அவரை நாம் உபாஸிப்பது எப்படி? உன் மஹிமைகள் உபநிஷத்துக்களால் பலவாறு போதிக்கப்படுகின்றன. வர்ண தர்மங்களைப் பரிபாலிக்கும் பிராமணர் க்ஷத்திரியர் முதலியவர்களால் நீ கர்மாவினாலேயே உபாஸிக்கப்படுகிறாய். யோகிகளோ விஷய போகங்களில் இச்சையற்றவர்களாய் உன்னை தியானம் மூலமாய் உபாஸிக்கிறார்கள். தியானத்தினால் அவர்கள் சரீரத்தினுள்ளிருக்கும் மூலாதாரம் மணிபூரம் ஆஜ்ஞாஸ்தானங்களிலிருக்கும் நாடிகளின் செடுக்குகளைத் தெறிக்கச் செய்து முக்தியை சாதித்துக் கொள்ளுகின்றனர். ஞான மார்க்கத்தினாலும் கர்ம மார்க்கத்தினாலும் யோக மார்க்கத்தினாலும் நீயே ஆராதிக்கப்பட்டு மோக்ஷ ஸாம்ராஜ்யமளிப்பவன் என்பது.

**(விசேஷவுரை)**

**त्वमसि पयसामर्णव इव**

**த்வமஸி பயஸாமர்ணவ இவ**

என்ற வாக்யம் இங்கு கவனிக்கத்தக்கது.

**अनध्वगा अध्वसु पारयिष्णवः,**
**सोऽध्वनः पारमाप्नोति, अध्वनामध्वपते श्रेष्ठस्याध्वनः पारमशीय**

**அனத்⁴வகா³ அத்⁴வஸு பாரயிஷ்ணவ:,**
**ஸோ(அ)த்⁴வன: பாரமாப்னோதி,**
**அத்⁴வநாமத்⁴வபதே ஶ்ரேஷ்ட²ஸ்யாத்⁴வன: பாரமஶீய**

முதலிய வேதவாக்யங்கள் ஷடத்வாதீதமான மோக்ஷஸ்வரூபத்தை உணர்த்துவன.

**ध्यायन्तस्त्वां कतिचन भवं दुस्तरं निस्तरन्ति**
**त्वत्पादाब्जं विधिवदितरे नित्यमाराधयन्तः ।**
**अन्ये वर्णाश्रमविधिरताः पालयन्तस्त्वदाज्ञां**
**सर्वं हित्वा भवजलनिधावेष मज्जामि घोरे ॥ ६ ॥**

**த்4யாயந்தஸ்த்வாம் கதிசன ப4வம் து3ஸ்தரம் நிஸ்தரந்தி**
**த்வத்பாதா3ப்3ஜம் விதி4வதி3தரே நித்யமாராத4யந்த: |**
**அன்யே வர்ணாஶ்ரமவிதி4ரதா: பாலயந்தஸ்த்வதா3ஜ்ஞாம்**
**ஸர்வ ஹித்வா ப4வஜலநிதா4வேஷ மஜ்ஜாமி கோ4ரே || 6 ||**

**(பதவுரை)**

| | | |
|---|---|---|
| கதிசன | = | சிலர், |
| த்வாம் | = | உன்னை, |
| த்4யாயந்த: | = | த்யானம் செய்கிறவர்களாய், |
| து3ஸ்தரம் | = | கடக்க முடியாத, |
| ப4வம் | = | ஸம்ஸாரத்தை, |
| நிஸ்தரந்தி | = | கடந்து விடுகிறார்கள், |
| இதரே | = | மற்றவர்கள் (த்யான ஸமாதியையடைய சக்தியில்லாத வர்கள்). |
| நித்யம் | = | நாள்தோறும், |
| விதி4வத் | = | முறைப்படி, |
| த்வத் பாதா3ப்ஜம் | = | உன் சரண கமலத்தை, |
| ஆராத4யந்த: | = | பூஜித்துக் கொண்டு (கடக்க முடியாத ஸம்ஸாரத்தைக் கடக்கிறார்கள்). |
| அன்யே | = | வேறு சிலர் (ஈச்வர பூஜையும் செய்ய இயலாதவர்கள்) |
| **வர்ணாஶ்ரமவிதி4ரதா:** | **=** | ஸ்மிருதிகளில் விதிக்கப்பட்ட வர்ணாஸ்ரம தர்மங்களை அனுஷ்டிப்பதில் சிரத்தை கொண்டவர்களாயிருந்து கொண்டு, |
| **த்வதா3ஜ்ஞாம்** | **=** | உன் கட்டளையை, |
| **பாலயந்த:** | = | நிறைவேற்றுகிறவர்களாய் (கடக்க முடியாத ஸம்ஸாரத் தைக் கடக்கிறார்கள்), |
| **ஏஷ: (அஹம்)** | = | இந்த நானோ, |
| **ஸர்வம் ஹித்வா** | = | (தியானம், அர்ச்சனம், ஆசார ரக்ஷணம் என்ற) எல்லா வழிகளையும் விட்டு விட்டு |
| **கோ4ரே** | = | பயங்கரமான, |
| **ப4வஜலநிதெ4ள** | = | ஸம்ஸார ஸாகரத்தில், |
| **மஜ்ஜாமி** | = | மூழ்கிறேன். |

**(கருத்துரை)** மேற்கூறிய தியானத்தினால், ஸம்ஸார ஸாகரத்தை சிலர் தாண்டுகின்றனர். சிலர் உன் மூர்த்தியை பூஜை செய்து அப்பலனை அடைகின்றனர். மற்றும் சிலர் உன் கட்டளைப்படி வர்ணாஶ்ரம தர்மங்களை வழுவாமல் நடத்தி வந்து பிறவிக் கடலிலிருந்து கரையேறுகிறார்கள். நானோ யோகிகளைப் போலத் தியானம் செய்ய முடியாதவனாய், உன் பக்தர்களைப் போல உன்னை அபிஷேகம், அர்ச்சனை, ஸ்துதி, நமஸ்காரம் முதலியன செய்து ஆராதிக்க சக்தியற்றவனாய், சிஷ்டர்களைப் போல உன் விதிகளை உணர்ந்து தர்மங்களை அனுஷ்டித்து கர்மாக்களை சிரத்தையுடன் செய்ய திறமையில்லாதவனுமாய் என் நற்கதிக்கு

யாதொரு வழியையும் தேடிக்கொள்ளாமல் இந்த பயங்கரமான ஸம்ஸாரக் கடலி லேயே மூழ்கிக் கொண்டிருக்கிறேன்.

**(விசேஷவுரை)**

**शिव एको त्येय: सर्वमन्यत्परित्यज्य |**
**त्रिसन्ध्यमहरहरभ्यर्चयेत्, मन्त्रेषु कर्माणि कवयो**
**यान्यपश्यन् तानि त्रेतायां बहुधा सन्ततानि ।**
**तान्याचरथ नियतं सत्यकामा एष च: पन्था: सुक्रुतस्य लोके ||**

**சிவ ஏகோ த்⁴யேய: ஸர்வமன்யத்பரித்யஜ்ய ।**
**த்ரிஸந்த்⁴யம் ஹரஹர ப்⁴யர்சயேத், மந்த்ரேஷு கர்மாணி கவயோ**
**யாந்ய பஶ்யன் தாநி த்ரேதாயம் ப³ஹுதா⁴ ஸந்ததாநி|**
**தான்யாசரத² நியதம் ஸத்யகாமா ஏஷ ச: பந்தா: ஸுக்ருதஸ்ய லோகே ||**

என்ற வாக்யங்கள், தியானம், ஈச்வர ஆராதனம், வர்ணாச்ரம தர்மானுஷ்டானம் என்றவைகள் நற்கதியடைய ஸாதனம் என்பதை விளக்குகின்றன.

## * स्ववंशकीर्तनम् *

**उत्पद्यापि स्मरहर महत्युत्तमानां कुलेऽस्मिन्**
**आस्वाद्य त्वन्महिमजलधेरप्यहं शीकराणून् ।**
**त्वत्पादार्चाविमुखहृदयश्चापलादिन्द्रियाणां**
**व्यग्रस्तुच्छेष्वहह जननं व्यर्थयाम्येष पापः ॥ ७ ॥**

## * ஸ்வவம்ஶகீர்தனம் *

**உத்பத்³யாபி ஸ்மரஹர மஹத்யுத்தமானாம் குலே(அ)ஸ்மின்**
**ஆஸ்வாத்³ய த்வன்மஹிமஜலதே⁴ரப்யஹம் ஶீகராணூன் ।**
**த்வத்பாதா³ர்சாவிமுக²ஹ்ருத³யஶ்சாபலாதி³ந்த்³ரியாணாம்**
**வ்யக்³ரஸ்துச்சே²ஷ்வஹஹ ஜனனம் வ்யர்த²யாம்யேஷ பாப: || 7 ||**

**(பதவுரை)** தன் வம்சத்தைப் பற்றிக் கூறுகிறார்.

| | | |
|---|---|---|
| **ஹே ஸ்மரஹர** | = | காமனைக்கண்ணால் எரித்த பகவானே! |
| **பாப:** | = | பாபியான, |
| **ஏஷ: அஹம்** | = | இந்த நான், |
| **உத்தமானாம்** | = | பெரியவர்களுடைய, |

**மஹதி**
**அஸ்மின்குலே** = உயர்ந்த பிரசித்தி பெற்ற இந்தக் குலத்தில்,
**உத்பத்[4]யாபி** = ஜனித்தும் கூட,
**த்வன்மஹிமஜலதே[4]**= உன் மஹிமையாகிய கடலின்,
**சீகராணூன்** = சிதறிய சிறு திவலைகளை,
**ஆஸ்வாத்[4]யபி** = பருகியும் கூட,
**இந்த்[3]ரியாணாம்**
**சாபலாத்** = இந்திரியங்களின் சபலத்தன்மையினால்,
**த்வத்பாதா[3]ர்சா**
**விமுக[2]ஹ்ருத[3]ய** = உன் திருவடி சேவையில் ஈடுபடாத மனமுடையவனாய்,
**துச்சேஷு** = அல்பமான விஷயங்களில்,
**வ்யக்[3]ர:** = பரபரப்பு உடையவனாக,
**ஜனனம்** = ஜன்மாவை,
**வ்யர்த்[2]தயாமி** = வீணாக்குகிறேன்,
**அஹஹ ஐயோ** = ஐயோ கஷ்டமே.

**(கருத்துரை)** ஸ்ரீமத் ஆசார்ய தீக்ஷிதர் ஸ்ரீரங்கராஜ தீக்ஷிதர் முதலிய மஹான்கள் உதித்த இந்த புனிதமான குலத்தில் நான் பிறந்தும், உன் பெருமை களைத் தெரிவிக்கும் வேத வேதாந்த புராணங்களில் ஏதோ சிறிது சிறிது கற்றறிந்தி ருந்தும் பாபியான நான் இந்திரியங்களுக்கு அடிமையாகி உன் திருவடி சேவையை மறந்து மிகவும் அற்பமான விஷய போகங்களில் ஈடுபட்டு உத்தமமான இந்த ஜன்மத்தைப் பாழ் செய்து கொள்கிறேன். ஐயோ என்ன பரிதாபம்! காமனை எரித்த பரமேசுவரா! (என் ஆசைகளை நீ எரிக்க மாட்டாயா?)

**(விசேஷவுரை)**

**क्रुतदीक्षोऽधोरमुरके कुलकूटस्थो भरद्वाज:।**
**विधेष्वरेषु कश्चन पितामहो न इति विस्त्रम्प:**

**க்ருததீ[3]க்ஷோ(அ)தோ[4]ரமுரகே குலகூடஸ்தே[2] ப[4]ரத்[3]வாஜ: |**
**வித்4யேஷ்வரேஷு கஷ்சன பிதாமஹோ ந இதி விஸ்த்ரம்ப[4]: ||**

என்றும், **श्रीकण्वठोऽवततार यस्य वपुषा, ஸ்ரீகண்டோவததாரயஸ்ய வபுஷா**, என்றும் நீலகண்ட தீக்ஷிதர் தன் பெரிய பாட்டனார் ஈச்வராவதாரம் என்பதைக் குறிப்பிடுகிறார்! மேலும் அவதார புருஷர்கள் கூட மற்ற மனிதர்களைப் போல வாழ்க்கைக் கிலேசங்களினிடையே தன்னையே நொந்து கொண்டு பரிதவிப்பதை நாம் இராமாயணம் முதலிய சரித்திரங்ககளில் காண்கின்றோம். யுத்த மத்தியில் இராமன்

**विघ्नमां दुष्कृतकर्माणं अनार्य मत्कृते ह्यसौ ।**
**लक्ष्मणः पतितः शेते शरतल्पे गतासुवत् ।**

**தி⁴நூமாம் து³ஷ்க்ருத கர்மாணம் அனார்யம் புத்க்ருதே ஹ்யஸௌ ।**
**லக்ஷ்மணः பதிதः ஶேதே ஶரதல்பே க³தாஸுவத் ॥**

என்று புலம்புவது கவனிக்கத்தக்கது. பெரியோர் தங்களை உதாஹரித்துச் சொல்லிக் கொள்ளுவது உலகத்திற்குப் பயனுண்டாம் பொருட்டேயாம். இத்தகைய ஸ்துதிகளைப் படிக்கும் ஸம்ஸாரிகள் இந்த உண்மைகளை உணர்ந்து நற்கதி யடையுமாறு இங்ஙனம் அவை குறிக்கப்பட்டிருக்கின்றன. பெரியோர் தங்கள் பெருமையை யறியார் என்பதும், சிறியோர்களே தற்புகழ்ச்சியாய் பிதற்றிக் கொள்ளு வார்கள் என்பதும் அறிவாளிகள் அறிந்த விஷயமே. மேலும் **சிவரஹஸ்யம்** என்றபுராணத்தில் சங்கர பகவத்பாதரின் அவதாரத்தைப் பற்றியும் கூறியுள்ளது.

**दीक्षितोऽपि भवेत्कश्चित् मदंशो भूसुरोऽम्बिके ।**
**भासुराचारनिरतः शैवच्छन्दोगवंशजः ।**
**शैवशास्त्रं तदा लुप्तं भूमौ विस्तारयिष्यति ।**

**தீ³க்ஷிதோ(அ)பி ப⁴வேத்கஶ்சித் மந்த³ஶோ பூ⁴ஸுரோ(அ)ம்பி³கே ।**
**பா⁴ஸுராசாரநிரதः ஶைவச்ச²ந்தோ³க³வம்'ஶஜः ।**
**ஶைவஶாஸ்த்ரம்' ததா³ லுப்தம்' பூ⁴மௌ விஸ்தாரயிஷ்யதி ।**

என்று. ஆனால் ஈச்வராம்சம் பொருந்தியவரும், மஹாபரிசுத்த சரித்ரமுடைய வரும், ஆசாரசீலரும், ஜ்ஞான வைராக்ய ஸம்பன்னரும், வித்யா ப்ரவசனத்தாலும் நூற்றுக்கதிகமான க்ரந்த கரணத்தினாலும் லோகோபகாரியும், ஸ்ரீகண்ட மத அத்வைத மத பிரதிஷ்டாபகர் என்ற பட்டம் தாங்கியவரும் ஆன இந்த மஹா புருஷ னும் ஏன் தன்னை இப்படி இழிவாழ்ய்ச் சொல்லிக் கொள்ள வேண்டும் என்றால், அத்தகையோர், ஆனதால் தான் அவ்விதம் நொந்து கொள்ளுகிறார் என்பதே பதிலாகும். மஹான்களுக்கு பிறவி என்பதே பெருந் துக்கத்தைத் தருவதாகும். அவர்களை நம்மைப்போல் ஸுகதுக்கங்கள் பாதிப்பதில்லை. ஈச்வராராதனத்திற்கும் ஆத்ம ஸ்வருபானுஸந்தானத் திற்கும் இடுக்கண்ணாயுள்ள சிறிய ஸம்ஸார பந்தங் களும் அவர்களுக்கு பொருக்க முடியாதனவாகின்றன.

**विपतो नैव विपदः संपदो नैव संपदः ।**
**स्वस्वरूपं भवेत्संपत् तदन्यत् सुधियां विपत् ॥**

**விபதோ நைவ விபத³ः ஸம்பதோ³ நைவ ஸம்பத³ः ।**
**ஸ்வஸ்வரூபம் ப⁴வேத்ஸம்பத் தத³ன்யத் ஸுதி⁴யாம் விபத் ॥**

இவ்விதமான பெரியோர்கள் தோன்றுவதனாலேயே அந்த வம்சம் உத்தமமானது என்பது தோன்றும்.

**ब्राह्मण्यं प्राप्य लोकेऽस्मिन्मूकोऽबधिरो भवेत् ।**
**नापक्रामति संसारात् स रवलु प्कुणहा पवेत् ॥**

**ப்ராஹ்மண்யம் ப்ராப்ய லே கேஸ்மிந் பூகோப$^{3}$தி$^{4}$ரோ ப$^{4}$வேத் ।**
**நாபக்ராமதி ஸம்ஸாராத் ஸ ரவலு ப்குணஹா பவேத் ॥**

என்ற வாக்கியம் நற்குலத்தில் பிறப்பதும் இந்திரியங்களைப் பெறுவதும் பிறவிக் கடலிலிருந்து கரையேறி பேரின்ப வீட்டை அடைவதற்கே என்பதையும், அவ்விதம் அடையாதவர் பாபிகள் என்பதையும் தெளிவாகக் கூறுகிறது.

## * शिवपूजासाधनसौलभ्यशंसनम् *

**अर्कद्रोणप्रभृतिकुसुमैरर्चनं ते विधेयं**
**प्राप्यं तेन स्मरहर फलं मोक्षसाम्राज्यलक्ष्मीः ।**
**एतज्जानन्नपि शिव शिव व्यर्थयन्कालमात्मन्**
**आत्मद्रोही करणविवशो भूयसाऽधः पतामि ॥ ८ ॥**

## * ஶிவபூஜாஸாத$^{4}$னஸௌலப்$^{4}$யஶம்ஸனம் *

**அர்கத்$^{3}$ரோணப்ரப்$^{4}$ருதிகுஸுமைரர்சனம் தே விதே$^{4}$யம்**
**ப்ராப்யம் தேன ஸ்மரஹர ப$^{2}$லம் மோக்ஷஸாம்ராஜ்யலக்ஷ்மீ꞉ ।**
**ஏதஜ்ஜானன்னபி ஶிவ ஶிவ வ்யர்த$^{2}$யன்காலமாத்மன்**
**ஆத்மத்$^{3}$ரோஹீ கரணவிவஶோ பூ$^{4}$யஸா(அ)த$^{4}$꞉ பதாமி ॥ 8 ॥**

(**பதவுரை**) சிவபூஜைக்குரிய ஸாதனங்கள் எளிதில் கிடைக்கக்கூடியன என்று கூறுகிறார்.

| | | |
|---|---|---|
| **ஸ்மரஹர** | = | காமனைக் கண்ணால் எரித்த பிரபுவே, |
| **அர்கத்$^{3}$ரோணப்ரப்$^{4}$ ருதிகுஸுமை** | = | எருக்கு தும்பை முதலிய (மிக எளிதில் கிடைக்கக்கூடிய) மலர்களால் |
| **தே அர்ச்சனம்** | = | உன் பூசை, |
| **விதே$^{4}$யம்** | = | நிறைவேற்றக்கூடியது, |
| **தேந** | = | அந்தப் பூஜையினால், |
| **ப்ராப்யம் ப$^{2}$லம்** | = | அடையத் தகுந்த பயனோ |
| **மோக்ஷஸாம் ராஜ்யலக்ஷ்மீ꞉** | = | (ஸர்வ பந்த நிவ்ருத்தி ஏற்பட்டு அனுபவிக்கக்கூடிய |

| | | |
|---|---|---|
| | | நித்யமான பூர்ணமான ஆனந்த ரூபமாகிய) மோக்ஷம் என்ற ஏகாதிபத்யம். |
| **ஏதத்ஜ்யான்ன அபி** | = | இதை அறிந்தவனாக இருந்தபோதிலும், |
| **கரணவிவஸோ** | = | இந்திரியங்களுக்கு அடிமைப்பட்டு, |
| **காலம்வ்யர்த²யன்** | = | காலத்தை வீணாகக் கழித்து விட்டு, |
| **ஹே ஆத்மன்** | = | எல்லா உலகிற்கும் உள்ளேயிருக்கும் ஆத்மரூபியே, |
| **ஆத்மத்³ரோஹீ** | = | (உம்மை மறந்ததினால்) ஆத்மாவிற்கு ஹிதத்தைத் தேடாத (நான்) |
| **சிவசிவ** | = | அட கஷ்டமே, |
| **பூ⁴யஸா** | = | மிக விரைவாக, |
| **அத⁴:பதாமி** | = | அதோ கதியை அடைகிறேன், |

**(கருத்துரை)** உன்னை ஆராதிப்பது அடியேனுக்கு ஒன்றும் அப்படி ஶ்ரமமான காரியமில்லை. எருக்கு தும்பை முதலிய மணமற்ற, யாரும் வேண்டாத, எங்கும் கிடைக்கக்கூடிய புஷ்பங்களால் உன்னை அர்ச்சனை செய்தால் போதும். இவ்வளவு ஸுலபமான ஆராதனைக்கு ஏற்படும் பலமோ மோக்ஷஸாம் ராஜ்யமே. இதை அறிந்திருந்தும் மோக்ஷத்தைத் தேடிக்கொள்ளாத நான் ஆத்ம த்ரோஹியாகிறேன் என்பதில் ஐயமென்ன? சிவ சிவ என்ன பரிதாபம், கான் வீணாகக் காலத்தை விஷயசபலனாகவே கழித்து வருகிறேன். அதன் பயனாக அதோகதியை அடைகிறேன். உலகத்தில் கடுமையான க்லேசத்தை அனுபவிக்கும் ஒருவன் அதினின்றும் தன்னை விடுவித்துக் கொண்டு மஹத்தான சுகத்தையும் அடைய வெகு எளிய வழியை அறிந்திருந்தும் அதற்குப் பிரயத்தினம் செய்யாமல் துக்கத்திலேயே உழன்று கொண்டிருப்பானாகில் அவன் எவ்வளவு மூடன்!

**(விசேஷவுரை)**

**दुष्करं तस्य सेवायाम् किमस्ति भुवनत्रये ।**
**नधां तु सिकता वारि सुलभं कुसुमं वने ।**
**नास्त्येव करणक्लेशः कर्तव्यः सकृदञ्जलिः ॥**
**तूर्णं शिव शिवेत्युच्चैः भजन्ति भयहारिणम् ।**
**शिवे दत्तं हुतं जप्तं फलान्नादिनिवेदनम् ।**
**एकं चाक्षय्यफलद्धं तद्विधानां न संशयः ॥**
**अन्यथा सन्तमात्मानं योऽन्यथा प्रतिपद्यते ।**
**किं तेन न कृतं पापं चोरेणात्मापहारिणा ॥**

**து³ஷ்கரம் தஸ்ய ஸேவாயாம் கிமஸ்தி பு⁴வனத்ரயே ।**
**நதா⁴ம் து ஸிகதா வாரி ஸுலப⁴ம்' குஸுமம் வனே ।**

**நாஸ்த்யேவ கரணக்லேஶ: கர்தவ்ய: ஸக்ரு’த³ஞ்ஜலி: ||**
**தூர்ண ஶிவ ஶிவேத்யுச்சை: ப⁴ஜந்தி ப⁴யஹாரிணம் |**
**ஶிவே த³த்தம் ஹுதம் ஜப்தம் ப²லாந்நாதி³நிவேத³னம் |**
**ஏகம் சாக்ஷய்யப²லடு⁴ம் தத்³விதா⁴னாம் ந ஸம்ஶய: ||**
**அன்யதா² ஸந்தமாத்மானம் யோ(அ)ன்யதா² ப்ரதிபத்³யதே |**
**கிம் தேன ன க்ருதம் பாபம் சோரேணாத்மாபஹாரிணா ||**

என்ற வாயுஸம்ஹிதை, சிவபுராணம், வேதவாக்யங்கள், சிவபூஜை எளிது, அதற்கு வேண்டிய சாதனங்கள் சுலபம், பெரும்பயனை அளிக்கவல்லது சிவபூஜை, அதைச் செய்யாதவர் பாபி என்றும் புலப்படுத்துகின்றன.

## * विषयप्रतिबन्दिनिरूपणम् *

**किं वा कुर्वे विषमविषयस्वैरिणा वैरिणाहं**
**बद्धः स्वामिन् वपुषि हृदयग्रन्थिना सार्धमस्मिन् ।**
**उक्षणा दर्पज्वरभरजुषा साकमेकत्र बद्धः**
**श्राम्यन्वत्सः स्मरहर युगे धावता किं करोतु ॥ ९ ॥**

## * விஷயப்ரதிப³ந்தி³நிரூபணம் *

**கிம் வா குர்வே விஷமவிஷயஸ்வைரிணா வைரிணாஹம்**
**ப³த்³த⁴: ஸ்வாமின் வபுஷி ஹ்ருத³யக்³ரந்தி²னா ஸார்த⁴மஸ்மின் |**
**உக்ஷணா த³ர்பஜ்வரப⁴ரஜுஷா ஸாகமேகத்ர ப³த்³த⁴:**
**ஶ்ராம்யன்வத்ஸ: ஸ்மரஹர யுகே³ தா⁴வதா கிம் கரோது || 9 ||**

**(பதவுரை)** விஷயங்கள் தடங்கலாக வுள்ளன எனக்கூறுகிறார்.

| | | |
|---|---|---|
| **ஸ்வாமி** | = | பிரபுவே |
| **விஷம விஷய ஸ்வைரிணா** | = | (கரடு முரடான பிரதேசங்களில்) துக்கத்தைத்தரக்கூடிய, இந்திரிய திருப்திக்குரிய சிற்றின்பப் பற்றுதல்களில் அடங்காமல் திமிர் கொண்டு இஷ்டம் போல் ஓடிக்கொண்டிருக்கும் |
| **வைரிணா** | = | எனக்கு விரோதியான (தீங்கிழைப்பதான) |
| **ஹ்ருத⁴யக்³ரந்தி²னா** | = | சித்தத்தில் சிடுக்குண்டாக்கியிருக்கும் துர்வாஸனையோடு |
| **ஸார்த்த⁴** | = | கூட, |
| **அஸ்மின் வபுஷி** | = | இச்சரீரமாகிற (வண்டியில்) |
| **ப³த்³த⁴:** | = | பிணைக்கப்பட்ட, |
| **அஹம்** | = | நான், |

**கிம் குர்வே** = என்னதான் செய்ய முடியும்,
**ஸ்மரஹர** = மதனனை மாய்த்தவரே,
**த³ர்பஜ்வரப⁴ரஜுஷா**= திமிர் மிகுதியினால் கொதிப்புள்ள,
**தா⁴வதா** = பாய்ந்தோடுகிற,
**உஷ்ணாஸாகம்** = காளையுடன் கூட,
ஏகத்ர யுகே3 = ஒரே நுகத்தடியில்,
**ப³த்³த⁴:** = பூட்டப்பட்ட,
**ஸ்ராம்யன் வத்ஸ:** = சிரமத்தினால் சோர்வடைந்த இளங்கன்று,
**கிம் குரோது** = என்ன செய்யக் கூடும்?

**(கருத்துரை) करण विवष: கரண விவஷ:** - என்று முன் சுலோகத்தில் கூறியதை இங்கு விரித்துரைக்கின்றார். ஸுலபமான துக்க நிவ்ருத்தி மார்க்கத்தை அறிந்திருந்தும் நான் துஷ்டத்தன முள்ள விஷய வாஸனையினால் தோற்கடிக்கப் பட்டவனானேன். பார்ப்பதற்குஸுகம் போலவும் இறுதியில் துக்கத்தைத் தருவது மான இந்திரியார்த்தங்களில் ஆவேசத்துடன் பாயும் அநேக காலவாஸனா ஜடில மான என் மனம் என்னைத் தூக்கி வாரிக் கொண்டுபோய் அனர்த்தங்களுக்கு உள்ளாக்கி விடுகிறது. நான் என்ன செய்வேன். ஒரு முறட்டுக் காளையுடன் ஒரே வண்டியில் பூட்டப் பெற்ற இளங்கன்று என்ன செய்யும்? காளை மேடுபள்ளம் பார்க் காமல் திமிரிக் கொண்டு அதிவேகமாய் ஓடவாரம்பிக்கும் போது இளங்கன்று எவ்வித பரிதாப நிலையை அடையும்? வாஸனை முடிச்சுக்களேறிய திமிர் கொண்ட என் மனத்துடன் நானும் இச்சரீரமாகிற வண்டியில் கட்டப்பட்டிருக்கிறேன். பலமற்ற நான் (ஜீவன்) துஷ்டவாஸனைகளால் அடக்க வொண்ணாத என் மனம் இழுத்த இடமெல்லாம் பரிதப்பித்துக் கொண்டே ஓடுகிறேன். என்னால் வேறு ஒன்றும் செய்ய முடியவில்லை.

**(விசேஷவுரை)**

**पराञ्चि खानि व्यत्रुणत् स्वयम्भू:**
**तस्मात् पराक् पष्यति नान्तरात्मन् ।**

**பராஂசி கா²னி வ்யத்ருணத் ஸ்வயம்பூ⁴:**
**தஸ்மாத் பராக் பஷ்யதி நாந்தராத்மன் ।**

என்ற வேதவாக்யம் இந்திரியங்கள் எப்பொழுதும் பஹிர் முகமாகவே செல்லுகின் றன என்பதையும், அவைகளை அடக்கி அந்தர்முகமாகச் செலுத்துகின்றவன் தீரன் என்றும் கூறுகிறது.

**कुर्वते कर्म भोगाय कर्म कर्तुं च भुञ्जते**
**குர்வதே கர்ம போ⁴கா³ய கர்ம கர்தும்’ ச பு⁴ஞ்ஜதே**

என்பதும் கர்மங்களைச் செய்வதிலேயே ஈடுபாட்டைக்குறிக்கிறது.

### * अनितरगतित्वाभिधानम् *

**नाहं रोद्धुं करणनिचयं दुर्नयं पारयामि**
**स्मारं स्मारं जनिपथरुजं नाथ सीदामि भीत्या |**
**किं वा कुर्वे किमुचितमिह क्वाद्य गच्छामि हन्त,**
**त्वत्पादाब्जप्रपदनमृते नैव पश्याम्युपायम् ॥ १० ॥**

### * அநிதரக$^{3}$தித்வாமிதா$^{4}$னம் *

**நாஹம் ரோதூ$^{3}$து$^{4}$ம் கரணனிசயம் து$^{3}$ர்னயம் பாரயாமி**
**ஸ்மாரம் ஸ்மாரம் ஜனிபத$^{2}$ருஜம் நாத$^{2}$ ஸீதா$^{3}$மி பீ$^{4}$த்யா |**
**கிம் வா குர்வே கிமுசிதமிஹ க்வாத்$^{4}$ய க$^{3}$ச்சா$^{2}$மி ஹந்த**
**த்வத்பாதா$^{3}$ப்$^{3}$ஜப்ரபத$^{3}$னம்ரதே நைவ பஶ்யாம்யுபாயம் || 10 ||**

**(பதவுரை)** தனக்கு வேறு கதியில்லை என்று கூறுகின்றார்.

| | | |
|---|---|---|
| **நாத$^{2}$** | = | ஸ்வாமி |
| **து$^{3}$ர்நயம்** | = | கட்டுப்பாடுகளுக்கு அடங்காத, |
| **கரணநிசயம்** | = | இந்திரியங்களை, |
| **ரோத்$^{3}$து$^{4}$ம்** | = | நான், |
| **ந பாரயாமி** | = | சக்தியற்றவனாக இருக்கிறேன், |
| **ஜநிபத$^{2}$ருஜம்** | = | ஜன்மமெடுத்தது முதல் அனுபவித்து வரும் ச்ரமத்தை, |
| **ஸ்மாரம் ஸ்மாரம்** | = | நினைக்கும் பொழுதெல்லாம், |
| **பீ$^{4}$த்யா** | = | பயத்தினால், |
| **ஸீதா$^{3}$மி** | = | நடுங்குகிறேன், |
| **ஹந்த** | = | ஐயோ!, |
| **கிம் வா குர்வே** | = | நான் என்ன செய்வேன், |
| **இஹ கிமிசிதம்** | = | இதற்கு என்ன தகுந்த பரிஹாரம்! |
| **அத்$^{4}$ய க்வ க$^{3}$ச்சாமி** | = | இப்பொழுது (இந்த சிரமத்தை நிவ்ருத்தி செய்து கொள்ளுவதற்கு) நான் எங்கே செல்லுவேன்? |
| **த்வத்பாதா$^{3}$ப் ஜப்ரபத3னம்ருதே** | = | உன் திருவடிக்கமலங்களில் அடைக்கலம் புகுவதைத் தவிர, |
| **உபாயம்** | = | வேறு வழியை, |
| **நைவ பச்யாமி** | = | நான் அறிகிலேன். |

**(கருத்துரை)** இந்த்ரிய நிக்ரஹத்தில் அசக்தனாயும் ஸம்ஸார வேதனைகளை விலக்க விரும்புகிறவனாயுமிருக்கு மெனக்கு சரணாகதியைத் தவிர வேறு கதியில்

லை என்பதைத் தெரிவிக்கிறார். ஸம்ஸாரவாழ்க்கையின் கஷ்டங்களை (ஜனனமர ணாதிகளை) நினைத்து நினைத்து பயம் கொண்டு இதிலிருந்து விடுவிக்கப்பட வேண்டும் என்று கவலை உண்டானவர்களுக்கு விஷயங்களில் இயற்கையாகவே பிரவர்த்திக்கும் இந்திரியங்களை அடக்க முடியாதது பற்றி துக்கம் ஏற்படுகிறது. துர்வாஸனைக்கு அடிமையான சித்தத்திற்கும் முக்தியை விரும்பும் ஜீவனுக்கும் ஏற்படும் போராட்டத்தில் சளையுற்ற ஜீவன் தைன்யத்துடன் ஈச்வரனை நோக்கிப் புலம்புகிறான். “என்ன செய்வேன்? எங்கு செல்வேன்? எனக்கு எது உபாயம்? ஸ்வாமி! ஒன்றும் வகையறியாத நான் உன் சரணத்தைப் பற்றிக் கொள்ளுகிறேன். எனக்கு நீர் தான் வழி காட்டவேண்டும்.” என்று.

**(விசேஷவுரை)**

**धन्याः कति त्रिभुवने परमोपभोग्यं संसारमेव परमेश्वरि भावयन्तः ।**
**आयासरूपमवबोधमिमं समेत्य क्लिश्ये कियत् कियदहं त्वमुना भवेन ॥**

**த⁴ன்யாঃ கதி த்ரிபு⁴வனே பரமோபபோ⁴க்³யம்**
**ஸம்ஸாரமேவ பரமேஶ்வரி பா⁴வயந்தঃ ।**
**ஆயாஸரூபமவபோ³த⁴மிமம் ஸமேத்ய க்லிஶ்யே கியத்**
**கியத³ஹம்' த்வமுனா ப⁴வேன ॥**

என்று நீலகண்ட தீக்ஷிதர் கூறுவதும் கவனிக்கத்தக்கது. விஷய ஸுகங்களையே நாடி நிற்பவர்களுக்கு விசாரமில்லை.

### * शिवचरणप्रपदनेन प्रसादाभ्यर्थनन् *

**उल्लङ्घयाज्ञामुडुपतिकलाचूड ते विश्ववन्द्य**
**त्यक्ताचार : पशुवदधुना मुक्तलजश्चरामि ।**
**एवं नानाविधभवततिप्राप्तदीर्घापराधः**
**क्लेशाम्भोधिं कथमहमृते त्वत्प्रसादात्तरेयम् ॥ ११ ॥**

### * ஶிவசரணப்ரபத³னேன ப்ரஸாதா³ப்⁴யர்த²னன் *

**உல்லங்க⁴யாஜ்ஞாமுடு³பதிகலாசூட³ தே விஶ்வவந்த்³ய**
**த்யக்தாசார: பஶுவத³து⁴னா முக்தலஜஶ்வராமி ।**
**ஏவம் நானாவித⁴ப⁴வததிப்ராப்ததீ³ர்கா⁴பராத⁴ঃ**
**க்லேஶாம்போ⁴தி⁴ கத²மஹம்ருதே த்வத்ப்ரஸாதா³த்தரேயம் ॥ 11 ॥**

## ஆத்மார்பண ஸ்துதி

**(பதவுரை)** சிவனுடைய தாளை வணங்கி அவனருள் வேண்டுகின்றார்.

| | | |
|---|---|---|
| **உடு3பதிகலாசூட** | = | சந்திரகலாதரனே, |
| **விஷ்வ வந்த்4ய** | = | ஸகல ஜீவராசிகளாலும் தொழப்படுபவனே, |
| **தே ஆஜ்ஞா** | = | (ஸ்ருதி, ஸ்ம்ருதி புராணங்களால் வெளியிடப்பட்ட) உன் கட்டளையை, |
| **உல்லங்க்4யா** | = | மீறியும், |
| **த்யக்தாசார:** | = | நன் நடத்தைகளைத் துறந்தவனுமான நான், |
| | | |
| **அது4னா** | = | இப்பொழுது, |
| **பசுவத்** | = | ஒரு மிருகத்தைப் போல, |
| **முக்தலக்க:** | = | வெட்கங் கெட்டவனாக, |
| **சராமி** | = | திரிகிறேன், |
| **ஏவம்** | = | இவ்விதமே, |
| **நாநாவித4 ப4வததி ப்ராப்த தீ3ர்கா4 பராத4** | = | பலவித ஜன்மத் தொடர்களில் அடையப்பட்ட நீண்ட குற்றச்சாட்டுகளுடன் கூடிய |
| **அஹம்** | = | நான், |
| **த்வத்ப்ரஸாதா3ன் ருதே** | = | உன் கருணையில்லாவிடில், |
| **க்லேஶாம் போ4த4ம்** | = | துக்கஸாகரத்தை, |
| **கத2ம் தரேயம்** | = | எப்படித் தாண்டுவேன்? |

**(கருத்துரை)** உன்னை சரணாகதி செய்யும் நான் பெரிய அபராதி என்று தெரிவித்துக்கொள்ளுகிறார். ஹே சந்த்ர கலாதரனே! உன் கட்டளைகளை மீறி நடந்தவன் நான். ஸ்ருதி ஸ்ம்ருதி புராணங்களின் மூலம் உன்னால் போதிக்கப்பட்ட கர்மாக்களையும் தர்மங்களையும் சரிவர அனுஷ்டிக்காதவன். புத்தி பூர்வமாக உன் விதிகளை மீறிவிட்டு பயமும் வெட்கமும் கூட இல்லாமல் ஒரு விலங்கைப்போல விஷய ஸுகங்களையே பல இடையூறுகளுக்கு மத்தியில் தேடி அலைந்து கொண்டிருக்கிறேன். இவ்விதம் நான் அபராதியானது இந்த ஜன்மாவில் மட்டுமில்லை. பலவிதமான அநேக கோடி ஜன்மாக்களிலும் இப்படியே அபராதியாக இருந்துள்ளேன். எல்லையற்ற துக்கக் கடலை உன் தயவின்றி வேறு எவ்விதம் நான் தாண்டப் போகிறேன்!

**(விசேஷவுரை)** "அவனருளாலே அவன்தாள் வணங்கி" என்ற சைவ சமயாசாரியர்களின் வாக்கியம் ஈண்டு கவனிக்கத்தக்கது. **स्रुति स्मृती ममैवाज्ञा ஸ்ருதி ஸ்ம்ருதி மமைவாஜ்ஞா** என்றது கீதா வாக்கியம்.

## * भाव्यपराध संभावनया निस्त्रपत्वनिवेदनपूर्वक- प्रार्थना *

क्षाम्यस्येव त्वमिह करुणासागरः कृत्स्नमागः
संसारोत्थं गिरिश सभयप्रार्थनादैन्यमात्रात् ।
यद्यप्येवं प्रतिकलमहं व्यक्तमागः सहस्रं
कुर्वन् मूर्खः कथमिव तथा निस्त्रपः प्रार्थयेय ॥ १२ ॥

## * பா4வ்யபராத4 ஸம்பா4வனயா நிஸ்த்ரபத்வநிவேத3னபூர்வக- ப்ரார்த2னா *

**க்ஷாம்யஸ்யேவ த்வமிஹ கருணாஸாக3ர: க்ருத்ஸ்னமாக3:**
**ஸம்ஸாரோத்த2ம் கி3ரிஶ ஸபயப்ரார்த2நாதை3ன்யமாத்ராத் ।**
**யத்3யப்யேவம் ப்ரதிகலமஹம் வ்யக்தமாக3:ஸ் ஸஹஸ்ரம்**
**குர்வன் மூர்க்க2: கத2மிவ ததா2 நிஸ்த்ரப: ப்ரார்த2யேய ॥ 12 ॥**

**(பதவுரை)** மேலும் அபாரதம் ஏற்படக்கூடும் என்றெண்ணி வெட்கமின்மையைத் தெரிவித்து வேண்டுகிறார்.

| | | |
|---|---|---|
| **கி3ரிச** | = | ஏ பரமேசுவரனே! |
| **கருணா ஸாகர: த்வம்** | = | கருணைக் கடலான நீ, |
| **ஸபயப்ரார்த2நா தை3ன்யமாத்ராத்** | = | அச்சங் கொண்டு தீனக்குரலோடு செய்யப்படும் வேண்டுகோள் ஒன்றினாலேயே, |
| **ஸம்ஸாரோத்த2ம்** | = | ஸம்ஸாரத்தொடர்பினால் உண்டான, |
| **க்ருத்ஸ்னம் ஆக3:** | = | எல்லாப் பாபங்களையும், |
| **இஹ க்ஷாம்யசி ஏவ** | = | இங்கே (இப்பொழுதே) மன்னித்து விடுவாய் என்பதற்கு ஆக்ஷேபமில்லை, |
| **யத்3யபி** | = | இப்படி இருந்தபொழுதிலும், |
| **ஏவம்** | = | இம்மாதிரி, |
| **ப்ரதிகலம்** | = | ஒவ்வொரு நிமிஷத்திலும், |
| **ஆக: ஸஹஸ்ரம்** | = | ஆயிரம் குற்றங்களை, |
| **வ்யக்தம்** | = | வெளிப்படையாகவே, |
| **குர்வன்** | = | செய்து கொண்டேயிருக்கும், |
| **மூர்க்க2: அஹம்** | = | முட்டாளாகிய நான், |
| **நிஸ்த்ரப:** | = | வெட்கமற்றவனாக, |
| **ததா2** | = | அவ்விதம், |
| **கத2மிவ** | = | எப்படித்தான், |

**ப்ரார்த்த²யேய** = வேண்டிக்கொள்ளுவேன்?

**(கருத்துரை)** கருணைக்கடலான நீ, என்னால் பல ஜன்மங்களிலும் மேற் கூறியபடி செய்யப்பட்ட அபராதங்களை நான் மிக்க பயத்துடனும் மிகவும் பச்சாத் தாபத்துடனும் பிரார்த்தனை செய்துகொள்வேனாகில் மன்னித்துவிடுவாய் என்பதற்கையமில்லை. ஆனால் உன்னைப் பிரார்த்தனை செய்து கொள்ள வெட்கமாயிருக்கிறது. ஏனெனில் நான் முன் செய்த அபராதங்களை க்ஷமித்துக் கொள்ளும்படி கேட்கும்பொழுதாவது அவ்வித அபராதங்களைச் செய்வதை நிறுத்தியவனாக வேண்டுமல்லவா? இப்பொழுதும் அதே குற்றங்களைச் செய்து கொண்டேயிருக்கும் நான் எப்படி உன்னிடம் தைர்யமாக வந்து என்னுடைய பழைய குற்றங்களை மன்னித்து விடும்படி வேண்டிக் கொள்வேன்?

**(விசேஷவுரை)**

**अपराधसहस्राणि क्रियन्तेऽहर्निशं मया |**
**दासोऽयमिति मां मत्वा क्षमस्व परमेस्वर ||**

**அபராத⁴ஸஹஸ்ராணி க்ரியந்தே(அ)ஹர்நிஶம் மயா |**
**தா³ஸோ(அ)யமிதி மாம் மத்வா க்ஷமஸ்வ பரமேஸ்வர ||**

என்ற பிரார்த்தனையையும் கவனிக்க. பெரியோர்களுக்கு வெட்கம் தன்னிடமிருந்தே மிகுதியாக உண்டாகிறது என்பது

**स्वत: सतां ह्री: परतोऽपि गुर्वो**

**ஸ்வத: ஸதாம் ஹ்ரீ: பரதோ(அ)பி கு³ர்வோ** என்ற கவியின் வாக்கினால் உணரலாம்.

### * मृतिसमयदोषभूयिष्ठबुद्धिपारतन्त्र्यकथनम् *

**सर्व क्षेप्तुं प्रभवति जन: संसृतिप्राप्तमाग:**
**चेत: श्वासप्रशमसमये त्वत्पदाब्जे निधाय ।**
**तस्मिन्काले यदि मम मनो नाथ दोषत्रयात**
**प्रज्ञाहीनं पुरहर भवेत्तत्कथं मे घटेत ॥ १३ ॥**

### * ம்ரு'திஸமயதோ³ஷபூ⁴யிஷ்ட²க்⁴பு³த்³தி⁴பாரதந்த்ர்யகத²னம் *

**ஸர்வ க்ஷேப்தும்' ப்ரப⁴வதி ஜன: ஸம்ஸ்ரு'திப்ராப்தமாக³:**
**சேத: ஶ்வாஸப்ரஶமஸமயே த்வத்பதா³ப்³ஜே நிதா⁴ய |**
**தஸ்மின்காலே யதி³ மம மனோ நாத² தோ³ஷத்ரயாத**
**ப்ரஜ்ஞாஹீனம் புரஹர ப⁴வேத்தத்கத²ம் மே க⁴டேத || 13 ||**

**(பதவுரை)** மரண காலத்தில் தோஷங்கள் மிகுந்து புத்தி ஸ்வாதீனத்தை இழந்து விடுமெனக் கூறுகிறார்.

| | | |
|---|---|---|
| **நாத[2] புரஹர** | = | திரிபுர மெரித்த ஸ்வாமி!, |
| **ச்வாஸ ப்ரஸம ஸமயே** | = | மூச்சடங்கும் சமயத்தில், |
| **சேத:** | = | மனத்தை, |
| **த்வத் பதா[3]ப்[3]ஜே** | = | உன் சரண கமலத்தில், |
| **நிதா[4]ய** | = | வைத்து (அர்ப்பணம் செய்வதனால்), |
| **ஸம் ஸ்ருதி ப்ராப்தம்** | = | பிறவிகளில் வந்தடைந்திருக்கும், |
| **ஸர்வம் ஆக:** | = | எல்லா பாபத்தையும், |
| **க்ஷேப்தும்** | = | உதறி எறிந்துவிட, |
| **ஜன: ப்[4]ரபவதி** | = | ஒருவனால் ஸாத்தியுமாகும் (எனினும்), |
| **தஸ்மின் காலே** | = | அந்த சமயத்தில், |
| **தோ[3]ஷத்ரயார்தம்** | = | வாத, பித்த கபமென்ற மூன்று தோஷங்களால் பீடிக்கப்பட்ட, |
| **மம மன:** | = | என் மனம், |
| **ப்ரஜ்ஞஹீனம்** | = | நல்ல பிரஜ்ஞை யிழந்ததாக, |
| **யதி[3] ப[4]வேத்** | = | ஆகிவிட்டால், |
| **தத்** | = | ((முற்கூறிய) மனத்தை உன் திருவடிகளில் அர்ப்பணம் செய்தல், |
| **கத2ம் க[4]டேத்** | = | எப்படி ஸம்பவிக்கும்? |

**(கருத்துரை)** எவ்வித பாபிக்கும் கடைசியாக ஒரு வழி இருக்கிறது. அஃதாவது எனக்கு பயன்படுமா? என்பதைப் பார்ப்போம். தன் ஜன்மாக்களில் ஸம்ப வித்த எல்லா அபராதங்களையும் மரண காலத்தில் ஈச்வர சரண கமலத்தில் மனத்தை ஈடுபடுத்துவதின் மூலம் விடலாம். ஆனால் அந்தக்காலத்தில் நான் பிரஜ்ஞை தவறி யிருந்தால் என்ன செய்வது? அந்திய காலத்தில் பிரஜ்ஞையுடன் கூடி இருப்பது அரிது. வாத பித்த கபங்களின் விபரீதங்களால் மூர்ச்சை ஏற்பட்டு விடலாம். ஆகையினால் ப்ராண வியோக சமயத்தில் மனத்தை ஈசுவரனிடம் செலுத்தி ஸர்வ பாபங்களையும் போக்கிக்கொள்ளலாம் என்றும் நிச்சய மாக நம்பியிருக்கவும் முடியாது.

**(விசேஷவுரை)**

## चित्तमं दस्वा सक्रुदपि शिवे चिन्तितं साधया याम:

**சித்தம் த[3]ஸ்வா ஸக்ருத[3]பி ஶிவே சிந்திதம் ஸாத[4]யா யாம:**

என்றது நீலகண்ட தீக்ஷிதர் வாக்யம்.

**सांकेत्यं पारिहास्यं वा स्तोमं हेलनमेव वा |**

**ஸாங்கேத்யம் பாரிஹாஸ்யம் வா ஹேலனமேவ வா ।**

என்ற பாகவத வாக்யத்தை அனுசரித்துத்தான் நம் முன்னோர் ஈச்வர நாமங்களை தங்களுடைய புத்ர பௌத்ராதிகளுக்கு வைத்தனர்.

**दृष्टावाक्षिप्यमाणायां संज्ञया ह्रियमाणया |**
**मृप्युपाशेन बद्धस्य त्राता नैवोपलभ्यते ।**
**अयःपाशेन कालेन स्नेहपाशेन बन्धुमिः ।**
**हिक्कया बाध्यमानस्य श्वासेन परियुष्यतः ।**
**मृत्युना कृष्यमाणस्य न खल्वस्ति परायणम् ।**

**த்³ருஷ்டாவாக்ஷிப்யமாணாயாம் ஸஞ்ஜ்ஞுயா ஹ்ரியமாணயா ।**
**ம்ருத்  பாஶேன ப³த்³த⁴ஸ்ய த்ராதா நைவோபலப்⁴யதே ।**
**அய:பாஶேன காலேன ஸ்னேஹபாஶேன ப³ந்து⁴மி: ।**
**ஹிக்கயா பா³வ்யமானஸ்ய ஶ்வாஸேன பரியுஷ்யத: ।**
**ம்ருத்யுனா க்ருஷ்யமாணஸ்ய ந க²ல்வஸ்தி பராயணம் ।**

என்று வர்ணிக்கப்படும் அந்த்ய காலத்தில் எவ்விதம் புத்தி திடமாக இருக்கமுடியும்?

*** उत्क्रान्त्यवस्थानिरूपणम् ***

**प्राणोत्क्रान्तिव्यतिकरदलत्सन्धिबन्धे शरीरे**
**प्रेमावेशप्रसरदमिताक्रन्दिते बन्धुवर्गे ।**
**अन्तः प्रज्ञामपि शिव भजन्नन्तरायैरनन्तैः**
**आविद्धोऽहं त्वयि कथमिमामर्पयिष्यामि बुद्धिम् ॥ १४ ॥**

*** உத்க்ராந்த்யவஸ்தா²நிரூபணம் ***

**ப்ராணோத்க்ராந்திவ்யதிகரத³லத்ஸந்தி⁴ப³ந்தே⁴ ஶரீரே**
**ப்ரேமாவேஶப்ரஸரத³மிதாக்ரந்தி³தே ப³ந்து⁴வர்கே³ ।**
**அந்த: ப்ரஜ்ஞாமபி ஶிவ ப⁴ஜன்னந்தராயைரனந்தை:**
**ஆவித்³தோ⁴(அ)ஹம் த்வயி கத²மிமாமர்பயிஷ்யாமி பு³த்³தி⁴ம் ॥ 14 ॥**

**(பதவுரை)** உயிர் வெளிக் கிளம்பும் நிலையைக் கூறுகிறார்.

| | |
|---|---|
| **ஶிவ** | = ஹே சிவ, |
| **ப்ராணோத்<br>க்ராந்தி வ்யதிகர<br>த$^{3}$வத் ஸந்தி$^{4}$** | = பிராணவாயு வெளிக்கிளம்புவதனால் சரீரத்தின் பூட்டுகள் தெறித்துக்கொண்டும் பூட்டுகள் தெறித்துக்கொண்டும், |
| **ப$^{3}$ந்து$^{4}$வர்கே$^{3}$<br>ப்ரேமா வேச<br>ப்ரஸரதமிதா<br>க்ரந்தி$^{3}$தே$^{3}$** | = பந்து ஜனங்கள் பொங்கி யெழும் அன்புப்பெருக்கால் கட்டுக்கடங்காதபடி கொண்டும் இருக்கும் பொழுது, |
| **அந்த: ப்ரஜ்ஞாம்** | = உள்ளே சுய உணர்வினை, |
| **பஜநாபி** | = உடையவனாயினும் (உணர்வினை இழக்காதவனாய் இருப்பதாக வைத்துக் கொண்ட போதிலும்) |
| **அநந்தை:<br>அந்தராயை:** | = கணக்கற்ற இடையூறுகளால், |
| **ஆவித்3த4ஹ:<br>அஹம்** | = சூழ்ந்து அமுக்கப்பட்ட நான், |
| **இமாம் பு$^{3}$த்$^{4}$தி$^{3}$:** | = இந்த புத்தியை, |
| **த்வயி** | = உன்னிடத்தில், |
| **கத$^{2}$ம்** | = எப்படி, |
| **அர்ப்பயிஷ்யாமி** | = செலுத்தப் போகிறேன், |

**(கருத்துரை)** அப்படியே சுய உணர்வில் இருப்பதாக வைத்துக் கொண்டாலும் மனத்தை உன்னிடம் ஈடுபடுத்துவது அஸாத்யமான காரியம். ஏனெனில் பிராணன் வெளிக்கிளம்பும் ஸமயத்தில் ஒவ்வொரு பூட்டுகளிலிருந்தும் கிளம்ப எத்தனிக்கும் பிராண வாயுவினால் ஏற்படும் மரணவலியை உணர்த்துமே யொழிய அந்த பிரஜ்ஞை பிரயோஜனப்படுத்திக் கொள்ளகூடியதாக ஆகாது. சரீரத்திற்குள் இந்த வேதனையிருக்க, வெளியில் பந்து மித்திரர்கள், அன்பின் மிகுதியினால் கூக்குரலிட்டு அழுதுகொண்டிருப்பார்கள். ஆதலால் அந்தக்கூச்சலினிடையே மனத்தைத்திருப்பி உன்னிடம் நாட்டுவதும் ஸாத்தியமாகாது. இவ்விதம் பல இடையூறுகளால் எனக்கு அந்த்ய காலத்தில் உணர்விருப்பினும் மனத்தை உம்மிடம் ஒப்படைக்க நான் இயலாதவனாகவே ஆவேன்.

**(விசேஷவுரை)** தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் மனிதர்களுக்கும் யாவருக்கும் க்ஷேமத்தை விரும்பிக் கொடுத்தலாலும், அனாதி மல சம்பந்தம் அற்றவனாக இருத்தலாலும், ஸகலகல்யாணகுண ஆனந்த பூர்ணனாக இருத்தலாலும், யாவருக்கும் மங்களத்தை நினைத்தலாலும், த்வைத பிரபஞ்சத்தின் உபசமரூபியாக இருத்தலாலும், சிவன் என்று கூறப்படுகிறார். அவ்வாறு பல பொருள் சிவஶப்தத்திற்கு

உண்டு என்பதை பலவகை ப்ரமாணங்களுடன் சிவார்க்கமணி தீபிகையில் தீக்ஷிதர் அவர்களே காட்டியுள்ளார்.

**प्रायो मुह्यति चेत: प्राणभृतां प्राणनिर्गमावसरे**
**पुण्येन यदि न मुह्यंति पुत्रं वान्यस्मरन्प्रियते**

**ப்ராயோ முஹ்யதி சேத: ப்ராணப்4ருதாம் ப்ராணநிர்க3மாவஸரே ।**
**புண்யனே யதி3 ந முஹ்யந்தி புத்ரம் வான்யஸ்மரன்ப்ரியதே ॥**

என்றார் நீலகண்ட தீக்ஷிதர். கட்டுண்ட குதிரை அடிக்கப்பட்டால், காலில் உள்ள கட்டுக்களையும், கயிறு கட்டியுள்ள முளையையும் பிடுங்கிக் கொண்டு ஓடுவது போல, முக்ய ப்ராணன் கிளம்பும் பொழுது மற்ற இந்திரியங்களையும் வலிந்து எடுத்துக் கொண்டு போகும் என்பதும் அப்பொழுது உண்டாகும் வேதனை சொல்லி முடியாது என்பதும் சாந்தோக்யம் முதலிய உபநிஷத்துக்களாலும், ஸுதஸம்ஹிதை முதலியவற்றாலும் அறியலாம்,.

**मर्मसूत्कृष्यमाणेषु व्यवमानेषु सन्धिषु ।**
**यदुःखं म्रियमाणस्य स्मर्यतां तन्मुमुक्षुभि: ॥**

**மர்மஸூத்க்ருஷ்யமாணேஷு வ்யவமானேஷு ஸந்தி4ஷு ।**
**யது3:க2ம் ம்ரியமாணஸ்ய ஸ்மர்யதாம் தந் முமுக்ஷுபி4: ॥**

என்பதும் ஆன்றோர் வாக்கியம்.

*** सद्यः स्वात्मसमर्पणम् ***

**अद्यैव त्वत्पदनलिनयोरर्पयाम्यन्तरात्मन्**
**आत्मानं मे सह परिकरैरद्रिकन्याधिनाथ ।**
**नाहं बोद्धुं तव शिव पदं न क्रिया योगचर्याः**
**कर्तुं शक्नोम्यनितरगतिः केवलं त्वां प्रपद्ये ॥ १५ ॥**

*** ஸத்3ய: ஸ்வாத்மஸமர்பணம் ***

**அத்3யைவ த்வத்பத3நலினயோரர்பயாம்யந்தராத்மன்**
**ஆத்மானம் மே ஸஹ பரிகரைரத்3ரிகன்யாதி4நாத2 ।**
**நாஹம் போ3த்3து4ம்' தவ ஶிவ பத3ம் ந க்ரியா யோக3சர்யா:**
**கர்தும் ஶக்னோம்யநிதரக3தி: கேவலம் த்வாம் ப்ரபத்3யே ॥ 15 ॥**

**(பதவுரை)** உடனே தன் ஆத்மாவை ஸமர்ப்பணம் செய்கின்றார்.

| | | |
|---|---|---|
| **அத்ரிகன்யாதி3நாத2** | = | ஹே பார்வதீபதியே, |
| **அந்தராத்மன்** | = | அந்தர்யர்மியான புருஷனே! |
| **அத்3யைவ** | = | இப்பொழுதே, |
| **த்வத்பத3 நலினயோ:** | = | இரு சரணகமலங்களில், |
| **பரிகரை: ஸஹ** | = | பரிவாரங்களோடுகூட, |
| **மேம் ஆத்மானம்** | = | ஜீவ ரூபமான என்னை, |
| **அர்ப்பயாமி** | = | அர்ப்பணம் செய்து விடுகிறேன், |
| **ஶிவ** | = | ஹே சிவ, |
| **தவ பத3ம்** | = | உன் இருப்பிடத்தை (சரணத்தை), |
| **அஹம்** | = | நான், |
| **போ3த்3தும் ந சக்னோமி** | = | அறிய சத்தியுடையவனில்லை, |
| **க்ரியா:** | = | (அவசியம் செய்ய வேண்டுமென்று விதிக்கப்பட்ட) கர்மாக்களை யாவது, |
| **யோக சர்யா:** | = | யோக சாஸ்திர ரீதியில் அப்யாஸங்களை யாவது, |
| **கர்தும்** | = | செய்வதற்கு, |
| **ந சக்னோமி** | = | என்னால் முடியாது, |
| **அநிதரக3தி** | = | வேறுவழியில்லாதவனாக, |
| **த்வாம்** | = | உன்னை, |
| **ப்ரபத்3யே கேவலம்** | = | சரணமடைதலை மட்டும் செய்கிறன். |

**(கருத்துரை)** முன் சுலோகத்தில் சொன்னபடி அந்த்ய காலத்தில் மனதை ஈசுவரனிடம் அர்ப்பணம் செய்வது அஸாத்யமானபடியால் இப்பொழுது உன் நினைவு வந்திருக்கும் பொழுதே நான் உன்னிடம் என்னை ஸமர்ப்பணம் செய்து விடுகிறேன். என்னை மட்டுமில்லை. என் பரிவாரங்களையும் சேர்த்துக் கொண்டு ஆத்மார்பணம் செய்து விடுகிறேன். ஹே பரமசிவ! எனக்கு உன் இருப்பிடமோ தெரியாது. கர்மானுஷ்டானத்தையோ யோகாப்யாஸத்தையோ செய்ய என்னால் இயலாது. வேறு ஒரு வழியும் அறியாத நான் உன்னைச் சரணமடைவது ஒன்றை யே அனுஷ்டிக்கிறேன்.

**(விசேஷவுரை)**

**त्वय्यर्पितं प्रथममप्पययज्वनैव स्वात्मार्पणम् विदधता स्वकुलम् समस्तम् |**
**का त्वंमहेशि कुलदासमुपोक्षितुं मां को वानुपासितुमहं कुलदेवतां त्वामू ॥**

**த்வய்யர்பிதம் ப்ரத2மமப்பயயஜ்வனைவ ஸ்வாத்மார்பணம்**
**வித3த4தா ஸ்வகுலம் |**
**கா த்வம்மஹேஶி குலதா3ஸமுபோக்ஷிதும் மாம் கோ**
**வானுபாஸிதுமஹம் குலதே3வதாம் த்வாமூ ॥**

என்று ஆனந்த ஸாகர ஸ்தவத்தில் நீலகண்ட தீக்ஷிதர் இந்த சுலோகத்தை "ஈச்வரனிடம் தனக்குத் தனிப்பட்ட சலுகை இருக்கிறது என்பதற்கும் பரம்பரையாக உரிமை உண்டு என்பதற்கும்" பிரமாணமாக எடுத்துக் காட்டுகிறார். ஸகல ப்ரபஞ்சத் திற்கும் அதிஷ்டானமாக வியாபித்திருத்தலாலும், சித்தின் ஆபாஸ மோஹத்தா லுண்டான எல்லாவற்றையும் எடுத்துக் கொள்வதனாலும், விஷயோன்முகமாயுள்ள புத்தி வ்ருத்திகளை ப்ராசீனமாய் தன்னுள் அடக்கிக் கொள்ளுவதனாலும், எப்பொழு தும் இருத்தலாலும் ஆத்மா என்று கூறப்படும்.

**यच्चाप्नोति यदादत्ते यश्चात्ति विषयानिह ।**
**यश्चास्य सन्ततो भावस्तस्मादात्मेति गीयते ।**

**யச்சாப்னோதி யதா³த³த்தே யஶ்சாத்தி விஷயானிஹ ।**
**யஶ்வாஸ்ய ஸந்ததோ பா⁴வஸ்தஸ்மாதா³த்மேதி கீ³யதே ।**

என்று ஸ்ம்ருதி. இதற்கு விரிவான உரை அனுபூதிப்ரகாசத்தில் காண்க. கர்மாக்கள்: ஸம்ஸ்காரங்கள், வேத வ்ரதம், பாகயஜ்ஞம், ஸோமயஜ்ஞம் முதலியன. யமம், நியமம் ப்ராணாயாமம், ப்ரத்யாஹாரம், தாரணா முதலிய எட்டு அங்கங்களை உடையது யோகம்.

### * सर्वगुरुत्वनिरूपणपूर्विका प्रपत्तिः *

**यः स्रष्टारं निखिलजगतां निर्ममे पूर्वमीशः**
**तस्मै वेदानदित सकलान्यश्च साकं पुराणैः ।**
**तं त्वामाद्यं गुरुमहमसावात्मबुद्धिप्रकाशं**
**संसारातः शरणमधुना पार्वतीशं प्रपद्ये ॥ १६ ॥**

### * ஸர்வகு³ருத்வநிரூபணபூர்விகா ப்ரபத்தி: *

**ய: ஸ்ரஷ்டாரம் நிகி²லஜக³தாம் நிர்மமே பூர்வமீஶ:**
**தஸ்மை வேதா³னதி³த ஸகலான்யஶ்ச ஸாகம் புராணை: ।**
**தம் த்வாமாத்³யம் கு³ருமஹமஸாவாத்மபு³த்³தி⁴ப்ரகாஶம்**
**ஸம்ஸாராத: ஶரணமது⁴னா பார்வதீஶம் ப்ரபத்³யே ॥ 16 ॥**

**(பதவுரை)** 'சிவபெருமானே யாவர்க்கும் குரு' என நிரூபணம் செய்து சரண மடைகிறார்.

| | | |
|---|---|---|
| **நிகி²லஜக³தாம்** | = | எல்லா உலகங்களையும், |
| **ஸ்ரஷ்டாரம்** | = | படைத்த பிரமனை, |
| **ய: ஈஷ:** | = | எந்த ஈஸ்வரன், |

| | | |
|---|---|---|
| **பூர்வ** | = | ஆதியில், |
| **நிர்மமே** | = | சிருஷ்டித்தானோ, |
| **தஸ்மை** | = | அந்த பிரமதேவனுக்கு, |
| **புராண: ஸாகம்** | = | புராணங்களோடுகூட, |
| **ஸகலான் வேதா3ன் ச** | = | வேதங்கள் யாவற்றையும் |
| **ய:** | = | எந்த, |
| **அதி3த** | = | உபதேசித்தானோ, |
| **ஆத்ம பு3த்4தி3 ப்ரகாஸம்** | = | தன் புத்தியில் ஜோதி ஸ்வரூபமாய் விளங்குகின்ற, |
| **பார்வதீஷம்** | = | பார்வதீ பதியான, |
| **தம்** | = | அந்த, |
| **ஆத்4யம் கு3ரும்** | = | ஆதி குருவான, |
| **த்வாம்** | = | உன்னை, |
| **ஸம்ஸாரார்த:** | = | பிறவியினால் (ஸம்ஸாரத்தினால்) தாபமடைந்த, |
| **அஸௌ அஹம்** | = | இந்த நான், |
| **அது4னா** | = | இப்பொழுதே, |
| **சரணம் ப்ரபத்3யே** | = | ரக்ஷகன் என்று (அடைக்கலமாக) அடைகிறேன், |

**(கருத்துரை)** ஜகத்ஸ்ருஷ்டி கர்த்தாவான பிரமனை முதலில் சிருஷ்டித்து அவளுக்கு வேதங்களை உபதேசித்த ஆதி குருவான பரமேஸ்வரனை தியானத்தினால் என் சித்தத்தில் நிறுத்தி என்னுடைய தாபங்களை விலக்கும்பொருட்டு அவரிடம் ஶரணாகதியடைகிறேன். சிருஷ்டி இருவகைப்படும். ஒன்று ப்ரகிருதி சிருஷ்டி. மற்றொன்று விக்ருதி சிருஷ்டி. ப்ரகிருதி சிருஷ்டியில் சிவனிடமிருந்து பிரமன் உண்டானது சுருதியில் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த ஜீவன்களிடையே எவன் உன்னை ஶரணமடைகிறானோ அவனுக்கு ஞானத்தை அளித்து அவனுடைய கட்டை அவிழ்த்து விட்டு நித்யாநந்த பரிபூர்ணமான் உன்னுடைய அப்ராக்ருதமான திவ்ய பதவிக்கு அவனை அழைத்துக் கொள்ளுகிறாய். ஆகையினால் உன்னை நான் சரணமடைகிறேன். புல் முதலியவற்றைத் தின்று விவேகமற்றவைகளாய் தன்னை வேலை வாங்கும் மனிதர்களுக்கு அடிமையாகி பார மிழுத்தல் முதலிய காரியங்களில் க்லேசமும் துக்கமுமடையும் மாடுகளைப்போல ஜீவன் அஜ்ஞானியாய் இந்த வாழ்க்கைச் சக்கரத்தில் கட்டுண்டு பலவித கஷ்டங்களை அடைகின்ற இந்த ஜீவன்களை கட்டவும் அவிழ்த்து விடவும் யஜமானன் பரமேஸ்வரனே.

**(விசேஷவுரை)**

**आत्मानः पशवः प्रोक्ताः सर्वे संसारवर्तिनः ।**
**तेषां पतित्वाहेवेशः शिवः पशुपतिः स्मृतः ॥**

**ஆத்மானঃ பஶவঃ ப்ரோத்தாঃ ஸர்வே ஸம்ஸாரவர்தினঃ ।**
**தேஷாம் பதித்வாஹேவேஶঃ ஶிவঃ பஶுபதிঃ ஸ்ம்ருதঃ ॥**

என்று பாரதம் கூறுகிறது.

**यो देवानां प्रथमं पुरस्तात् विश्वाधिपो रुद्रो महर्षि :।**
**हिरण्यगर्भं पश्यत जायमानं ।**
**कालावच्छेदयुक्तानां गुरुणामप्यसौ गुरुः ।**
**वामाङ्गदसृजद्विष्णुं दक्षिणाङ्गात्परजापतिम् ।**
**मध्यतो रुद्रमीशानं त्रीन्पुत्रान्सृजच्छिवः ॥**
**आत्मा वा इदमच्च आसीत् स ईक्षत इमान्तु सजा इति**

**யோ தே³வானாம் ப்ரத²மம் புரஸ்தாத் விஶ்வாதி⁴போ ருத்³ரோ மஹர்ஷி꞉ ।**
**ஹிரண்யக³ர்ப⁴ம் பஶ்யத ஜாயமானம் ।**
**காலாவச்சே²த³யுக்தானாம் கு³ருணாமப்யஸௌ கு³ரு꞉ ।**
**வாமாங்க³த³ஸ்ருஜதி³ஷ்ணும் த³க்ஷிணாங்கா³த்பரஜாபதிம் ।**
**மத்⁴யதோ ருத்³ரமீஶானம் த்ரீன்புத்ரானஸ்ருஜச்சி²வ꞉ ॥**
**ஆத்மா வா இத³மச்ச ஆஸீத் ஸ ஈக்ஷத இமாந்து ஸஜா இதி**

என்பது முதலிய வேதம், உபநிஷத், பாரதம், ஸூதஸம்ஹிதை, சிவ புராணம், ஸனத்ஸுஜாதீயம் முதலிய பல பிரமாண நூல்கள் சிவபெருமானே ஸகலகர்த்தா, பதி, ஸகலருக்கும் ஆதி குரு, ஸர்வஜ்ஞன் என்று தெளிவுறக் கூறுகின்றன. சிருஷ்டி வகைகளும் புராணங்களிலேயே விரித்துரைக்கப் படுகின்றன.

### * पति पशु पाश निरूपणपूर्विका प्रपत्तिः *

**प्रह्मादीन् यस् स्मरहर पशून्मोहपाशेन बद्ध्वा**
**सर्वानेकश्चिदचिदधिकः कारयित्वाऽऽत्मकृत्यम् ।**
**यस्शैतेषु स्वपदशरणान्विद्यया मोचयित्वा**
**सान्द्रानन्दं गमयति परं धाम तं त्वां प्रपद्ये ॥ १७ ॥**

### * பதி பஶு பாஶ நிரூபணபூர்விகா ப்ரபத்தி꞉ *

**ப்ரஹ்மாதீ³ன் யஸ் ஸ்மரஹர பஶூன்மோஹபாஶேன ப³த்³த்⁴வா**
**ஸர்வானேகஶ்சித³சித³தி⁴க꞉ காரயித்வா(ஆ)த்மக்ரு'த்யம் ।**
**யஶ்சைதேஷு ஸ்வபத³ஶரணான்வித்³யயா மோசயித்வா**
**ஸாந்த்³ரானந்த³ம் க³மயதி பரம் தா⁴ம தம் த்வாம் ப்ரபத்³யே ॥ 17 ॥**

**(பதவுரை)** பதி பசு பாசம் இம் மூன்றையும் விளக்கும் முகமாக சரணமடைகிறார்.

| | | |
|---|---|---|
| **ஸ்மரஹர** | = | மன்மதனை எரித்தவரே, |
| **சித$^3$சித$^3$தி$^4$க:ய: ஏகம்** | = | இந்த ப்ரபஞ்சத்தைக் காட்டிலும் வேறான எவனொருவன், |
| **ப்ரஹ்மாதீ$^3$ன்** | = | பிரமன் முதலிய, |
| **ஸர்வான் பசூன்** | = | ஸகலவிதமான பசுக்களையும் (ஜீவர்களையும்), |
| **மோஹபாசேன** | = | அஜ்ஞான மென்னும் கயிற்றினால், |
| **ப$^3$த்$^3$த்$^4$வா** | = | கட்டி, |
| **ஆத்ம க்ருத்யம்** | = | அவரவர்கட்குரிய காரியங்களை, |
| **காரயித்வா** | = | செய்வித்து, |
| **யஷ்ச்வ** | = | எவன் மேலும், |
| **ஏதேஷு** | = | இவர்களில், |
| **ஸ்வபத$^3$ஸரணான்** | = | தனது திருவடியில் சரணமடைந்தவர்களை, |
| **வித்$^3$யயா** | = | ஞானத்தின் மூலம், |
| **மோசயித்வா** | = | கட்டிலிருந்து விடுவித்து, |
| **ஸாந்த்$^3$ராநந்த$^3$ம்** | = | பரிபூர்ண ஆனந்த மயமான, |
| **பரம்** | = | எல்லாவற்றிற்கும் மேலான, |
| **தா$^4$ம** | = | ஸ்தானத்திற்கு, |
| **க$^3$மயதி** | = | போகும்படி செய்கிறானோ, |
| **தம் த்வாம்** | = | அவ்விதமான உன்னை, |
| **ப்ரபத்$^3$யே** | = | சரணமடைகிறேன். |

**(கருத்துரை)** சேதனாசேதன மயமான இந்த பிரபஞ்சத்திற்கு அப்பாலுள்ள நீ இரண்டுகால் நான்கு கால் பசுக்களை அஜ்ஞானக் கயிற்றால் கட்டி அவர்களுக்குரிய காரியங்களைச் செய்வித்து இந்த ஸம்ஸாரத்தை நடத்தி வருகிறாய். இந்த ஜீவன்க ளிடையே எவன் உன்னைச் சரண மடைகின்றானோ அவனுக்கு ஞானத்தை அளித்து அவனுடைய கட்டை அவிழ்த்து விட்டு நித்யானந்த பரிபூர்ணமான உன்னுடைய அப் ராக்ருதமான பதவிக்கு அவனை அழைத்துக் கொள்ளுகிறாய். ஆகையால் நான் உன்னைச் சரணமடைகிறேன். புல் முதலியவற்றை மென்று தின்று விவேகமற்ற வைகளாய் தன்னை வேலை வாங்கும் மனி தர்களுக்கு அடிமையாகி பாரம் இழுத்தல் முதலிய காரியங்களில் க்லேசமும் துக்கமுமடையும் மாடுகளைப்போல் ஜீவன் அஜ்ஞானியாய் இந்த வாழ்க்கைச் சக்கரத்தில கட்டுண்டு பற்பல கஷ்டங் களை அடைகின்றான். இந்த ஜீவன்களைக் கட்டவும் அவிழ்த்து விடவும் யஜமானன் பரமேச்வரனே.

**(விசேஷவுரை)**

**एषामीशे पशुपतिः प्रशुनां चतुष्पदामुत च दूिपदां**
**एष ह्येव साधु कर्म कारयति यमेप्यो लोकेप्य उन्निनीषते**

**ஏஷாமீஶே பஶுபதிः ப்ரஶுனாம் சதுஷ்பதா$^3$முத ச தி$^3$பதா$^3$ம் ।**
**ஏஷ ஹ்யேவ ஸாது$^4$ கர்ம காரயதி யமேப்யோ லோகேப்ய உன்னினீஷதே ॥**

என்பது வேத வாக்யம் பாரதத்தில் -

**पशुनां वः पतिक्षाहं भविष्यामि सुरोत्तमाः ।**
**आत्मानः पचवः प्रोक्ताः सर्वे सम्सारवर्तिनः ||**

**பஶூனாம் வ: பதிஷ்சாஹம் ப⁴விஷ்யாமி ஸுரோத்தமா: |**
**ஆத்மான: பஶவ: ப்ரோக்தா: ஸர்வே ஸம்ஸாரவர்தின: ||**

என்று பரமேச்வரன் யாவர்க்கும் பதி என்பதும் யாவரும் பசு என்பதும் தெளியக்கிடக் கின்றன.

*** भवरोगभिषग्वरणं ***

**भक्ताग्रयाणां कथमपि परैः योऽचिकित्स्याममत्यैः**
**संसाराख्यां शमयति रुजं स्वात्मबोधौषधेन ।**
**तं सर्वाधीश्वर भवमहादीर्घतीव्रामयेन**
**किष्टोऽहं त्वां वरद शरणं यामि संसारवैद्यम् ॥ १८ ॥**

*** भवरोगभिषग्वरणं ***

**भक्ताग्रयाणां कथमपि परैः योऽचिकित्स्याममर्त्यैः**
**संसाराख्यां शमयति रुजं स्वात्मबोधौषधेन ।**
**तं सर्वाधीश्वर भवमहादीर्घतीव्रामयेन**
**क्लिष्टोऽहं त्वां वरद शरणं यामि संसारवैद्यम् ॥ १८ ॥**

*** ப⁴வரோக³பி⁴ஷக்³வரணம்' ***

**ப⁴க்தாக்³ரயாணாம் கத²மபி பரை: யோ(அ)சிகித்ஸ்யாமமர்த்யை:**
**ஸம்ஸாராக்²யாம் ஶமயதி ருஜம் ஸ்வாத்மபோ³தௌ⁴ஷதே⁴ன |**
**தம் ஸர்வாதீ⁴ஶ்வர ப⁴வமஹாதீ³ர்க⁴தீவ்ராமயேன**
**க்லிஷ்டோ(அ)ஹம் த்வாம் வரத³ ஶரணம் யாமி ஸம்ஸாரவைத்³யம் || 18 ||**

**(பதவுரை)** ஸம்ஸார ரோகவைத்யனைச் சரணமடைகிறார்.

| | | |
|---|---|---|
| **ஸர்வாதீ⁴ஶ்வர** | = | எல்லா தேவர்களுக்கும் மேற் பட்ட கடவுளே, |
| **வரத³** | = | கேட்டதைக் கொடுப்பவரே, |
| **கத²மபி** | = | எவ்விதத்திலேயும், : |

| | | |
|---|---|---|
| **பரை: அமர்த்யை:** | = | மற்ற தேவர்களால், |
| **அசிகித்ஸ்யாம்** | = | வைத்யம் செய்து நிவ்ருத்தி செய்ய முடியாத, |
| **ஸம்ஸாராக்²யாம்** | = | ஸம்ஸாரம் என்கிற பெயருடைய, |
| **ருஜம்** | = | வியாதியை, |
| **ய:** | = | எவர், |
| **ப⁴க்தாக்³ரயாணாம்** | = | தன் பக்த சிகாமணிகளுக்கு, |
| **ஸ்வாத்மபோ³தௌ⁴ ஷதே⁴ன** | = | சிவஜ்ஞானபோதம் என்ற மருந்தினால், |
| **ஶமயதி** | = | போக்கடிக்கிறாரோ, |
| **தம்** | = | அவ்விதமான, |
| **ஸம்ஸார வைத்³யம்** | = | ஸம்ஸார ரோகத்திற்கு வைத்யனான, |
| **த்வாம்** | = | உன்னை, |
| **ப⁴வமஹாதீ³ர்க⁴ தீவ்ராமயேன** | = | ஸம்ஸாரமாகிற கொடுமையான நீடித்த பெரிய வியாதியினால், |
| **க்லிஷ்டம்: அஹம்** | = | கஷ்டப்படுகிற நான், |
| **ஶரணம் யாமி** | = | சரணமடைகிறேன். |

**(கருத்துரை)** இந்த ஸம்ஸாரம் என்பது ஒரு ரோகம். இந்த வியாதிக்கு வைத்தியம் செய்ய வேறு ஒரு வைத்தியனாலும் முடியாது. மற்ற தேவர்கள் சில வரன்களைக் கொடுக்கலாம். ஆனால், இந்த ஸம்ஸார வியாதியைத் தீர்க்க அவர்களால் இயலாது. இந்தப் பிணிக்கு வைத்தியன் நீ ஒருவனே. உன்னிடம் பக்தி செய்தவர்களுக்கு இந்த நோயைத் தீர்த்து விடுகிறாய். இதற்கு நீ வைத்துக்கொண்டிருக்கும் மருந்து ஆத்மஜ்ஞானம் என்பதே. இந்தப் “பிறப்பு இறப்பு” என்னும் நோயால் அநேக காலமாய் மிகவும் பீடிக்கப்பட்ட நான் உன்னைத் தவிர வேறு எங்கு சரணமடையப் போகிறேன். ஆகையால் நீயே எனக்குக் கதி. எனக்கு இந்த வியாதியை நிவ்ருத்தி செய்விக்க வேண்டும்.

**(விசேஷவுரை)** இதே கருத்தை ஸ்ரீ சங்கர பகவத் பாதர் அவர்களும் வெளியிட்டிருக்கிறார்கள்.

**जननमृति युतानां सेवया देवतानां**
**न भवति सुखलेश: संशयो नास्ति तत्र ।**
**अजनिममृतरूपं साम्बमीशं भजन्ते**
**य इह परमसौख्यं ते हि धन्या लभन्ते ||**

**ஜனனம்ருதி யுதானாம் ஸேவயா தே³வதானாம்**
**ந ப⁴வதி ஸுக²லேஶ: ஸம்ஶயோ நாஸ்தி தத்ர ।**
**அஜனிமம்ருதரூபம் ஸாம்ப³மீஶம் ப⁴ஜந்தே**
**ய இஹ பரமஸௌக்²யம் தே ஹி த⁴ன்யா லப⁴ந்தே ॥**

ஆர்யாசதகத்தில், **संसरणकातराणां संसरणि: शाम्भवी भक्ति:** - **ஸம்ஸரணகாதராணாம் ஸம்ஸரணி: ஶாம்ப4வீ ப4க்தி:** என்றும், வேதத்தில், **प्रथमो दैव्यो भिषक्तमं त्वा भिषजां शृणोमि** **ப்ரத2மோ தை3வ்யோ பி4ஷக்தம் த்வா பிஷஜாம் ஸ்ருணோமி** என்றும் கூறியுள்ளது.

### * तारकोपदेष्टृत्वकथनपूर्वकं शरणवरणम् *

**ध्यातो यत्नाद्विजितकरणैर्योगिभिर्यो विमुक्त्यै (विमृग्य:)**
**तेभ्य: प्राणोत्क्रमणसमये संनिधायात्मनैव ।**
**तद्व्याचष्टे भवभयहरं तारकं ब्रह्म देव:**
**तं सेवेऽहं गिरिश सततं ब्रह्मविद्यागुरुं त्वाम् ॥ १९ ॥**

### * தாரகோபதே3ஷ்ட்ருத்வகத2னபூர்வகம் ஶரணவரணம் *

**த்4யாதோ யத்நாத்3விஜிதகரணைர்யோகி3பி4ர்யோ விமுக்த்யை (விம்ருக்3ய:)**
**தேப்4ய: ப்ராணோத்க்ரமணஸமயே ஸந்நிதா4யாத்மனைவ ।**
**தத்3வயாசஷ்டே ப4வப4யஹரம் தாரகம் ப்3ரஹ்ம தே3வ:**
**தம் ஸேவே(அ)ஹம் கி3ரிஶ ஸததம் ப்3ரஹ்மவித்3யாகு3ரும் த்வாம் ॥ 19 ॥**

**(பதவுரை)** ‘நீ தாரக மந்த்ரோபதேசம் செய்பவன், ஆதலால் உன்னைச் சரணமடைகிறேன்’ என்று கூறுகிறார்.

| | | |
|---|---|---|
| **கி3ரிச** | = | ஈச்வரனே, |
| **விஜித கரணை: யோகி3பி4:** | = | பொறிகளை வென்ற யோகிகளால், |
| **யதநாத்** | = | பெரு முயற்சியினால், |
| **த்4யாத:** | = | தியானிக்கப்பட்ட, |
| **ய: தே3வ:** | = | எந்த தேவன், |
| **விமுக்த்யை** | = | மோக்ஷத்தின் பொருட்டு, |
| **(விம்ருக்3ய:)** | = | (தேடத்தக்கவனாக இருப்பினும்) |
| **தேப்4ய:** | = | அவர்களுக்கு, |
| **ப்ராணோத் க்ரமண ஸமயே** | = | ப்ராணவாயு வெளிக்கிளம்பும் நேரத்தில், |
| **ஆத்மநைவ** | = | தானாகவே, |
| **ஸந்நிதா4ய** | = | எதிரில் வந்து, |
| **ப4வப4யஹரம்** | = | ஸம்ஸார பயத்தை நிவ்ருத்தி செய்யக் கூடிய, |
| **தாரகம்** | = | கரையேற்றுவிக்கும், |
| **தத்ப்3ரம்ஹா** | = | அந்த அகண்டமான ப்ரஹ்ம சைதன்யத்தை, |
| **வ்யாசஷ்டே** | = | உபதேசிக்கிறானோ, |

| | | |
|---|---|---|
| **தம்** | = | அந்த, |
| **ப்3ரஹ்ம வித்4யா கு3ரும்** | = | ப்ரஹ்ம ஜ்ஞானத்தை உபதேசிக்கும் குருவான, |
| **த்வாம்** | = | உன்னை, |
| **ஸததம்** | = | எப்பொழுதும், |
| **ஸேவே** | = | உபாஸிக்கிறேன். |

**(கருத்துரை)** பொறிகளை அடக்கி த்யான யோகத்தை அப்யாஸம் செய்துவந்த பெரியோர்களுக்கு ப்ராண வியோக ஸமயத்தில் முன்வந்து நின்று தாரக மந்த்ரத் தை உபதேசிக்கும், முக்தி மார்க்கத்திற்கு பரமாசார்யனாகிய உன்னை நான் சரண மடைகிறேன். இந்த் ரிய நிக்ரஹம் செய்து வெகு தீவ்ரமான முயற்சியுடன் த்யான யோகத்தைப் பயிலும் யோகிகளாலும் நீ தேடப்படுகின்றாய். அவர்களுக்கு நீ அந்த்ய காலத் தில் ப்ரஸன்னமாகி மோக்ஷத்திற்கு உதவும் உபதேசத்தையும் அருளுகின் றாய். ப்ரஹ்மஜ்ஞானத்தை உபதேசிக்கும் குரு நீயே. அத்தகைய உன்னை நான் த்யானாதிகளினால் உபாஸிக்க இயலாதவனாயினும் கேவலம் சரணாகதியில் ஆராதிக்க முயலுகின்றேன். த்யான யோகத்திற்கு வசப்பட்டு எப்படி யோகிகளு டைய மரண காலத்தில் அவர்களை முக்தி யடைவிக்கும் பொருட்டு நீ தானாகவே முன் வந்து நின்று உபதேசத்தை யருளுகின்றனையோ அவ்விதம் என் சரணாகதி யையும் பொருட்படுத்தி என்னைக் காப்பாற்றுவாயாக.

**(விசேஷவுரை)** இந்த சுலோகத்தின் முதல் பாதத்தில், विमुक्त्यै **விமுக்த்யை** அல்லது विमृग्यः **விம்ருக்3ய:** என்பதும் பாடம். முக்தி கண்டத்தில் எங்கு இருப்பினும் எப்படி இருப்பினும் பாபியாயினும் சிவக்ஷேத்திரத்தி வாஸம் முக்தியைக் கொடு க்க வல்லது என்று கூறப்பட்டுள்ளது. கர்ப்ப, ஜன்ம, ஜரா, மரணம் முதலிய துன்பங்களி னின்றும் கரையேற்றுவதனால் ப்ரஹ்ம தாரகம் எனப்பட்டது.

**पापिष्ठानामपि श्रद्धाविहीनानां जनार्दन ।**
**मुक्तिदं मरणादूर्ध्वं शिवक्षेत्रेषु वर्तनम् ॥**
**आत्मानमरणिं कृत्वा प्रणवं चोत्तरारणिम् ।**
**ध्यान निर्मथनाभ्यासादेवं पश्येन्निगूढवत् ॥**

**பாபிஷ்டா2நாமபி ஶ்ரத்3தா4விஹீனானாம் ஜனார்த3ன ।**
**முக்தித3ம் மரணாதூ3ர்த்4வம் ஶிவக்ஷேத்ரேஷு வர்தனம் ॥**
**ஆத்மானமரணிம் க்ருத்வா ப்ரணவம் சோத்தராரணிம் ।**
**த்4யான நிர்மத2நாப்4யாஸாதே3வம் பஶ்யேன்னிகூ3ட4வத் ॥**

## * नित्यदासता निरूपणम् *-

दासोऽस्मीति त्वयि शिव मया नित्यसिद्धं निवेद्यं
जानास्तत्त्वमपि यदहं निर्गतिः संभ्रमामि ।
नास्त्येवान्यन्मम किमपि ते नाथ विज्ञापनीयं
कारुण्यान्मे शरणवरणं दीनवृत्तेर्गृहाण ॥ २० ॥

## * நித்யதா$^{3}$ஸதா நிரூபணம் *-

**தா$^{3}$ஸோ(அ)ஸ்மீதி த்வயி ஶிவ மயா நித்யஸித்$^{3}$த$^{4}$ம் நிவேத்$^{3}$யம்**
**ஜானாஸ்தத்த்வமபி யத$^{3}$ஹம் நிர்க$^{3}$திः ஸம்ப்$^{4}$ரமாமி ।**
**நாஸ்த்யேவான்யன்மம கிமபி தே நாத$^{2}$ விஜ்ஞாபனீயம்**
**காருண்யான்மே ஶரணவரணம் தீ$^{3}$னவ்ருத்தேர்க்$^{3}$ருஹாண ॥ 20 ॥**

**(பதவுரை)** எப்பொழுதும் நான் உனதடிமை எனக் கூறுகிறார்.

| | | |
|---|---|---|
| **ஶிவ** | = | ஹே சிவனே, |
| **த்வயி** | = | உன்னிடத்தில், |
| **தா$^{3}$ஸோஸ்மி இதி** | = | நான் அடிமை என்று, |
| **நித்யஸித்$^{3}$த$^{4}$ம்** | = | என்றும் உறுதியாயுள்ள இந்நிலை, |
| **மயா** | = | என்னால், |
| **நிவேத்$^{3}$யம்** | = | தெரிவிக்க வேண்டுவதோ? |
| **நிர்க$^{3}$திः** | = | ரக்ஷிப்பவரின்றி, |
| **ஸம்ப்$^{4}$ரமாமி** | = | அலைந்து திரிகின்றேன், |
| **இதி யத் ஏதத்** | = | என்பதையும், |
| **த்வமபி** | = | நீயும், |
| **ஜானாஸி** | = | அறிவாய், |
| **நாத$^{2}$** | = | ஸ்வாமி, |
| **தே** | = | உம்மிடத்தில், |
| **மம** | = | எனக்கு, |
| **விஜ்ஞாபனீயம்** | = | தெரிவித்துக்கொள்ள வேண்டியது, |
| **அன்யத்** | = | வேறு, |
| **கிமபி** | = | ஒன்றும், |
| **நாஸ்த்யேவ** | = | இல்லை. (ஆகையினால்), |
| **தீ$^{3}$னவ்ருத்தே** | = | பரிதவிக்கும் நிலையிலுள்ள, |
| **மே** | = | என்னுடைய, |
| **ஶரணவரணம்** | = | சரணாகதிப்ரார்த்தனையை, |
| **காருண்யாத்** | = | கருணையினால், |
| **க்$^{3}$ருஹாண** | = | ஏற்றுக்கொள். |

**(கருத்துரை)** ஸ்வாமி! நான் உன் தாஸன், உன்னைத் தவிர வேறு கதி எனக்கு இல்லை, என்பதைத் தானே நான் உன்னிடம் சொல்லிக்கொள்ளமுடியும். ஆனால் நான் உன் தாஸன் என்பது சாச்வதமாய் ஏற்பட்ட நிலை. ஆதலின் நான் சொல்லிக் கொள்ளாமலே நீ அறிந்த விஷயம். நான் திக்கற்றவனாய் பரிதபிக்கும் நிலையில் காப்பவரின்றிச் சுழன்றுகொண்டு வருகிறேன் என்பதும் முற்று முணர்ந்த உனக்குத் தெரியாத தில்லை. இவ்விதம் பார்க்குங்கால் நான் உன்னிடம் தெரிவித்துக்கொள்ள வேண்டியது என்ன இருக்கிறது? ஆகையினால் கருணையை முன்னிட்டு மிக்க பரிதாப நிலையிலிருக்கும் என்னுடைய சரணாகதியை ஏற்றுக் கொள்வாயாக.

**(விசேஷவுரை)** **यः सर्वज्ञः सः सर्ववित्** **ய: ஸர்வஜ்ஞ: ஸ: ஸர்வவித்** என்பது முதலியவற்றால் ஈசன் ஸர்வஜ்ஞன் என்பது புலப்படும். நீலகண்ட தீக்ஷிதரும், **सानुग्रहं स्यान्मयि गर्भदासे ஸானுக்³ரஹம் ஸ்யான்மயி க³ர்ப⁴தா³ஸே** என்று நித்யம் அடிமை என்பதைக் கூறுகிறார். சைவாகமங்களில் பதிபசுபாசங்கள் நித்யமாகக் கூறப்படுகின்றன. அதை அனுசரித்து, பரம வைதிக ஸ்ரேஷ்டரான தீக்ஷிதர் இவ்வி தம் மார்க்கம் முதலியன கூறுவது எவ்வாறு பொருந்துமெனின், வ்யவஹார கால லத்தில் ஸகுணோபாஸனையில் யாவும் பொருந்துவனவே. இதனால் பாரமார்த்தி கமான அத்வைதம் ஒருக்காலும் பங்கமடைவதில்லை.

## - * दीनदयानिधित्वमवलम्ब्य प्रार्थना * -

**ब्रह्मोपेन्द्रप्रभृतिभिरपि स्वेप्सित प्रार्थनाय**
**स्वामिन्नग्रे चिरमवसरस्तोषयद्भिः प्रतीक्ष्यः ।**
**द्रागेव त्वां यदिह शरणं प्रार्थये कीटकल्पः**
**तद्विश्वाधीश्वर तव कृपामेव विश्वस्य दीने ॥ २१ ॥**

## - * தீ³னத³யாநிதி⁴த்வமவலம்ப்³ய ப்ரார்த²னா * -

**ப்³ரஹ்மோபேந்த்³ரப்ரப்⁴ருதிபி⁴ரபி ஸ்வேப்ஸித ப்ரார்த²னாய**
**ஸ்வாமின்னக்³ரே சிரமவஸரஸ்தோஷயத்³பி⁴: ப்ரதீக்ஷ்ய: |**
**த்³ராகே³வ த்வாம் யதி³ஹ ஶரணம் ப்ரார்த²யே கீடகல்ப:**
**தத்³விஶ்வாதீ⁴ஶ்வர தவ க்ருபாமேவ விஶ்வஸ்ய தீ³னே** || 21 ||

**(பதவுரை)** நீ தீனதயாளு ஆதலால் உன்னை வேண்டுகின்றேன்.

**விஶ்வாதீ⁴ஶ்வர ஸ்வாமின்** = ஜகதீச்வரனாகிய பிரபுவே,
**ஸ்வேப்ஸித ப்ரார்த²னாய** = தனது அபீஷ்டங்களை வேண்டிக் கொள்ளு வதற்காக,
**அக்³ரே** = முன்னின்று,

| | | |
|---|---|---|
| **தோஷயத்³பி⁴:** | = | துதிகளால் திருப்தி செய்விக்கும், |
| **ப்³ரஹ்மோபேந்த்³ரப்ரப்⁴ருதிபி⁴ரபி** | = | ப்ரஹ்மா விஷ்ணு முதலியவர்களாலும், |
| **அவசர:** | = | (எவருடைய) அருள் செய்யும் சமயமானது, |
| **சிரம்** | = | வெகுகாலம், |
| **ப்ரதீக்ஷ்ய:** | = | எதிர்பார்க்கப் படுகிறதோ, |
| **(தம்) த்வாம்** | = | அவ்விதமான உன்னை, |
| **கீடகல்ப:** | = | புழுவுக்கு சமமான நான், |
| **த்³ராகே³வ** | = | திடீரென்று, |
| **ஶரணம் ப்ரார்த²யே** | = | சரணம் கொடுக்கும்படி பிரார்த்திப்பது, |
| **யத் இஹ** | = | என்பது யாதொன்று உண்டோ, |
| **தத்** | = | அது, |
| **தே³னே** | = | எளியவனிடத்தில், |
| **தவ** | = | உன்னுடைய, |
| **க்ருபாம்** | = | தயவை, |
| **விஷ்வஸ்ய ஏவ** | = | நம்பித்தான். |

**(கருத்துரை)** ஏ ஸர்வேசா! ப்ரஹ்மா விஷ்ணு முதலியவர்கள் கூட உன்னிடம் தங்களுடைய அபீஷ்டங்களைத் தெரிவித்து வேண்டிக்கொள்ளும் பொருட்டு உன் வாயிலில் வந்து நின்று துதி செய்து உன்னைக் கண்டுகொள்ள ஸந்தர்ப்பத்தை ஆவலுடன் எதிர் பார்த்து இருக்கும் பொழுது அல்ப பிராணியாகிய நான் நினைத்த மாத்திரத்தில் உன்னை அழைத்து எனக்குச் சரணமளிக்கும்படி வேண்டுகின்றேனே? இந்த உரிமை எனக்கு எப்படிக் கிடைத்ததென்றால் நீ தீனர்களிடம் தயையுடையவன் என்ற பெரியோர்களின் மொழியை நம்பியே யல்லாது வேறு எவ்வித மாகும்?

**(விசேஷவுரை)** ப்ரம்மதேவன், படைக்கும் திறமை பெறவும், திருமால், பிருந் தையிடம் ஈடுபட்டதனால் கோபித்து மறைந்த திருமகளைத் திரும்பவும் பெறவும், இந்திரன், வ்ருத்ராசுரன் முதலிய பகைவர்களைக் கொல்லத் திறமை பெறவும், சிவனருள் வேண்டியது. என்பது புராணங்களில் வெளிப்படையானது.

### - * प्रपदनोपायप्राप्तेः धैर्यावलम्बनम् * -

**कर्मज्ञानप्रचयमखिलं दुष्करं नाथ पश्यन्**
**पापासक्तं हृदयमपि चापारयन्सन्निरोद्धुम् ।**
**संसाराख्ये पुरहर महत्यन्धकूपे विषीदन्**
**हस्तालम्ब प्रपदनमिदं प्राप्य ते निर्भयोऽस्मि ।। २२ ।।**

## - ⁎ ப்ரபத³னோபாயப்ராப்தே: தை⁴ர்யாவலம்ப³னம் ⁎ -

**கர்மஜ்ஞானப்ரசயமகி²லம் து³ஷ்கரம் நாத² பஶ்யன்**
**பாபாஸக்தம் ஹ்ருத³யமபி சாபாரயன்ஸந்நிரோத்³து⁴ம் ।**
**ஸம்ஸாராக்²யே புரஹர மஹத்யந்த⁴கூபே விஷீத³ன்**
**ஹஸ்தாலம்ப³ ப்ரபத³னமித³ம் ப்ராப்ய தே நிர்ப⁴யோ(அ)ஸ்மி ॥ 22 ॥**

**(பதவுரை)** சரணாகதி என்னும் ஒரு வழியைப் பெற்றமையால் அச்சமின்றி தைர்யம் கொண்டுள்ளேன் எனக் கூறுகிறார்.

| | | |
|---|---|---|
| **ஹே புரஹர நாத²** | = | முப்புரமெரித்தவனே! |
| **அகி²லம்** | = | சகலமான, |
| **கர்மஜ்ஞானப்ரசயம்** | = | கர்மங்களின் ஞான அனுஷ்டாநங்களை, |
| **து³ஷ்கரம் பஶ்யன்** | = | கண்டு கொண்டவனாயும், |
| **பாபாஸக்தம் ஹ்ருத³யமபி** | = | பாபத்திலேயே ஈடுபட்ட சித்தத்தையும், |
| **ஸந்நிரோத்³து⁴ம் அபாரயன்** | = | கண்டித்துத் திருப்பச் சக்தியற்றவனுமாகிய நான், |
| **ஸம்ஸாராக்²யே** | = | பிறப்பு இறப்பு இவைகளின் தொடர்புடைய ஸம்ஸாரமென்ற, |
| **மஹதி அந்த⁴ கூபே** | = | பெரியபாழுங் கிணற்றில், |
| **விஷீத³ன்** | = | துயரமுற்று வீழ்ந்து கிடக்கும் போது, |
| **இத³ம்** | = | இந்த, |
| **தே** | = | உன்னுடைய, |
| **ஹஸ்தாலம்ப³ ப்ரபத³னம்** | = | (கரையேற்ற) நீட்டப்பட்ட கைப்பிடியை, |
| **ப்ரத்ய** | = | அடைந்து, |
| **நிர்ப⁴ய:** | = | பயம் நீங்கியவனாக, |
| **அஸ்மி** | = | ஆகிறேன். |

**(கருத்துரை)** கர்மாவைச் செய்து சுத்தியடைவதும் ஞானத்தைச் சம்பாதிப்ப தும் சிரத்தையினாலும் விடாமுயற்சியினாலும் காலக்கிரமத்தில் ஸாதிக்க வேண்டு வன வாதலால் சோம்பேறியும் சபல புத்தியுள்ளவனுமாகிய என்னால் அஃதெல்லாம் நிறைவேற்ற முடியாத காரியம் என்பது திண்ணம். துர்வாஸனையினால் தடுக்கப் பட்ட காரியங்களில் ஊக்கமுடைய என் மனத்தையே என்னால் திருப்பமுடியவில் லையே. இந் நிலையில் ஸம்ஸாரமாகிற பாழுங் கிணற்றில் பரிதபிக்கும் என்னைக் கரையேற்ற உன் கைப்பிடி கிடைத்திருப்பதால் இனி எனக்கு பயமில்லை.

**(விசேஷவுரை)** தனதுள்ளத்தில் பிரகாசிக்கும் ஈஶ்வர ஸ்வரூபத்தைத் தான் அனுஸந்தானம் செய்வதையே தனக்குக் கிடைத்த கைப்பிடியாக வர்ணிக்கிறார்.

ஸம்ஸார துக்கங்களுக்கிடையில் உன்னை தர்சிப்பதனால் பயம் நீங்கியவனாகி றேன் என்று கூறுகிறார்.

## -* जनिमार्गसहायत्वकथनम् *-

**त्वामेवैकं हतजनिपथे पान्थमस्मिन्प्रपञ्चे**
**मत्वा जन्मप्रचयजलधेः बिभ्यतः पारशून्यात् ।**
**यत्ते धन्याः सुरवर मुखं दक्षिणं संश्रयन्ति**
**क्लिष्टं घोरे चिरमिह भवे तेन मां पाहि नित्यम् ॥ २३ ॥**

## - * ஜனிமார்க³ஸஹாயத்வகத²னம் * -

**த்வாமேவைகம் ஹதஜனிபதே² பாந்த²மஸ்மின்ப்ரபஞ்சே**
**மத்வா ஜன்மப்ரசயஜலதே⁴: பி³ப்⁴யத: பாரஶூன்யாத் ।**
**யத்தே த⁴ன்யா: ஸுரவர முக²ம் த³க்ஷிணம் ஸம்ஶ்ரயந்தி**
**க்லிஷ்டம் கோ⁴ரே சிரமிஹ ப⁴வே தேன மாம் பாஹி நித்யம் ॥ 23 ॥**

**(பதவுரை)** பிறவி மார்க்கத்தில் உதவி கிடைத்ததாகக் கூறுகிறார்.

| | | |
|---|---|---|
| **ஸுரவர** | = | தேவர்களில் முதல்வனே, |
| **அஸ்மின் பிரபஞ்சே** | = | இந்த (மாயாமயமான) லோகஸ்ருஷ்டியில், |
| **ஹதஜனிபதே²** | = | கஷ்டங்கள் நிறைந்த பிறப்பு இறப்பென்னும் (சுழன்று வரும்) பாதையில், |
| **த்வாம் ஏகமேவ** | = | உன்னை ஒருவனையே, |
| **பாந்த²ம்** | = | துணைவருபவனாக, |
| **மத்வா** | = | நினைத்து, |
| **பாரசூன்யாத்** | = | கரையில்லாத, |
| **ஜன்மப்ரசயஜலதே⁴:** | = | பிறவித் தொடரென்ற கடலினின்றும், |
| **பி³ப்⁴யத:** | = | பயங்கொண்ட, |
| **த⁴ன்யா:** | = | பாக்யசாலிகள், |
| **தே** | = | உன்னுடைய, |
| **யத் த³க்ஷிணம் முகம்** | = | எந்த தென்னோக்கிய முகத்தை, |
| **ஸம்ச்ரயந்தி** | = | அடைகின்றார்களோ, |
| **தேந** | = | அம் முகத்தால், |
| **இஹ** | = | இப்பிரபஞ்சத்தில், |
| **சிரம்** | = | வெகு காலமாக, |
| **கோ⁴ரேப⁴வே** | = | பயங்கரமான ஸம்ஸாரத்தில், |
| **க்லிஷ்டம் மாம்** | = | கஷ்டப்படும் என்னை, |
| **நித்யம் பாஹி** | = | அவசியம் காப்பாற்றுவாயாக. |

**(கருத்துரை)** ஜன்மத்திற்குப் பின் ஜன்மமாக எடுத்துக்கொண்டு ஸம்ஸார மென்ற முடிவற்ற பாதையில் அவதிப் பட்டுக்கொண்டு போய்க்கொண்டிருக்கும் ஜீவனுடன் அந்தராத்மாவான ஈசன் ஒருவனே துணையாகக் கூடவே போய்க் கொண்டிருக்கிறார். இவ்விதம் ஜீவனுக்கு துணைவரும் பரமாத்மாவே **மார்க்கபந்து** ஆகிறார். பிறவிக் கடலினின்றும் கரையேற நிச்சயித்த பெரியோர்கள் அவர் தம் துணையாருக்கும் பகவானின் பஞ்ச முகங்களில் தென்னோக்கியதான அகோர முகத்தை சரணமடைந்து முக்தி யடைகிறார்கள். தீக்ஷிதர் அவர்கள் பாரத்வாஜகோத் தரத்தில் பிறந்தவர். ஆதலால் தன் குலத்திற்கு முதல்வரான பரத்வாஜ முனிவரின் வரலாற்றைத் தெரிந்து கொண்டு அதைத் தானும் பின்பற்ற நினைக்கிறார். பரத்வாஜ முனிவர் ஐந்து முகமுடைய பரமேச்வரனின் அகோர முகத்தின் மூலம் சிவதீக்ஷை பெற்றார் என்பது ஐதிஹ்யம். பரத்வாஜ முனிவரைக் கரையேற்றிய அகோர முகத் தால் என்னையும் கரையேற்றுவாயாக என்று ப்ரார்த்திக்கிறார்.

**(விசேஷவுரை)**

**ऋतं पिबन्तौ सुकृतस्य लोके गुहां प्रविष्टौ परमे परार्ध्ये ॥**
**द्वा सुपर्णा सयुजा सखायौ समानं वृक्षं परिषस्व - जाते ॥**

**ருதம் பிப³ந்தௌ ஸுக்ருதஸ்ய லோகே கு³ஹாம்**
**ப்ரவிஷ்டௌ பரமே பரார்த்⁴யே ॥**
**த்³வா ஸுபர்ணா ஸயுஜா ஸகா²யௌ ஸமானம்**
**வ்ருக்ஷம் பரிஷஸ்வ - ஜாதே ॥**

என்ற இரு உபநிஷத் வாக்கியங்கள் ஈசன் மார்க்கபந்துவாய் உடனிருக்கிறான் என்பதை உணர்த்துகின்றன. நீலகண்ட தீக்ஷிதர்

**घोरं भवमपहातुं केचिदघोरं भवं प्रपद्यन्ते ।**
**कृतदीक्षोऽघोरमुखे कुलकूटस्थो भरद्वाजः ॥**

**கோ⁴ரம் ப⁴வமபஹாதும் கேசித³கோ⁴ரம் ப⁴வம் ப்ரபத்³யந்தே ।**
**க்ருததீ³க்ஷோ(அ)கோ⁴ரமுகே² குலகூடஸ்தோ² ப⁴ரத்³வாஜ: ॥**

என்ற சுலோகத்தினால் பாரத்வாஜர் அகோர முகத்தில் தீக்ஷை பெற்று வீடுபெற்ற மையைத் தெரிவிக்கிறார்.

**गुहां प्रविष्टौ आत्मानौ हि तद्दर्शनात्**

என்ற ப்ரஹ்மஸூத்ரத்திலும் ஈசன் உடனிருப்பதாகக் கூறப்பட்டுள்ளது.

**यथा राहुरदृश्योऽपि दृश्यते रविमण्डले ।**
**तद्वत्सर्वगतोऽप्यात्मा लिङ्गदेहे तु दृश्यते ॥**
**निश्चलः परिपूर्णोऽपि गच्छतीत्युपचर्यते ।**

**யதா2 ராஹுரத்3ருஶ்யோ(அ)பி த்3ருஶ்யதே ரவிமண்ட3லே ।**
**தத்3வத்ஸர்வக3தோ(அ)ப்யாத்மா லிங்க3தே3ஹே து த்3ருஶ்யதே ॥**
**நிஶ்சல: பரிபூர்ணோ(அ)பி க3ச்ச2தீத்யுபசர்யதே ।**

என்றும் பாத்ம புராணம் கூறுகிறது.

### - * क्लेशदैन्यनिरूपणपूर्विका प्रपत्तिः * -

**एकोऽसि त्वं शिव जनिमतामीश्वरो बन्धमुक्त्योः**
**क्लेशाङ्गारावलिषु लुठतः का गतिस्त्वां विना मे**
**तस्मादस्मिन्निह पशुपते घोरजन्मप्रवाहे**
**खिन्नं दैन्याकरमतिभयं मां भजस्व प्रपन्नम् ॥ २४ ॥**

### - * க்லேஶதை3ன்யநிரூபணபூர்விகா ப்ரபத்தி: * -

**ஏகோ(அ)ஸி த்வம் ஶிவ ஜனிமதாமீஶ்வரோ ப3ந்த4முத்த்யோ:**
**க்லேஶாங்கா3ராவலிஷு லுட2த: கா க3திஸ்த்வாம் வினா மே ।**
**தஸ்மாத3ஸ்மின்னிஹ பஶுபதே கோ4ரஜன்மப்ரவாஹே**
**கி2ன்னம் தை3ன்யாகரமதிப4யம் மாம் ப4ஜஸ்வ ப்ரபன்னம் ॥ 24 ॥**

(பதவுரை) கிலேசத்தையும் தாழ்மையையும் தெரிவித்துச் சரணமடைகிறார்.

| | | |
|---|---|---|
| **ஶிவ** | = | ஏ சிவபிரானே, |
| **ஜனிமதாம்** | = | பிறவியுடையவர்களுக்கு, |
| **ப3ந்த4முத்த்யோ:** | **=** | பந்தம் மோக்ஷம் இவ்விரண்டிற்கும், |
| **ஈஶ்வர:** | = | பிரபுவாயிருப்பவன், |
| **ஏகம் த்வம் அஸி** | = | நீ ஒருவன் தான், |
| **க்லேஶாங்கா3ராவலிஷு** | **=** | துன்பங்களாகிற தணல் கும்பல்களின் மேல், |
| **லுட2த:** | = | புரளுகின்ற, |
| **மே** | = | எனக்கு, |
| **த்வாம் வினா** | = | உன்னை விட்டு, |
| **கா க3தி** | = | வேறு புகலிடம் ஏது? |
| **தஸ்மாத்** | = | ஆகையினால், |
| **பஶுபதே** | = | பசுக்களுக்கு (ஜீவர்களுக்கு) பதியானவனே, |

| | | |
|---|---|---|
| **அஸ்மின் இஹ கோ⁴ரஜன்மப்ரவாஹே** | = | இந்த பயங்கரமான ஜனனத் தொடரில், |
| **கின்னம்** | = | துன்பமடைந்தவனும், |
| **தை³ன்யாகரம்** | = | எளிமை யடைந்தவனும், |
| **அதிப⁴யம்** | = | அதிக பயம் கொண்டவனும், |
| **ப்ரபன்னம்** | = | சரணமடைந்தவனுமான, |
| **மாம்** | = | என்னை, |
| **ப⁴ஜஸ்வ** | = | வந்து ரக்ஷிப்பாயாக. |

**(கருத்துரை)** பசுக்கள் என்று சொல்லப்படும் ஜீவ ராசிகளை மாயாபந்தத்தால் கட்டிவைப்பவனும் அதனின்று அவிழ்த்து விடுபவனும் பசுபதி யாகிற நீயே. ஆத லால் உன்னைத் தவிர வேறு யாரை நான் அடைக்கலம் புகவிரும்புவேன். இந்த வாழ்க்கைத் துன்பங்களில், நெருப்புத் தணலில் விழுந்து விட்டவன்போல வேதனை யால் துடிக்கும் என்னை, மிகப் பரிதாபமான நிலைக்கு இருப்பிடமான என்னை, மனத்தில் மிகுந்த பீதி யடைந்த என்னை, அடுத்தடுத்து பிரவாஹம் போல எனக்கு ஏற்படும் இந்தப் பிறவித் தொடரிலிருந்து விடுவிக்கும் பொருட்டு கருணை கூர்ந்து உடனே ஓடிவந்து ரக்ஷிக்க வேண்டும்.

**(விசேஷவுரை)**

**तमीश्वराणां परमं महेश्वरं तं देवतानां परमं च दैवतम् ।**
**पतिं पतीनां परमं पुरस्तात् विदाम देवं भुवनेशमीड्यम् ॥**

**தமீஶ்வராணாம் பரமம் மஹேஶ்வரம் தம் தே³வதானாம் பரமம் ச தை³வதம் ।**
**பதிம் பதீனாம் பரமம் புரஸ்தாத் விதா³ம தே³வம் பு⁴வனேஶமீட்³யம் ॥**

என்று ஈச்வரத் தன்மை சிவனுக்கே உரியது என உபநிஷத் சொல்லுகின்றது. சைவ சாஸ்திரங்களில், மலம், மாயா, கர்ம, தத்வதிரோதானம் என்று சொல்லப்பட்ட கிலேசங்களே இங்கு கிலேசத்தணல் எனக் குறிக்கப்பட்டது. பாரதத்தில்

**ईश्वरश्चेतना कर्ता पुरुषः कारणं शिवः–**

**ஈஶ்வரஶ்சேதனா கர்தா புருஷꞏ காரணம் ஶிவꞏ -**

எனவும், காளிதாஸன் நூல்களில்,

**महेश्वरस्त्रयम्बक एव नापरः,**
**शब्दमीश्वर इत्युचैः सार्धचन्द्र विभर्ति यः,**
**यस्मिन्नीश्वर इत्यनन्यविषयः शब्दो यथार्थाक्षरः –**

**மஹேஶ்வரஸ்த்ரயம்ப³க ஏவ நாபர:,**
**ஶப்³த³மீஶ்வர இத்யுசை: ஸார்த⁴சந்த்³ர விப⁴ர்தி ய:,**
**யஸ்மினீஶ்வர இத்யனன்யவிஷய: ஶப்³தோ³ யதா²ர்தா²க்ஷர: -**

எனவும், புராணங்களில்,

**एक एव हि मुख्योऽयमीश्वरः श्रुतिचोदितः -**
**ஏக ஏவ ஹி முக்²யோ(அ)யமீஶ்வர: ஶ்ருதிசோதி³த: -**

எனவும் கூறப்பட்டுள்ளது. பாதஞ்ஜல யோக ஸூத்திரத்தில், அவித்யா, அஸ்மிதா, ராகம், த்வேஷம், அபிநிவேசம் என ஐந்துவித க்லேசங்கள் கூறப்பட்டுள்ளன.

*** श्रीरुद्रप्रभावकथनपूर्विका विद्याप्रार्थना * –**

**यो देवानां प्रथममशुभद्रावको भक्तिभाजां**
**पूर्वं विश्वाधिक शतवृतिं जायमानं महर्षिः ।**
**दृष्ट्यापश्यत्सकलजगतीसृष्टिसामर्थ्यदात्र्या**
**स त्वं ग्रन्थिप्रविलयकृते विद्यया योजयास्मान् ॥ २५ ॥**

**- * ஸ்ரீருத்³ரப்ரபா⁴வகத²னபூர்விகா வித்³யாப்ரார்த²னா * -**

**யோ தே³வானாம் ப்ரத²மமஶுப⁴த்³ராவகோ ப⁴க்திபா⁴ஜாம்**
**பூர்வம் விஶ்வாதி⁴க ஶதவ்ருதிம் ஜாயமானம் மஹர்ஷி: .**
**த்³ருஷ்ட்யாபஶ்யத்ஸகலஜக³தீஸ்ருஷ்டிஸாமர்த்²யதா³த்ர்யா**
**ஸ த்வம் க்³ரந்தி²ப்ரவிலயக்ருதே வித்³யயா யோஜயாஸ்மான் ॥ 25 ॥**

**(பதவுரை)** ருத்ரனின் பெருமையைக் கூறி ப்ரம்ம வித்யையைக் கொடுத்தருளும்படி வேண்டுகிறார்.

| | | |
|---|---|---|
| **விஶ்வாதி⁴க** | = | எல்லாவற்றிற்கும் மேலானவனே தானாகவே எல்லாவற்றையும் அறிந்தவர்களுள் பெரியவனும், |
| **ப⁴க்திபா⁴ஜாம்** | = | தன்னிடம் பக்தி செய்பவர்களுக்கு, |
| **அசுப⁴ த்³ராவக:** | = | ஸம்ஸார துக்கத்தைப் போக்கடிப்பவனுமான, |
| **ய:** | = | எவன், |
| **தே³வானாம்** | = | தேவர்களுக்கு, |
| **ப்ரத²மம்** | = | முதலாக, |
| **ஜாயமானம்** | = | உண்டாகின்ற, |
| **சதத்⁴ருதிம்** | = | ப்ரம்மதேவனை, |

| | | |
|---|---|---|
| **ஸகலஜக$^3$தீஸ்ருஷ்டி ஸாமர்த்$^2$யதா$^3$த்ர்யா** | = | எல்லாவுலகங்களையும் சிருஷ்டி செய்யும் திறமை அளிக்கக்கூடிய, |
| **த்ருஷ்ட்யா** | = | கடாக்ஷத்தினால், |
| **அபச்யத்** | = | பார்த்தானோ, |
| **ஸ: த்வம்** | = | அந்த நீ, |
| **க்$^3$ரந்திப்ரவிலயக்ருதே** | = | முடுச்சுக்களின் நிவ்ருத்தியின் பொருட்டு, |
| **அஸ்மான்வித்$^3$யயா யோஜயா** | = | எங்களுக்கு ஞானத்தை அளிப்பாயாக. |

**(கருத்துரை)** கோடைக்காலத்தில் மண்ணில் விளையாடும் துஷ்டக் குழந்தையை தாயார் அடித்து பாலூட்டி கட்டிலில் தூங்க வைப்பது போல ஸம்ஸார துக்கத்தினால் துவண்டுபோன ஜீவர்களைத் தண்டித்து அவர்களுடைய வினைப்பயனை அனுபவிக்கச் செய்து களைப்பாறச் செய்வதற்காக தாயினும் நூறு மிடங்கு அன்பு கொண்ட ஈச்வரன் ருத்ரரூபியாகி ஸம்ஹார காரியத்தைச் செய்கிறார். பிறகு சிறிது காலம் கழித்து மறுபடியும் எழுப்பி போகங்களை அனுபவிக்கச் செய்கிறார். ஈசன் ஸர்வஜ்ஞன், ஸம்ஸாரத்திலுண்டாகும் ஸகலவித துக்கங்களையும் விலக்குகிறவர். ஆதலால் முதலில் உண்டாகும் ப்ரம்மதேவனை அருளோடு நோக்குகிறார். இதுவே சாக்ஷுஷ தீக்ஷை யாகும். குரு திருஷ்டி மாத்திரத்தினால் தன்னிடமுள்ள ஞானத்தை சிஷ்யனிடம் தோற்றுவிப்பது சாக்ஷுஷதீக்ஷை எனப்படும். இதனால் ப்ரம்மதேவனுக்கு ஸகல உலகங்களையும் படைக்கும் திறமை யுண்டாகிறது. இவ்விதமுள்ள ஈசன் எனக்கு ப்ரம்ம விஷ்ணுருத்ர கிரந்திகள் என்ற முக்தி மார்க்கத்திலுள்ள முட்டுக் கட்டைகளை நீக்குவதற்காக நான் சிவஜ்ஞானம் பெறும்படி கருணை செய்யவேண்டும்.

**(விசேஷவுரை)** இந்த ஸ்லோகம்,

**यो देवानां प्रथमं पुरस्तात् विश्वाधिको रुद्रो महर्षिः ।**
**हिरण्यगर्भ पश्यति जायमानं स नो देवः शुभया स्मृत्या संयुनक्तु**

**யோ தே$^3$வானாம் ப்ரத$^2$மம் புரஸ்தாத் விஶ்வாதி$^4$கோ ருத்$^3$ரோ மஹர்ஷி: ।**
**ஹிரண்யக$^3$ர்ப$^4$ பஶ்யதி ஜாயமானம் ஸ நோ தே$^3$வ:**
**ஶுப$^4$யா ஸ்ம்ருத்யா ஸம்யுனக்து**

என்பது முதலிய வேத வாக்கியங்களின் வ்யாக்யான ரூபமாயும், அதே பதங்கள் அமைந்ததாயும் காணப்படுதல் கவனிக்கத்தக்கது. **अशुभद्रावकः** **அஶுப$^4$த்$^3$ராவக:** என்ற பதம் ருத்ரபதத்தின் விரிவுரையாகும். சைவ ஸிந்தாந்த ஸாரத்தில்.

**विश्रान्त्यै भविनां च खिन्नमनसां पाकाय कर्मावले :**
**मायावाग्बलसंभवाय कुरुते शम्भुर्यदा संहृतिम् ।**
**शिष्यन्ते पशव : सशक्तिरमल : शम्भुच मायाद्वयं**
**सृष्टयाद्यं कुरुते ततश्च दयया भोगाय पुंसां पुनः ॥**

**விஶ்ராந்த்யை ப⁴வினாம் ச கி²ன்னமனஸாம் பாகாய கர்மாவலே:**
**மாயாவாக்³ப³லஸம்ப⁴வாய குருதே ஶம்பு⁴ர்யதா³ ஸம்ஹ்ருதிம் ।**
**ஶிஷ்யந்தே பஶவ: ஸஶக்திரமல: ஶம்பு⁴ஷ்வ மாயாத்³வயம்**
**ஸ்ருஷ்டயாத்³யம் குருதே ததஶ்ச த³யயா போ⁴கா³ய பும்ஸாம் புன: ॥**

என்று பிரளயமும், மறுபடி ஸ்ருஷ்டியும் அதன் காரணமும் கூறப்பட்டுள்ளது. ஸ்காந்தத்தில்,

**दीपऩात्आत्मबोधस्य क्षारणात्तमसोऽस्य च ।**
**दीक्षाशब्देन कथितं गुरोः साक्षान्निरीक्षणमू ॥**

**தீ³பனாத்ஆத்மபோ³த⁴ஸ்ய க்ஷாரணாத்தமஸோ(அ)ஸ்ய ச ।**
**தீ³க்ஷாஶப்³தே³ன கதி²தம்’ கு³ரோ: ஸாக்ஷாஞ்ரிரீக்ஷணமூ ॥**

எனவும்,

**ददाति शिवतादात्म्यं क्षिणोति च मलत्रयम् ।**
**अतो दीक्षेति सा प्रोक्ता दीक्षाशब्दार्थवेदिभिः॥**

**த³தா³தி ஶிவதாதா³த்ம்யம் க்ஷிணோதி ச மலத்ரயம் ।**
**அதோ தீ³க்ஷேதி ஸா ப்ரோக்தா தீ³க்ஷாஶப்³தா³ர்த²வேதி³பி⁴: ॥**

என்று புறுஷார்த்த போதத்திலும் தீக்ஷாசப்தார்த்தம் கூறப்பட்டுள்ளது. தீக்ஷை மூன்று விதம். மாந்த்ரிகீ, ஸ்பார்சிகீ, சாக்ஷுக்ஷி என்றும் பரசுராம ஸூத்திரத்தில்,

**चक्षुरुन्मील्य यस्तत्त्वं ध्यात्वा शिष्यं निरीक्षते ।**
**पशुपाशेविमोक्षाय दीक्षेयं चाक्षुषी मता ॥**

**சக்ஷுருன்மீல்ய யஸ்தத்த்வம் த்⁴யாத்வா ஶிஷ்யம் நிரீக்ஷதே ।**
**பஶுபாஶேவிமோக்ஷாய தீ³க்ஷேயம் சாக்ஷுஷீ மதா ॥**

என்பது முதலியவற்றால் தீக்ஷையின் வகைகளும் கூறப்பட்டுள்ளன. மேலும் ஆணவீ, சாக்தீ, சாம்பவீ என வேறு வகையாகவும் தீக்ஷை பிரிக்கப்பட்டுள்ளது. **देवासुराः संयत्ता आसन्** **தே³வாஸுரா: ஸம்யத்தா ஆஸன்** என்னுமிடத்தில், **रोदिति इति रुद्रः** **ரோதி³தி இதி ருத்³ர:** என்று ருத்ர சப்தத்திற்கு அக்னி என்று

பொருள் சொல்லப்பட்டது. இங்குள்ள ருத்ரசப்தம், **रुधिर आवरणे ருதி⁴ர ஆவரணே** என்ற தாதுவிலிருந்து ஆவரண பூதமான அஜ்ஞாநத்தை, **द्रावयति த்³ராவயதி** (விரட்டியடிக்கிறது) என்று பொருள் கொண்டது.

### - * दुःखतरणस्य शिवज्ञानैकमूलत्वकथनम् * --

**यद्याकाशं शुभद मनुजाश्चर्मवद्वेष्टयेयुः**
**दुःखस्यान्तं तदपि पुरुषस्त्वामविज्ञाय नैति ।**
**विज्ञानं च त्वयि शिव ऋते त्वत्प्रसादान्न लभ्यं**
**तदुःखार्तः कमिह शरणं यामि देवं त्वदन्यम् ॥ २६ ॥**

### - * து³:க²தரணஸ்ய ஶிவஜ்ஞானைகமூலத்வகத²னம் * --

**யத்³யாகாஶம் ஶுப⁴த³ மனுஜாஶ்ரர்மவத்³வேஷ்டயேயு:**
**து³:க²ஸ்யாந்தம் தத³பி புருஷஸ்த்வாமவிஜ்ஞாய நைதி ।**
**விஜ்ஞானம் ச த்வயி ஶிவ ருதே த்வத்ப்ரஸாதா³ன்ன லப்⁴யம்**
**தது³:கா²ர்த: கமிஹ ஶரணம் யாமி தே³வம் த்வத³ன்யம் ॥ 26 ॥**

**(பதவுரை)** துக்கத்தினின்றும் கரையேற சிவஜ்ஞானமே காரணமாகும் எனக் கூறுகிறார்.

| | | |
|---|---|---|
| **ஶுப⁴த³** | = | க்ஷேமத்தை யளிப்பவனே, |
| **மனுஜ:** | = | மனிதர்கள், |
| **ஆகாஶம்** | = | வானத்தை, |
| **ஶர்மவத்** | = | தோலைப் போல |
| **யதி³ வேஷ்டயேயு:**<br>**தத³பி** | = | சுருட்ட வல்லவர்களாயினும், |
| **த்வாம் - (புருஷம்)** | = | பரமாத்மாவாகிய உன்னை, |
| **அவிஜ்ஞாய** | = | அறியாமல், |
| **து³:கஸ்ய அந்தம்** | = | ஸம்ஸார துக்கத்தின் நிவ்ருத்தியை, |
| **புருஷ:** | = | ஒரு மனிதனும், |
| **ந ரதி** | = | அடைகிறது இல்லை, |
| **ஶிவ** | = | சிவனே, |
| **த்வயி ச விஜ்ஞானம்** | = | உன் விஷயமான ஞானமோ, |
| **த்வத் ப்ரஸாதா³த் ருதே** | = | உன்னுடைய அருளின்றி, |
| **ந லப்⁴யம்** | = | அடையக் கூடியதல்ல, |
| **தத்** | = | ஆகையால், |
| **து³:கா²ர்த:** | = | துக்கத்தால் பீடிக்கப்பட்ட நான், |
| **இஹ** | = | இந்த நிலைமையில், |

| | | |
|---|---|---|
| **த்வத3ன்யம்** | = | உன்னைத் தவிர, |
| **கம்தே3வம்** | = | எந்த தெய்வத்தை, |
| **சரணம் யமி** | = | சரணமடைவேன். |

**(கருத்துரை)** வானத்தைப் பாய்போல் சுருட்டுவது முற்றிலும் முடியாத காரியம். இந்த மானிடவர்க்கம் அதையும் ஸாதித்து விட்டாலும் சாதித்து விடலாம். ஆனால் உன்னை யறியாமல் துக்கத்தை மட்டும் கடக்க முடியாது. உன்னையறி வது என்பதோ உன் கருணையினாலல்லது கிடைக்கக் கூடியதல்ல. ஆதலால் துக்க த்தைக் கடக்க விரும்பும் நான் உன்னைச் சரணமடைவதைத் தவிர வேறு வகை யறியேன். ஆதலால் உன்னருளைப்பெற உன்னையே சரணமடைகிறேன். வேறு யாரைச் சரண மடைய முடியும்.

**(விசேஷவுரை)**

**तमेवं विद्वानमृत इह भवति ।**
**नान्यः पन्था अयनाय विद्यते ।**
**तरति शोकमात्मवित् ।**
**य एतद्विदुरमृतास्ते भवन्ति ।**
**तत्र को मोहः कः शोकः एकत्वमनुपश्यतः**

**தமேவம் வித்3வானம்ருத இஹ ப4வதி ।**
**நான்யஃ பந்தா2 அயனாய வித்3யதே ।**
**தரதி ஶோகமாத்மவித் ।**
**ய ஏதத்3வித்3ரம்ருதாஸ்தே ப4வந்தி ।**
**தத்ர கோ மோஹஃ கஃ ஶோகஃ ஏகத்வமனுபஶ்யதஃ**

என்பன ஞானமே மோக்ஷ ஸாதனம் என்பதை வலியுறுத்துவன. அவனருளாலே அவன்தாள் போற்றி என்றார் பெரியோர்களும்.

**- * शिवप्रसादाद्विद्याया मोक्षसाधनत्वकथनम् * —**

**किं गूढार्थैरकृतकवचोगुम्फनैः किं पुराणैः**
**तन्त्राद्यैर्वा पुरुषमतिभिर्दुर्निरूप्यैकमत्यैः ।**
**किं वा शास्त्रैरफलकलहोल्लासमात्र प्रधानैः**
**विद्या विद्येश्वर कृतधियां केवलं त्वत्प्रसादात् ॥ २७ ॥**

## - ⁎ ஶிவப்ரஸாதாத்³வித்³யாயா மோக்ஷஸாத⁴னத்வகத²னம் ⁎ –

**கிம் கூ³டா⁴ர்தை²ரக்ருதகவசோகு³ம்ப²னை꞉ கிம் புராணை꞉**
**தந்த்ராத்³யைர்வா புருஷமதிமிர்து³ர்நிருப்யைகமத்யை꞉ ।**
**கிம் வா ஶாஸ்த்ரைரப²லகலஹோல்லாஸமாத்ர ப்ரதா⁴னை꞉**
**வித்³யா வித்³யேஶ்வர க்ருததி⁴யாம் கேவலம் த்வத்ப்ரஸாதா³த் ॥ 27 ॥**

**(பதவுரை)** சிவனருளால் ஞானம் மோக்ஷஸாதனமாம் என்று கூறுகிறார்.

| | |
|---|---|
| **வித்⁴யேக்ஷ்வர** = | ஸகல வித்யாதிபதியே, |
| **கூ³டா⁴ர்தை²** = | மறைந்து கிடக்கும் தாத்பர்யமுள்ள, |
| **அக்ருதகவசோகு³ம்ப²நை꞉** = | ச்ருதி வாக்யங்களினால், |
| **கிம்** = | யாது, |
| **புராணை꞉ கிம்** = | புராணங்களால் என்ன பயன், |
| **புருஷமதிபி⁴꞉** = | மனித புத்தியினால், |
| **து³ர்நிருப்யைகமத்யை꞉** = | ஒற்றுமைப்படுத்த முடியாத முரண்பட்ட கொள்கைகளைக் கொண்ட, |
| **தந்த்ராத்³யைர்வா கிம்** = | சமய நூல், மதாசாரங்கள் இவைகளால் தான் யாது பயன்? |
| **அபவகலஹோல்லாஸ மாத்ர ப்ரதா⁴னை꞉** = | வீணான கலஹத்தில் குதூஹலத்தையே பிரதானமாகவுடைய |
| **ஶாஸ்த்ரை வா** = | சாஸ்திரங்களால் தான், |
| **கிம் ப²லம்** = | என்னபயன்?, |
| **க்ருததி⁴யாம்** = | அறிவாளிகளுக்கு, |
| **வித்³யா** = | ஞானசம்பத்து, |
| **த்வத்ப்ரஸாதா³த் கேவலம்** = | உன் அருளினாலே தான் (ஏற்படக்கூடியதே ஒழிய மற்ற வழிகளால் பெறத்தக்கதல்ல). |

**(கருத்துரை)** உலகத்தில் சுருதி, ஸ்ம்ருதி, புராணம், தாந்த்ரிக சமய நூல்கள், கலைகள், சாஸ்திரங்கள் என்று பலவிதமான வித்யைகள் ப்ரசாரத்திலிருக்கின்றன. இந்த வித்யைகளைக் கற்றுணர்ந்து மனிதன் யாதொருவித பலனையும் அடைவதில் லை. சுருதிகள் என்ற வேதங்களின் தாத்பர்யத்தைக் கண்டுபிடிப்பதே ஸாத்ய மில்லாமலிருக்கிறது. அது மறை பொருளாயிருப்பதால் புராணங்கள் மத விசார நூல்கள் எல்லாம் பரஸ்பரம் விரோதமான வழிகளைப் பின்பற்றுகின்றன. சாஸ்திர ஞானமே வாதி பிரதி வாதி கக்ஷி பிரதி கக்ஷி என்ற ரீதியில் பிரசண்ட கோலா ஹலங்கள் செய்யப் பயன் படுகின்றனவேயன்றி வேறு பயன் அவைகளால் ஏற்படு வதில்லை. உண்மையான அத்வைத ஜ்ஞானம் உன் அருளால் ஏற்பட வேண்டுமே யொழிய வேறு வழியில்லை. ஸர்வவித்யைகளுக்கும் ஈசனாகிய நீயே ஞானத்தை யளிப்பவன்.

(விசேஷவுரை)

**अङ्गानि वेदाश्चत्वारो मीमांसा न्यायविस्तरः ।**
**पुराणं धर्मशास्त्रं च विद्या ह्येताश्चतुर्दश ॥**
**आयुर्वेदो धनुर्वेदो गान्धर्वश्चेत्यनुक्रमात् ।**
**विद्या ह्यष्टादश स्मृताः**

**அங்கா³னி வேதா³ஶ்சத்வாரோ மீமாம்ஸா ந்யாயவிஸ்தரஃ ।**
**புராணம் த⁴ர்மஶாஸ்த்ரம் ச வித்³யா ஹ்யேதாஶ்சதுர்த³ஶ ॥**
**ஆயுர்வேதோ³ த⁴னுர்வேதோ³ கா³ந்த⁴ர்வஶ்சேத்யனுக்ரமாத் ।**
**வித்³யா ஹ்யஷ்டாத³ஶ ஸ்ம்ருதாஃ**

என்று கூறப்பட்டன வித்யைகள்.

**सर्गश्च प्रतिसर्गश्च वंशो मन्वन्तराणि च ।**
**वंशानुचरितं चेति पुराणं पञ्चलक्षणम् –**

**ஸர்க³ஶ்ச ப்ரதிஸர்க³ஶ்ச வம்ஶோ மன்வந்தராணி ச ।**
**வம்ஶானுசரிதம் சேதி புராணம் பஞ்சலக்ஷணம் -**

என்று கூறப்பட்ட லக்ஷணமுடைய பதினெண் புராணங்கள் சைவம், பாசுபதம், காபாலம், பாஞ்சராத்ரம் முதலியன தந்திரங்கள். அக்னி ஸ்தம்பனம், ஜல ஸ்தம்ப னம் முதலியன கலைகள்.

**परमाद्वैतविज्ञानं प्रसादादेव नान्यथा ।**
**प्रसादे सति कीटो वा पतङ्गो वाऽथ वानरः ।**
**देवो वा दानवो वापि लभते ज्ञानमुत्तमम्**

**பரமாத்³வைதவிஜ்ஞானம் ப்ரஸாதா³தே³வ நான்யதா² ।**
**ப்ரஸாதே³ ஸதி கீடோ வா பதங்கோ³ வா(அ)த² வானரஃ ।**
**தே³வோ வா தா³னவோ வாபி லப⁴தே ஜ்ஞானமுத்தமம்**

என்பது ப்ரஹ்ம வசனம்.

**एष ह्येव साधु कर्म कारयति तं,**
**यमेभ्यो लोकेभ्य उन्निनीषते**

ஏஷ ஹ்யேவ ஸாது⁴ கர்ம காரயதி தம்,
யமேப்⁴யோ லோகேப்⁴ய உன்னினீஷதே

என்பது உபநிஷத்.

**तामविद्यां तथाभूतां भगवान् परमेश्वरः ।**
**संहरत्युदयन्नेव सहस्रांशुस्तमो यथा ॥**

**தாமவித்³யாம் ததா²பூ⁴தாம் ப⁴க³வான் பரமேஶ்வர: ।**
**ஸம்ஹரத்யுத³யன்னேவ ஸஹஸ்ராம்ஶுஸ்தமோ யதா² ॥**

என்பது ஈசன் அஜ்ஞானத்தை விலக்குகிறான் என்பதையும் உணர்த்துகிறது.

### - ⁎ ஶரணாக³ததீ³னோபேக்ஷணமயுக்தமிதி ப்ரார்த²னா ⁎ –

**பாபிஷ்டோ²(அ)ஹம் விஷயசபல: ஸந்ததத்³ரோஹஶாலீ**
**கார்பண்யைகஸ்தி²ரநிவஸதி: புண்யக³ந்தா⁴னபி⁴ஜ்ஞ: ।**
**யத்³யஷ்யேவம் தத³பி ஶரண த்வத்பதா³ப்³ஜம் ப்ரபன்ன**
**நைனம் தீ³னம் ஸ்மரஹர தவோபேக்ஷிதும் நாத² யுக்தம் ॥ 28 ॥**

**(பதவுரை)** சரணமடைந்த தீனனை கவனியாம் லிருப்பது தகுதியில்லை என வேண்டுகிறார்.

| | | |
|---|---|---|
| **ஸ்மரஹர** | = | மன்மத ஸத்ருவே, |
| **அஹம்** | = | நான், |
| **பாபிஷ்ட:** | = | மிகவும் பாபங்களைச் செய்வதில் முனைந்தவன், |
| **விஷய சபல:** | = | போக வஸ்துக்களில் சபல முடையவன். |
| **ஸந்ததத்³ரோஹஶாலீ** | = | சுருதி ஸ்மிருதி தேவகுருக்களின் விதிகளை எப்பொழுதும் மீறுகிறவன். |
| **கார்பண்யைகஸ்தி²ர நிவஸதி:** | = | அற்ப புத்தியுடன் கிலேசப்பட்டு வாழ்க்கை நடத்துவதையே மாறாத லக்ஷ்யமாக வுடையவன். |
| **புண்யக³ந்தா⁴னபி⁴ஜ்ஞ:** | = | புண்ணிய மென்பதை எள்ளளவும் செய்தறியாதவன். |
| **யத்³யஷ்யேவம் தத³பி** | = | நான் இவ்விதம் இருந்தபோதிலும், |
| **த்வத்பதா³ப்³ஜம்** | = | உன் திருவடித் தாமரைகளை |
| **சரணம் ப்ரபன்னம்** | = | சரணமடைந்த, |
| **தீ³னம் ஏனம்** | = | எளியவனாகிய என்னை, |
| **உபேக்ஷிதும்** | = | உதாஸீனம் செய்ய, |
| **ஹே நாத²** | = | ஓ ஸ்வாமியே |
| **தவ ந யுக்தம்** | = | உனக்கு நியாயமில்லை. |

**(கருத்துரை)** எவ்வளவு குற்றமுள்ளவனாக. இருந்தாலும் சரண மடைந்தவனை ரக்ஷிப்பது ஈசனின் இயல்பு. ஆகையால் தன்னிடத்தில் பாபங்களைச் செய்வதில் தீவிரமான ப்ரவ்ருத்தியும், புண்ணிய, லேசத்தையும் செய்யாத சுபாவமும் இருந்தாலும், தேகத்தையே ஆத்மா என்று நம்பினதால் ஈசுவரனின் உபதேசம் வேத மொழிகள் ஆசார்ய வாக்யங்கள் இவைகளை அலக்ஷ்யம் செய்த துரோஹியாகி

விட்டாலும் ஸம்ஸார வாழ்க்கையில் குடும்ப ரக்ஷணத்திற்காகப் பற்பல அற்ப காரியங்களில் ஈடுபட்டு மிகவும் கீழ்ப்பட்ட நிலையிலிருந்தாலும் சரணாகத ரக்ஷக னாகிய ஈசன் தன்னைக் காப்பாற்றியே ஆகவேண்டுமென வற்புறுத்துகிறார்.

**(விசேஷவுரை)** பல வகையான, வேதோல்லங்கனம், ஆசார்யவசனோல்லங் கனம், தேஹாத்ம புத்தி முதலிய துரோகங்கள் இருப்பதால் ஸந்தத த்ரோஹி என்றார். எவ்வித மிருப்பினும் என்னைக் காப்பாற்றாவிடில் உன்னுடைய ஈச்வரத் தன்மைக்கு இழுக்காகும். எனவே நிச்சயம் காப்பாற்றவேண்டுமென வற்புறுத்துகி றார்.

**- * अनङ्गीकारेऽगतिकत्वकथनम् * —**

**आलोच्यैवं यदि मयि भवान् नाथ दोषाननन्तान्**
**अस्मत्पादाश्रयणपदवीं नार्हतीति क्षिपेन्माम् ।**
**अद्यैवेमं शरणविरहाद्विद्धि भीत्यैव नष्टं**
**ग्रामो गृहत्याहिततनयं किन्नु मात्रा निरस्तम् ॥ २९ ॥**

**- * அனங்கீ$^3$காரே(அ)க$^3$திகத்வகத$^2$னம் * -**

**ஆலோச்யைவம் யதி$^3$ மயி ப$^4$வான் நாத$^2$ தோ$^3$ஷானனந்தான்**
**அஸ்மத்பாதா$^3$ஶ்ரயணபத$^3$வீம் நார்ஹதீதி க்ஷிபேன்மாம் ।**
**அத்$^3$யைவேமம் ஶரணவிரஹாத்$^3$வித்$^3$தி$^4$ பீ$^4$த்யைவ நஷ்டம்**
**க்$^3$ராமோ க்$^3$ரு'ஹத்யாஹிததனயம் கின்னு மாத்ரா நிரஸ்தம் ॥ 29 ॥**

**(பதவுரை)** நீ என்னை ஏற்காவிடில் நான் கதியற்ற வனாவேன் என்கிறார்.

| | | |
|---|---|---|
| **நாத$^2$** | = | இறைவனே, |
| **ஏவம்** | = | இவ்விதம், |
| **மயி** | = | என்னிடத்தில், |
| **அனனந்தான் தோ$^3$ஷான்** | = | கணக்கற்ற குற்றங்களை, |
| **ஆலோச்ய** | = | ஆராய்ந்து பார்த்து, |
| **அஸ்மத் பாதா$^3$ச்ரயண பத$^3$வீம்** | = | நம் சரணத்தைப் பற்றிக்கொள்ளும் தன்மைக்கு, |
| **நார்ஹதீ** | = | இவன் தகுந்தவனல்ல, |
| **இதி** | = | என்று, |
| **ப$^4$வான்** | = | தாங்கள், |
| **மாம்** | = | என்னை, |
| **யதி$^3$ ஷிபேத்** | = | தள்ளி விட்டால், |
| **சரண விரஹாத்** | = | வேறு சரணமடைய வழியில்லாமல், |
| **அத்யைவ** | = | இப்பொழுதே, |

| | | |
|---|---|---|
| **பீ[4]த்யா ஏவ** | = | பயத்தினாலேயே, |
| **இமம் நஷ்டம் வித்[3]தி[4]** | = | இவன் விநாசம் அடைந்தவன் ஆவன் என்று நிச்சயித்துக் கொள்ளவும், |
| **மாத்ரா** | = | தாயினால், |
| **நிரஸ்தம்** | = | துரத்தப்பட்ட, |
| **அஹிததனயம்** | = | பெற்றோர்களுக்குப் பிரதிகூலமான நடத்தையுடைய பிள்ளையை, |
| **கி[3]ராம கின்னு க்[3]ருஷ்ணாதி** | = | கிராமத்திலுள்ளோர் காக்க முன்வருவார்களா? |

**(கருத்துரை)** என் குற்றங்களையே எண்ணி இவன் நம்மிடம் சரண்புக யோக்யன் அல்லன் என்று என்னை நீ உதைத்துத்தள்ளி விடுவாயானால் வேறு வகை தெரியாமல் இந்த க்ஷணமே நான் பயத்தினால் ஹ்ருத்யம் வெடித்துப் போய் விடுவேன். தாய் வேண்டாமென்று தள்ளிய துஷ்டப்பிள்ளையை உலகத்தில் யார் ஏற்றுக் கொள்ளுவார்கள்.

**(விசேஷவுரை)**

**मातेव पुत्रान् रक्षख மாதேவ புத்ரான் ரக்ஷக[2]** என்பது **शतापराधिनमपि पुत्रं माता न हि त्यजेत् ஶதாபராதி[4]னமபி புத்ரம் மாதா ந ஹி த்யஜேத்** என்று ஆன்றோரும் **त्वं हि नः पिता योऽस्माकमविद्यायाः परं पारं तारयलि த்வம் ஹி நः பிதா யோ(அ)ஸ்மாகமவித்[3]யாயாः பரம் பாரம் தாரயலி** என்றும் **पितेव पुत्रमभिरक्षतादिमम् பிதேவ புத்ரமபி[4]ரக்ஷதாதி[3]மம்** என்றும் உள்ள வேத வாக்யங்களும் கவனிக்கவேண்டியன.

## -* भरन्यासपूर्वकप्रार्थना *–

**क्षन्तव्यं वा निखिलमपि मे भूतभावि व्यलीकं**
**दुर्व्यापारप्रवणमथवा शिक्षणीयं मनो मे ।**
**न त्वेवार्त्या निरतिशयया त्वत्पदाब्जं प्रपन्नं**
**त्वद्विन्यस्ताखिलभरममुं युक्तमीश प्रहातुम् ॥ ३० ॥**

## -* ப[4]ரந்யாஸபூர்வகப்ரார்த[2]னா *-

**க்ஷந்தவ்யம் வா நிகி[2]லமபி மே பூ[4]தபா[4]வி வ்யலீகம்**
**து[3]ர்வ்யாபாரப்ரவணமத[2]வா ஶிக்ஷணீயம் மனோ மே ।**
**ந த்வேவார்த்யா நிரதிஶயயா த்வத்பதா[3]ப்[3]ஜம் ப்ரபன்னம்**
**த்வத்[3]வின்யஸ்தாகி[2]லப[4]ரமமும் யுக்தமீஶ ப்ரஹாதும் ॥ 30 ॥**

**(பதவுரை)** ஸகல பாரங்களையு மீசனிடம் இறக்கிவிட்டு வேண்டுகிறார்.

**ஈஷா** = ஸ்வாமி,
**மே** = என்னுடைய,
**பூ4தபா4வி** = இறந்த காலத்திலும் வருங்காலத்திலு முண்டான,
**நிகி2லம் வ்யலீகம்** = எல்லா பாபங்களையும்,
**க்ஷந்தவ்யம் வா** = மன்னித்தலாவது வேண்டும்,
**அத2வா** = அல்லது,
**து3ர்வ்யாபாரப்ரவணம்** = நிஷித்த ஆசாரங்களில் ப்ரவ்ருத்தியுடைய,
**மே** = எனது,
**மனோ வா** = மனதையாவது,
**சிக்ஷணீயம்** = அடக்கு முறைகளால் சிக்ஷிக்க வேண்டும்,
**நிரதிசயயா** = அதிதீவ்ரமான,
**ஆர்த்யா** = மனோவேதனையால்,
**த்வத் பதா3ப்3ஜம்** = உனது திருவடிகளை,
**ப்ரபன்னம்** = சரணமடைந்த,
**த்வத்3வின்யஸ்தாகில ப3ரம்** = உன்னிடத்தில் ஸகல பாரத்தையுமிறக்கிய,
**அமும்** = இந்த என்னை,
**ப்ரஹாதும்** = கை விடுவதற்கு,
**நத்வேவ யுக்தம்** = உனக்கு நியாயமே ஆகாது.

**(கருத்துரை)** என்னை குற்றமுள்ளவனென்று தள்ளுவது உனக்கு அழகல்ல. என் குற்றங்களை மன்னித்தாவது அல்லது என் குற்றங்களுக்கேற்ற தண்டனையை விதித்தாவது என்னை உன் கிருபைக்குத் தகுந்தவனாகச் செய்து அங்கீகரிக்கத்தான் வேண்டும். மிக்க வருந்தி நீயே கதியென்று உன் காலடியில் விழுந்து உன்னிடமே ஸகல பாரத்தையும் ஒப்படைத்த ஒரு ஏழையை நிராகரிப்பது உன் பெருமைக்கு இழுக்கன்றோ? பாரத்தை ஈச்வரனிடம் ஒப்புவித்தலாவது, தான் என்ற அபிமானத்தை விட்டு, செய்பவன் செய்விப்பவன் எல்லாம் அந்தர்யாமியான பரமேச்வரனே என்று நம்பி எல்லாப் பொறுப்புகளையும் அவனிடமே சுமத்தி யிருத்தலாகும்.

**(விசேஷவுரை)**

**यदि संन्यस्य कर्माणि युक्त आसीत मत्परः ।**
**मदर्थमपि कौन्तय ॥**

**யதி3 ஸம்ந்யஸ்ய கர்மாணி யுக்த ஆஸீத மத்பரः ।**
**மத3ர்த2மபி கௌந்தய ॥**

என்பது கீதை.

**ऐष ह्येव साधु कर्म कारयति तं यमेभ्यो लोकेभ्य उन्निनीषते**

**ஐஷ ஹ்யேவ ஸாது4 கர்ம காரயதி தம் யமேப்4யோ லோகேப்4ய உன்னினீஷதே**

என்பது உபநிஷத்.

### - * सर्वज्ञत्वदयानिधित्वादिकारणोपपादनम् *-

**सर्वज्ञस्त्वं निरुपधिकृपासागरः पूर्णशक्तिः**
**कस्मादेनं न गणयसि मामापदब्धौ निमग्नम् ।**
**एकं पापात्मकमपि रुजा सर्वतोऽत्यन्तदीनं**
**जन्तुं यद्युद्धरसि शिव कस्तावतातिप्रसङ्गः ॥ ३१ ॥**

### - * ஸர்வஜ்ஞத்வத3யாநிதி4த்வாதி3காரணோபபாத3னம் *-

**ஸர்வஜ்ஞஸ்த்வம் நிருபதி4க்ருபாஸாக3ர: பூர்ணஶக்தி:**
**கஸ்மாதே3னம் ந க3ணயஸி மாமாபத3ப்3தௌ4 நிமக்3னம் ।**
**ஏகம் பாபாத்மகமபி ருஜா ஸர்வதோ(அ)த்யந்ததீ3னம்**
**ஐந்தும் யத்3யுத்3த4ரஸி ஶிவ கஸ்தாவதாதிப்ரஸங்க3: ॥ 31 ॥**

**(பதவுரை)** முற்றுமுணர்ந்த கருணைக் கடலாதலால் காத்தல் அவசியம் எனக் கூறுக்கிறார்.

| | | |
|---|---|---|
| **ஶிவ** | = | சிவனே, |
| **த்வம்** | = | நீ, |
| **ஸர்வஜ்ஞ:** | = | எல்லாமறிந்தவன், |
| **நிருபதி4க்ருபாஸாக3ர:** | = | எல்லையற்ற கருணைக் கடலாகியவன், |
| **பூர்ணஶக்தி:** | = | நிரம்பிய சக்தியுடையவன், |
| **ஆபத3ப்3தௌ4** | = | ஆபத்துக்கடலில், |
| **நிமக்3னம்** | = | மூழ்கிய, |
| **ஏனம் மாம்** | = | இந்த என்னை, |
| **கஸ்மாத்** | = | ஏன், |
| **ந கு3ணயஸி** | = | கவனிக்கவில்லை, |
| **பாபாத்மகமபி** | = | பாபியான ஹ்ருதய முடையவனாயினும், |
| **ருஜா** | = | வேதனையினால், |
| **ஸர்வத:** | = | எல்லா விதத்திலும், |
| **அத்யந்ததீ3னம்** | = | மிகவும் திக்கற்ற, |
| **ஏகம் ஐந்து** | = | ஒரு பிராணியை, |
| **யதி3 உத்தரஸி** | = | நீ கை தூக்கிவிடுவாயானால், |

| | | |
|---|---|---|
| **தாவதா** | = | அம்மட்டில், |
| **தவ** | = | உனக்கு, |
| **க:** | = | என்ன, |
| **அதிப்ரஸங்க[3]:** | = | முறைத்தவறு (ஏற்படும்). |

**(கருத்துரை)** ஆபத்தில் மூழ்கிக்கிடக்கும் என்னை பரிபூர்ணசக்தியுடைய நீ ரக்ஷிக்காமல் இருக்கலாமா? நீ ஸர்வேச்வரனாதலால் வேறு ஒருவரின் உத்தரவைப் பெற்றுத்தான் என்னை காப்பாற்றவேண்டு மென்பதில்லை. நீ ஸர்வஜ்ஞனாதலால் என் கஷ்டதசையை அறியாமலில்லை. நீ கருணைக்கடலாதலால் என்பால் இரங்கக் கூடாதவனில்லை. நான் பாபி என்றாலும் பலவிதத்திலும் பொறுக்க முடியாத துன்பங்களை அனுபவித்து மிக்க பரிதாப நிலையை அடைந்திருக்கும் என்னை ஒரு வனை மட்டும் காப்பாற்றிவிட்டால் உனக்கு என்ன குடிமூழ்கிப்போய்விடும். இதைச் ஆலோசித்துப்பார்.

**(விசேஷவுரை)**

**यः सर्वज्ञः सर्ववित्, परास्य शक्तिर्विविधैव श्रूयते ।**

**யஃ ஸர்வஜ்ஞஃ ஸர்வவித், பராஸ்ய ஶக்திர்விவிதை[4]வ ஶ்ரூயதே ।**

என்பது உபநிஷத். பாரதத்தி

**ज्ञानानि च वशे यस्य तारकादोत्यशेषतः ।**

**ஜ்ஞானானி ச வஶே யஸ்ய தாரகாதோ[3]த்யஶேஷதஃ ।**

கங்காதரணம், காலகூட விஷமுண்டல் முதலியவற்றால் ஸர்வசத்தியும், மிகுந்த தயையும் கண்டு கொள்க.

**- * क्षुण्णा चैवं प्रार्थनारीतिरित्याह * -**

**अत्यन्तार्तिव्यथितमगतिं देव मामुद्धरेति**
**क्षुण्णो मार्गस्तव शिव पुरा केन वाऽनाथनाथ ।**
**कामालम्बे बत तदधिकां प्रार्थनारीतिमन्यां**
**त्रायस्वैनं सपदि कृपया वस्तुतच्चं विचिन्त्य ॥ ३२ ॥**

**- * க்ஷுண்ணா சைவம் ப்ரார்த[2]நாரீதிரித்யாஹ * -**

**அத்யந்தார்திவ்யதி[2]தமக[3]திம் தே[3]வ மாமுத்[3]த[4]ரேதி**
**க்ஷுண்ணோ மார்க[3]ஸ்தவ ஶிவ புரா கேன வா(அ)நாத[2]நாத[2] ।**
**காமாலம்பே[3] ப[3]த தத[3]தி[4]காம் ப்ரார்த[2]நாரீதிமன்யாம்**
**த்ராயஸ்வைனம் ஸபதி[3] க்ருபயா வஸ்துதச்சம் விசிந்த்ய ॥ 32 ॥**

## ஆத்மார்பண ஸ்துதி

**(பதவுரை)** வேண்டுகோளுக்கு இம்முறையே வழக்கமுள்ளது எனக் கூறுகிறார்.

**அநாத[2]நாத[2]** = அனாதைகளுக்கு ரக்ஷகனே!
**தே[3]வ** = ஸ்வாமி,
**அத்யந்தார்திவ்யதி[2]தம்** = தீவிரமான துக்கங்களால் மனம் நொந்து போன,
**அக[3]திம்** = வேறு ரக்ஷகனில்லாத
**மாம்** = என்னை,
**உத்[3]த[4]ர** = கரையேற்று,
**இதி** = என்று,
**தவ மார்க:** = உன்னிடம் அடைக்கலம் புகும் வழி,
**புரா** = புராதனமாய்,
**கேன வா க்ஷுண்ணா:** = யாரால்தான் பழக்கத்திற்குக் கொண்டுவரப்பட்டதோ ஆச்சரியம்,
**தத[3]தி[4]காம்** = அதைவிட மேலான,
**காம் அந்யாம்** = வேறு எந்த விதமான,
**ப்ரார்தனாரீதிம்** = பிரார்த்தனை செய்து கொள்ளும் வழியை,
**ஆலம்பே[3]** = நான் அநுசரிப்பேன்,
**ப[3]த** = ஐய்யோ!
**வஸ்து தத்வம் விசிந்த்ய** = இந்தமாதிரி நிலையை முன்யோசனை பண்ணி,
**ஏவம்** = இந்த என்னை,
**ஸபதி[3]** = உடனே,
**க்ருபையா** = கருணையினால்,
**ப்ராயஸ்வ** = காப்பாற்று.

**(கருத்துரை)** ஹே ஈச்வர! நான் கணக்கிட முடியாத கிலேசங்களால் பீடிக்கப் பட்டிருக்கிறேன். எனக்கு உன்னைத் தவிர வேறு யாரும் கதியில்லை. என்னை இந்த துக்கஸாரத்திலிருந்து கரையேற்றிவிடு என்றவாறு உன்னிடம் பிரார்த்தனை செய்து கொள்ளும் ரீதியானது எந்தப் புண்ணியவானால் தொடங்கப்பட்டதோ! அதுவே அநாதிகாலமாய் அநாதைகளுக்கு பிரார்த்தனா ரீதியாக வழங்கி வருகிறது. ஆதலால் நானும் அவ்வழியையே பின்பற்றி எனது துக்கங்களை உன்னிடம் தெரிவித்துக் கொண்டு உன்னை ரக்ஷகன் என்று சரணமடைகிறேன். இப்புராதன ரீதியைவிட்டு வேறு புதிதாய் உன்னிடம் பிரார்த்தனை செய்து கொள்ளும் ரீதியை நான் எவ்விதம் அநுஷ்டிக்க முடியும்? இந்த நிலையை யுணர்ந்து என்னை நீ உடனே தயவுடன் காப்பாற்ற முன்வரவேண்டும் ஈச்வர! 'நான்' அநாதை, பாபி, துக்கிதன், எனக்கு உன்னைத் தவிர வேறு கதி கிடையாது, நீ தான் என்னை ரக்ஷிக்க வேண்டும்.' என்று தான் பக்தர்கள் உன்னை வேண்டிக் கொள்ளுவது வழக்கம். அப்படியேதான் நானும் உன்னை வேண்டிக்கொள்ளுகிறேன். ஒரு ஜீவன் ஈசனிடம் தன் பரிதாபத்தையும் பிரார்த்தனையையும் தெரிவித்துக்கொள்ள வேறு வழி கிடையாது. அநாதிகாலமாய் சரணமடைந்த பக்தர்களை ரக்ஷித்த நீ என்னையும் ரக்ஷிப்பாயாக.

(விசேஷவுரை)

**कोटय ब्रह्महत्यानाम् अगम्यागमकोटयः ।**
**सद्यः प्रलयमायान्ति महादेवेति कीर्तनात् ॥**

**महादेवेति वक्तारं दृष्ट्वा तु यमकिङ्कराः ।**
**पलायन्ते महाभीता स्मृत्वा तु यमशासनम् ॥**

**கோடய ப்³ரஹ்மஹத்யானாம் அக³ம்யாக³மகோடய: ।**
**ஸத்³ய: ப்ரலயமாயாந்தி மஹாதே³வேதி கீர்தனாத் ॥**

**மஹாதே³வேதி வக்தாரம் த்³ருஷ்ட்வா து யமகிங்கரா: ।**
**பலாயந்தே மஹாபீ⁴தா ஸ்ம்ருத்வா து யமஶாஸனம் ॥**

என்பது சிவரஹஸ்யம். ஜீவ ஈச்வரரூபமான வஸ்து தத்துவத்தை விசாரித்து அறிந்த மாத்திரத்தில் சோக நிவ்ருத்தி என்பது உபநிஷத்துக்களின் ஸாரம்.

## जीवेश्वरवस्तुतस्वनिरूपणं, आत्मनो मर्कटत्वनिरूपणं च

**एतावन्तं भ्रमणनिचयं प्रापितोऽयं वराकः**
**श्रान्तः स्वामिन्नगतिरघुना मोचनीयस्त्वयाहम् ।**
**कृत्याकृत्यव्यपगतमतिर्दीन शाखामृगोऽयं**
**संताड्यैनं दशनविवृतिं पश्यतस्ते फलं किम् ॥ ३३ ॥**

## ஜீவேஶ்வரவஸ்துதஸ்வநிரூபணம், ஆத்மனோ மர்கடத்வநிரூபணம் ச

**ஏதாவந்தம் ப்⁴ரமணனிசயம் ப்ராபிதோ(அ)யம் வராக:**
**ஶ்ராந்த: ஸ்வாமின்னக³திரகு⁴னா மோசனீயஸ்த்வயாஹம் ।**
**க்ருத்யாக்ருத்யவ்யபக³தமதிர்தீ³ன ஶாகா²ம்ருகோ³(அ)யம்**
**ஸந்தாட்³யைனம் த³ஶனவிவ்ருதிம் பஶ்யதஸ்தே ப²லம் கிம் ॥ 33 ॥**

(பதவுரை) ஜீவன் ஈச்வரன் என்ற வஸ்து தத்துவத்தை நிரூபணம் செய்து தன்னை குரங்கு போலுள்ளவன் என்றும் கூறுகிறார்.

**ஸ்வாமின்** = ஸ்வாமி!,
**ஏதாவந்தம்** = இந்த மட்டும்,
**ப்⁴ரமணனிசயம்** = அதிக அலைச்சலை,

| | | |
|---|---|---|
| **ப்ராபித:** | = | அடைவிக்கப்பட்ட, |
| **அயம் வராக:** | = | இந்த அற்ப பிராணி, |
| **ஶ்ராந்த:** | = | சிரமமடைந்து சோர்ந்து போய்விட்டது, |
| **அது4னா** | = | இப்பொழுது, |
| **அக3தி:** | = | நிர்கதியாய் நிற்கும், |
| **அஹம்** | = | நான், |
| **த்வயா** | = | உன்னால், |
| **மோசநீய:** | = | விடுவிக்கத் தகுந்தவன், |
| **க்ருத்யாக்ருத்யவ்ய பக3தமதி** | = | செய்யத்தகுந்தது தகாதது என்ற பகுத்தறிவு இல்லாத, |
| **அயம்தீ3ன ஶாகா2ம்ருக:** | = | இது ஒரு எளிய குரங்கு, |
| **ஏனம்** | = | இதை, |
| **ஸந்தாட்3ய** | = | அடித்து, |
| **த3சன விவ்ருதிம்** | = | இதன் பல் இளிப்பை, |
| **பச்யத:** | = | பார்கின்ற, |
| **தே** | = | உனக்கு, |
| **கிம்ப2லம்** | = | யாது பயன்? |

**(கருத்துரை)** ஒரு குரங்காட்டி தன்னால் பழக்கப்பட்ட குரங்கை வீடுதோறும் கொண்டுபோய் ஆங்காங்கு அதைப் பற்பல விதமாய் ஆட்டிவைக்கிறான். அவ்விதம் அலைந்து திரிந்து கிலேசப்பட்ட அக்குரங்கு தன் களைப்பின் மிகுதியைப் பொறுக்க மாட்டாமல் மிகவும் பரிதாபமாகப் பல்லையிளிக்கிறது. அவ்விதம் இளிப்பது இனி என்னை விட்டுவிடமாட்டாயா? என்பது போல் தோன்றுகிறது. சஞ்சல ஸ்வபாவ முள்ளவனாதலாலும் அறிவீனனாதலாலும் ஜீவன் அக்குரங்கிற்குச் சமானமாகிறான்.

இவன் கோடிக்கணக்கான கர்ப்பவாஸத்தை அடைகிறான். காலனின் தண்டத் தாலடிக்கப்பட்டுப் பல்லை இளிக்கிறான். ஜன்மந்தோறும் தனது நன்மையை அறிந்து கொள்ளாமல் பலவிதமான சேஷ்டைகளைச் செய்து இடைவிடாது கிலேசங்களை அனுபவிக்கிறான். இப்படி இந்தக் குரங்கை ஆட்டிவைப்பதில் ஈசனுக்கு யாது பயன்? குரங்காட்டி போல அவர் பிச்சை எடுத்து ஜீவனம் செய்பவரா? அல்லது குறும்புள்ள பையனைப் போல குரங்கைத் துன்புறுத்தி வேடிக்கை பார்ப்பவரா? இந்தக் குரங்கு படும் அவஸ்தையையும் அது மிகப் பரிதாபமாய்ப் பல்லிளிப்பதையும் பார்த்து தயவு ஏற்பட்டு ஸர்வேச்வரன் இதை அவிழ்த்து விடக்கூடாதா?

**(விசேஷவுரை)**

**भोगार्थं सृष्टिरित्येके क्रीडार्थमिति चापरे ।**
**देवस्यैष स्वभावोऽयमाप्तकामस्य का स्पृहा ॥**

**போ4கா3ர்த2ம் ஸ்ருஷ்டிரித்யேகே கோடா3ர்த2மிதி சாபரே ।**
**தே3வஸ்யைஷ ஸ்வபா4வோ(அ)யமாப்தகாமஸ்ய கா ஸ்ப்ருஹா ॥**

என்பது சுருதி. சங்கரபகவத் பாதாசாரியார் சிவானந்த லஹரியில் மனத்தைக் குரங்காக வர்ணித்து கபாலமெடுத்து பிசைஷவாங்கும் உனக்கு ஸாதனமாக எனது மனத்தை உன் வசப்படுத்திக் கொள் என்று கூறுவதும் ஈண்டு கவனிக்கத்தக்கது.

## - * ईशकृपाप्राप्तिभाग्याभावहेतुप्रश्नः * -

**माता तातः सुत इति समाबध्य मां मोहपाशै-**
**रापात्यैवं भवजलनिधौ हा किमीश त्वयाऽऽप्तम् ।**
**एतावन्तं समयमियती मार्तिमापादितेऽस्मिन्**
**कल्याणी ते किमिति न कृपा कापि मे भाग्यरेखा ||३४||**

## - * ஈஶக்ருபாப்ராப்திபா4க்3யாபா4வஹேதுப்ரஶ்ன: * -

**மாதா தாத: ஸுத இதி ஸமாப3த்4ய மாம் மோஹபாஶை:**
**ராபாத்யைவம் ப4வஜலநிதௌ4 ஹா கிமீஶ த்வயா(ஆ)ப்தம் ।**
**ஏதாவந்தம் ஸமயமியதீ மார்திமாபாதி3தே(அ)ஸ்மின்**
**கல்யாணீ தே கிமிதி ந க்ருபா காபி மே பா4க்3யரேகா2 ||34||**

**(பதவுரை)** ஈசனுடைய கிருபையை அடையக்கூடிய பாக்யம் ஏன் இல்லை என வினவுகிறார்.

| | | |
|---|---|---|
| **ஈசா** | = | ஹே ஈச்வர, |
| **மாதா தா: ஸுத: இதி** | = | தாய் தந்தை பிள்ளை என்றவாறு, |
| **மோஹபாஶை:** | = | ஆசைக்கயிறுகளால், |
| **மாம்** | = | என்னை, |
| **ஸமாப3த்4ய** | = | கட்டி, |
| **ப4வஜலநிதௌ4** | = | ஸம்ஸாரக்கடலில், |
| **ஆபாத்ய** | = | தள்ளி, |
| **ஹா** | = | ஐய்யோ, |
| **த்வயா** | = | உன்னால், |
| **கிம் ஆப்தம்** | = | என்ன பயன் அடையப்பட்டது?, |
| **ஏதாவந்தம் சமயம்** | = | இவ்வளவு காலமாக, |
| **இயதீ ஆர்த்தி** | = | இத்துணைக் கஷ்டத்தை, |
| **ஆபாதி3தே** | = | அடைவிக்கப்பட்ட, |
| **அஸ்மின்** | = | இந்த என் விஷயத்தில், |
| **கல்யாணீ** | = | க்ஷேமத்தைச் செய்யக் கூடிய, |
| **தே க்ருபா** | = | உனது கருணை, |
| **கிமிதி ந** | = | ஏன் ஏற்படவில்லை?, |
| **மே** | = | எனக்கு, |
| **காபி பா4க்யரேகா2** | = | கொஞ்சமாவது புண்ணியம் (ஏன் ஏற்படவில்லை) |

**(கருத்துரை)** ஹே ஈச்வர! தாய் தகப்பன் பிள்ளை பெண்டிர் என்றவாறு பற்பல பந்தங்களால் என்னைப் பிணைத்து இந்த ஸம்ஸார மென்ற ஸமுத்திரத்தில் இப்படித் தள்ளியிருக்கிறாயே! இதனால் உனக்கு என்ன லாபம்? என்னை இத்தனை நாள் கஷ்டப்படுத்தியது போதாதா? இனியாவது எனக்கு நல்ல காலம் பிறந்து உனக்கு என்னிடம் தயவு உண்டாகாதா? உனது க்ருபை எனது பாக்யம்.

**(விசேஷவுரை)**

**पुण्यैर्देवत्वमाप्नोति पापैः स्थावरतामियात् ।**
**समाभ्यां पुण्यपापाभ्यां मानुष्यं प्राप्नुयान्नरः ॥**

**புண்யைர்தே³வத்வமாப்னோதி பாபை꞉ ஸ்தா²வரதாமியாத் ।**
**ஸமாப்⁴யாம் புண்யபாபாப்⁴யாம் மானுஷ்யம் ப்ராப்னுயான்னர꞉ ॥**

என்பது புராண வசனம்.

**यदि मे पुण्यमस्तीह कुतो नायाति ते कृपा ?**

**யதி³ மே புண்யமஸ்தீஹ குதோ நாயாதி தே க்ருபா?**

பாகவதத்திலும்

**आत्मजायासुतागारसुतद्रविणबन्धुषु ।**
**निरूढमूल- हृदयः आत्मानं बहु मन्यते ॥**
**ध्रुवाणि मन्यते मोहात् गृहक्षेत्रवसूनि च ।**

**ஆத்மஜாயாஸுதாகா³ரஸுதத்³ரவிணப³ந்து⁴ஷு ।**
**நிரூட⁴மூல- ஹ்ருத³ய꞉ ஆத்மானம் ப³ஹு மன்யதே ॥**
**த்⁴ருவாணி மன்யதே மோஹாத் க்³ருஹக்ஷேத்ரவஸூனி ச ।**

முதலியன புத்திராதிகள் பந்தமென்பதை வலியுறுத்துகின்றன.

### - * जीवेश्वरदायविभागविवादः * -

**भुङ्क्षे गुप्तं बत सुखनिधिं तात साधारणं त्वं**
**भिक्षावृत्तिं परमभिनयन्मायया मां विभज्य ।**
**मर्यादायाः सकलजगतां नायकः स्थापकस्त्वं**
**युक्तं किं तद्वद विभजनं योजयस्वात्मना माम् ॥३५॥**

## - * ஜீவேஶ்வரதா3யவிபா4க3விவாத3: * -

**பு4ங்க்ஷே கு3ப்தம் ப3த ஸுக2நிதி4ம் தாத ஸாதா4ரணம் த்வம்**
**பி4க்ஷாவ்ருத்திம் பரமபி4நயன்மாயயா மாம் விப4ஜ்ய |**
**மர்யாதா3யா: ஸகலஜக3தாம் நாயக: ஸ்தா2பகஸ்த்வம்**
**யுக்தம் கிம் தத்3வத3 விப4ஜனம் யோஜயகா2த்மனா மாம்** ||35||

**(பதவுரை)** ஜீவ ஈச்வரர்களாகிய நமக்கு ஆனந்த மென்னும் சொத்தை பங்கிடு வதில் விவாதம் ஏற்பட்டுள்ளது எனக் கூறுகிறார்.

| | | |
|---|---|---|
| **தாத** | = | அப்பா! |
| **சாதாரணம்** | = | நம்மிருவருக்கும் பொதுவாயுள்ளதாயினும், |
| **கு3ப்தம்** | = | மறைத்து (ஒளித்து) வைக்கப்பட்டதான, |
| **ஸுக2நிதி4ம்** | = | ஸுகமென்ற பொக்கிஷத்தை, |
| **பி4க்ஷாவ்ருத்திம் பரம் அபி4நயன்** | = | பிக்ஷை எடுத்து ஜீவிப்பதாக மிகவும் பாசாங்கு செய்து கொண்டு, |
| **த்வம்** | = | நீ, |
| **மாம் மாயயா விப4ஜ்ய** | = | என்னை வஞ்சனையாகப் பிரித்து வைத்துவிட்டு (மாயை - அஜ்ஞானம். அஜ்ஞானத்தால் என்னை வேறுபடுத்தி விட்டு) |
| **பு4ங்க்ஷே** | = | நீயே அனுபவிக்கிறாய், |
| **ஸகலஜக3தாம் நாயக:** | = | எல்லாவுலகங்களையும் நடத்திவைப்பவனும், |
| **மர்யாதா3யா: ஸ்தா2பக:** | = | கட்டுப்பாடுகளை ஏற்படுத்தியவனுமாக இருப்பவன், |
| **த்வம்** | = | நீ, |
| **தத்** | = | ஆதலால் (அம்மாதிரியான), |
| **விப4ஜனம்** | = | பிரிவினை, |
| **கிம்யுக்த** | = | பொருந்துமா? |
| **வத3** | = | சொல், |
| **மாம்** | = | என்னை, |
| **ஆத்மனா** | = | தன்னோடு, |
| **யோஜயக2** | = | சேர்த்துக்கொள். |

**(கருத்துரை)** பரமாத்மாவின் நித்ய ஸுக நிலையில் ஜீவாத்மாவுக்கும் ஸமமான பாத்யமிருக்க, மாயையினால் ஜீவாத்மா அந்த ஸுகாநுபவத்திலிருந்து விலக்கப்பட்டு பல கிலேசங்களை அனுபவிக்கின்றான் என்ற வேதாந்த தத்துவத்தை ஒரு லௌகிக உதாஹரணத்தை உட்கருத்தாக வைத்துப் பேசுகிறார். தகப்பனாயிரு க்கும் நீ உனக்கும் எனக்கும் பொதுவான ஆத்ம சுகம் என்ற ஐச்வரியத்தை எனக்கு ஆளக் கொடுக்காமல் என்னை வஞ்சனையாக பாகம் செய்து விலக்கிவிட்டு நீயும் ஏதோ பிச்சை எடுத்து ஜீவிப்பவன் போல பாசாங்கு செய்துகொண்டு தனிமையில் அந்த ஐச்வரியத்தை நீயே அநுபவிக்கிறாயே! இது எப்படி நியாயமாகும்? உலகத்தவர்

களுக்கு நியதிகளை விளக்கும் வேதங்களையும் தர்மசாஸ்திரங்களையும் ஏற்படுத்திய நீயே இவ்விதம் அக்கிரமம் செய்தால் யாரிடம் முறையிடுவது? உனக்கு மேல் அதிகாரி யிருந்தாலும் அவரிடம் முறையிடலாம். நியே யாவர்க்கும் மேலான பிரபுவாதலால் எனக்கு உன்னைத் தவிர முறையிடுவதற்கு வேறு புகலிடமும் கிடையாது. மாயை என்பது அவித்யை. அது தான் ஜீவாத்மா பரமாத்மாவினின்று விலகி யிருப்பதற்குக் காரணம். தாருகாவனத்தில் மஹர்ஷிகளுக்கு ஜ்ஞானோப தேசம் செய்யும் பொருட்டு லீலையாக பகவான் பிக்ஷை எடுத்தார் என்பது புராண ப்ரஸித்தம்.

**(விசேஷவுரை)** பகவானே உலகத்தில் நியதிகளை ஏற்படுத்தியவர் என்பதை

**एष सेतुर्विधरण एषां लोकानां असंभेदाय**

**ஏஷ ஸேதுர்வித⁴ரண ஏஷாம் லோகானாம் அஸம்பே⁴தா³ய**

என்ற உபநிஷத் வாக்யம் கூறுகிறது.

**अस्य महतो भूतस्य निःश्वसितमेतदृग्वेदो यजुर्वेदः सामवेदः**

**அஸ்ய மஹதோ பூ⁴தஸ்ய நிːஶ்வஸிதமேதத்³ருக்³வேதோ³ யஜுர்வேத³ː ஸாமவேத³ː**

என்ற உபநிஷத்தும்

**शास्त्रयोनित्वात्** **ஶாஸ்த்ரயோனித்வாத்**

என்பது முதலிய ப்ரஹ்ம சூத்திரமும்,

**यस्य निःश्वसितं वेदा यो वेदेभ्योऽखिलं जगत्-**

**யஸ்ய நிːஶ்வஸிதம் வேதா³ யோ வேதே³ப்⁴யோ(அ)கி²லம் ஜக³த்-**

என்ற வேத பாஷ்யகார வசனமும் ஈசனே ஸகல ஜகத்தின் நியதிகளை நிலை நிறுத்த வேதாதிகளை ஏற்படுத்தியவர் என்பதைத் தெளிவுறச்செய்யும். அவனே ஸ்கல ஜகந்நாயகன் என்பதை

**तमीश्वराणां परमं च दैवतम्**

**தமீஶ்வராணாம் பரமம் ச தை³வதம்**

என்பது முதலிய பாரத வாக்யங்கள் வெளிப்படுத்துவன.

## - * भक्तपादधूलिभिः आसनः शरीरारम्भप्रार्थना * -

न त्वा जन्मप्रलयजलधेरुद्धरामीति चेद्धीः
आस्तां तन्मे भवतु च जनिर्यत्र कुत्रापि जातौ ।
त्वद्भक्तानामनितरसुखैः पादधूलीकिशोरैः
आरब्धं मे भवतु भगवन् भावि सर्वं शरीरम् ॥ ३६ ॥

## - * ப$^4$க்தபாத$^3$தூ$^4$லிபி$^4$: ஆஸன: ஶரீராரம்ப$^4$ப்ரார்த$^2$னா * -

**ந த்வா ஜன்மப்ரலயஜலதே$^4$ருத்$^3$த$^4$ராமீதி சேத்$^3$தீ$^4$:**
**ஆஸ்தாம் தன்மே ப$^4$வது ச ஜநிர்யத்ர குத்ராபி ஜாதௌ ।**
**த்வத்$^3$ப$^4$க்தாநாமநிதரஸுகை$^2$: பாத$^3$தூ$^4$லீகிஶோரை:**
**ஆரப்$^3$த$^4$ம் மே ப$^4$வது ப$^4$க$^3$வன் பா$^4$வி ஸர்வம் ஶரீரம் ॥ 36 ॥**

**(பதவுரை)** எனது அடியவர்களின் பாத தூளியீனால் எனது உடல் உண்டாகட்டும் என வேண்டுகிறார்.

| | | |
|---|---|---|
| **த்வா** | = | உன்னை, |
| **ஜன்மப்ரலயஜலதே$^4$** | = | பிறவித் தொடர்யென்ற துக்கத்தினின்றும், |
| **ந உத்$^3$த$^4$ராமி** | = | கரையேற்ற மாட்டேன், |
| **இதி** | = | என்று, |
| **சேத்** | = | உனது கருத்தானால், |
| **மே** | = | எனக்கு, |
| **தத் ஆஸ்தாம்** | = | அப்பிறவி இருக்கட்டும், |
| **ஜநி: ச** | = | பிறவியும், |
| **யத்ர குத்ராபி ஜாதௌ** | = | எந்த ஜாதியில் வேண்டுமானாலும், |
| **ப$^4$வது** | = | ஏற்படட்டும், |
| **ப$^4$க$^3$வன்** | = | ஓ ஸ்வாமி, |
| **மே பா$^4$வி ஸர்வம் ஶரீரம்** | = | எனக்கு ஏற்படப்போகிற எல்லா சரீரமும், |
| **த்வத்$^3$ப$^4$க்தானாம்** | = | உன் பக்தர்களுடைய, |
| **அநிதரஸுகை$^2$:** | = | உன்னிடத்திலன்றி வேறு எங்கும் ஸுகத்தை யறியாத, |
| **பாத$^3$தூ$^4$லீகிஶோரை:** | = | கால் தூசித் திவிலைகளால், |
| **ஆரப்$^3$த$^4$ம் ப$^4$வது** | = | உண்டாக்கப்பட்டதாய் இருக்கட்டும். |

**(கருத்துரை)** எவ்விதத்திலும் உன்னை ஜனன மரணங்களிலிருந்து விடுவிக்க முடியாது என்று உனது தீர்மானமாகில் எனக்கு அளிக்கப்படும் சரீரமானது எந்த ஜாதியில் என்னைப் பிறக்கச் செய்வதானாலும் சரி உன் பக்தர்களின் கால் பட்டதூளிகளால் அமைக்கப் பெற்றதாயிருக்கட்டும் என்றுதான் பிரார்த்தித்துக்

கொள்ளுகிறேன். ஏனெனில் அப்பொழுது எனக்கு உன்னிடம் இடைவிடாத சஞ்சல மற்ற பக்தி ஏற்பட ஹேதுவாகும். பெரியோர்களின் பாத தூளி சரீராரம்பத்திற்கு எப்படிக் காரணமாகும் என்றால் மாதாபிதாக்கள் உட்கொண்ட அன்ன பானாதிகளில் அவை சம்பந்தப்பட்டிருப்பதன் மூலம் என்று கூறலாம். அல்லது **आलिप्तं ஆலிப்தம்** என்பதற்குப் பதிலாய் **आरब्धं ஆரப்த4ம்** என்ற பாடத்தை எடுத்துக்கொண்டால் பால்யம் முதல் ஸாதுக்களின் பாத தூளி சரீரத்தில் படுவது அநேக ஸந்தர்ப்பங்க ளில் ஸுலபமாகும்.

**(விசேஷவுரை)**

**समस्त संपत्समवाप्तिहेतवः समुत्थिता पत्कुलधूमकेतवः ।**
**अपारसंसारसमुद्रसेतवः पुनन्तु मां ब्राह्मणपादपांसवः ॥**

**ஸமஸ்த ஸம்பத்ஸமவாப்திஹேதவ: ஸமுத்தி2தா பத்குலதூ4மகேதவ: |**
**அபாரஸம்ஸாரஸமுத்3ரஸேதவ: புனந்து மாம் ப்3ராஹ்மணபாத3பாம்ஸவ: ||**

என்று பிராமணர்களின் பாத தூளியின் மகிமை சொல்லப்பட்டிருக்கிறது.

**तदन्तरप्रतिपत्तौ रंहति संपरिष्वक्तः प्रश्ननिरूपणाभ्यां –**

**தத3ந்தரப்ரதிபத்தௌ ரம்ஹதி ஸம்பரிஷ்வக்த: ப்ரஸ்னநிரூபணாப்4யாம் -**

என்ற ப்ரஹ்ம ஸூத்ரத்தின் பாஷ்யத்திலும், சாந்தோக்யம் பஞ்சாக்னி வித்யை கூறுமிடத்திலும் ஜீவனுடைய வேறு சரீர ப்ரவேசம். விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

**- * कीटादिजन्मप्राप्तावपि ईश्वरचरणान्तिकस्थितिप्रार्थना * –**

**कीटा नागास्तरव इति वा किं न सन्ति स्थलेषु**
**त्वत्पादाम्भोरुहपरिमलोद्वा हिमन्दानिलेषु ।**
**तेष्वेकं वा सृज पुनरिमं नाथ दीनार्तिहारिन्**
**आतोषान्मां मृड भवमहाङ्गारनद्यां लुठन्तम् ॥ ३७ ॥**

**- * கீடாதி3ஜன்மப்ராப்தாவபி ஈஶ்வரசரணாந்திகஸ்தி2திப்ரார்த2னா * -**

**கீடா நாகா3ஸ்தரவ இதி வா கிம் ந ஸந்தி ஸ்த2லேஷு**
**த்வத்பாதா3ம்போ4ருஹபரிமலோத்3வா ஹிமந்தா3னிலேஷு |**
**தேஷ்வேகம் வா ஸ்ருஜ புனரிமம் நாத2 தீ3னார்திஹாரின்**
**ஆதோஷான்மாம் ம்ருட3 ப4வமஹாங்கா3ரனத்3யாம் லுட2ந்தம் || 37 ||**

**(பதவுரை)** புழு முதலிய பிறவி எடுப்பினும் உனது திருவடியருகில் இருத்தல் வேண்டுமென்கிறார்.

| | | |
|---|---|---|
| **கீடா:** | = | புழுக்கள், |
| **நாக:** | = | பாம்புகள், |
| **தரவ:** | = | மரங்கள், |
| **இதி** | = | என்றவாறு, |
| **த்வத்பாதா3ம்போ4ருஹ பரிமலோத்3வா ஹிமந்தா3னிலேஷு** | = | உன் திருவடியாகிற தாமரைப் பூவின் நறுமணத்தைப் பரப்பும் தென்றல் வீசுகிறன்ற |
| **ஸ்தலேஷு** | = | பிரதேசங்களில், |
| **கிம் வா ந ஸந்தி** | = | இருக்கவில்லையா?, |
| **தீ3னார்திஹாரின் ம்ருட3** | = | பரிதவித்தவர்களின் கிலேசங்களைப் போக்கி சுகமளிக்கும், |
| **நாத** | = | பிரபுவே, |
| **ப4வமஹாங்கா3 ரனத்3யாம் லுட2ந்தம்** | = | ஸம்ஸாரமாகிற பெரிய நெருப்பு நதியில் உருண்டு வரும், |
| **இமம் மாம்** | = | இந்த ஜீவனாகிய என்னை, |
| **தே** | = | உனக்கு, |
| **ஆ தோஷாத்** | = | திருப்தி ஏற்படும் வரையில், |
| **தேஷுவா** | = | அவைகளிலாவது, |
| **ஏகம் ஸ்ருஜ** | = | ஒன்றாகப் படைப்பாயாக. |

**(கருத்துரை)** மனுஷ்ய ஜன்மம் தான் வேண்டுமென்று நான் கேழ்க்கவில்லை. புழு பூச்சி பாம்பு மரம் என்றவாறு எவ்வளவோ ஜீவராசிகள் இருக்கின்றனவே! அவற்றில் ஒன்றாய் என்னைச் சிருஷ்டித்தாலும் சம்மதமே. ஆனால் அப்பிரதேசத்தில் நான் சஞ்சரிக்குமிடம் உன் பாதத்தில் பட்ட இளங்காற்று வீசுமிடமாக இருந்தால் போதும். இந்த ஜனன மரணமென்னும் நெருப்பு நதியில் கிடந்து புரளும் எனக்கு உன் சரணகமலத்தின் மணங்கமழும் ஜில்லென்ற மந்த மாருதம் ஆறுதலையளிக்கட்டும். அவ்விதம் நீ கிருபை செய்வாயானால் எவ்வளவு காலம் இந்த ஸம்ஸாரத்தில் என்னைத் தள்ளிக்கொண்டிருந்தாலும் எனக்கு ஆக்ஷேபணை இல்லை. கிலேசப்படுபவர்களின் கிலேசங்களை நீக்கும் கருணாநிதியான நீ இந்த வரம் கொடுக்க மறுப்பாயா?

**(விசேஷவுரை)** சிவாநந்தலஹரியிலும்

**नरत्वं देवत्वं नगवनमृगप्वं मशेकता पशुत्वं कोटत्वं भवतु विहगत्वादिजननम् ।**
**सदा त्वत्पादाब्जस्मरणपरमानन्दलहरी विहारासक्तंचेत् हृदयमिह किं तेन वपुषा ॥**

**நரத்வம் தே3வத்வம் நக3வனம்ருக3ப்வம் மஶேகதா பஶுத்வம்**
**கோடத்வம் ப4வது விஹக3த்வாதி3ஜனனம் ।**
**ஸதா3 த்வத்பாதா3ப்3ஜஸ்மரணபரமானந்த3லஹரீ விஹாராஸக்தஞ்சேத்**
**ஹ்ருத3யமிஹ கிம் தேன வபுஷா ॥**

என்று கூறப்பட்டுள்ளது.

## - * आत्मनः चरमसमयेऽपीश्वरस्मृतिप्रार्थना * –

**काले कण्ठस्फुरद सुकलालेशसत्तावलोक-**
**व्याग्रोदग्रव्यसनरुदित स्निग्धरुद्धोपकण्ठे ।**
**अन्तस्तोदैरवधिरहितामार्तिमापाद्यमानेऽ-**
**प्यङ्घिद्वन्द्वे तव निविशतामन्तरात्मन्ममात्मा ॥ ३८ ॥**

## - * ஆத்மன: சரமஸமயே(அ)பீஶ்வரஸ்ம்ருதிப்ரார்த2னா * -

**காலே கண்ட2ஸ்பு2ரத3 ஸுகலாலேஶஸத்தாவலோக-**
**வ்யாக்3ரோத3க்3ரவ்யஸனருதி3த ஸ்னிக்3த4ருத்3தோ4பகண்டே2 ।**
**அந்தஸ்தோதை3ரவதி4ரஹிதாமார்திமாபாத்3யமானே(அ)-ப்**
**யங்கி4த்3வந்த்3வே தவ நிவிஶதாமந்தராத்மன்மமாத்மா ॥ 38 ॥**

**(பதவுரை)** இறுதிக்காலத்திலாவது உனது ஸ்மரணம் எனக்கு இருத்தல் வேண்டு மென்று கூறுகிறார்.

| | | |
|---|---|---|
| **கண்ட2ஸ்பு2ரத3 ஸுகலா** | = | நெஞ்சில் துடிக்கும் மெல்லிய, |
| **லேஶஸத்தாவலோக வ்யாக்3ரோத3க்3ரவ்ய ஸனருதி3த ஸ்னிக்3 த4ருத்3தோ4பகண்டே2** | = | பிராண வாயுவின் ஸூக்ஷ்மமான நடமாட்டத்தை பரீக்ஷித்தறிய அரும்பாடுபடும் ஸகல பந்து மித்திரர்களால் அருகாமையில் சூழப்பட்டும், |
| **அவதி4ரஹிதை** | = | எல்லையற்ற, |
| **அந்தஸ்தோதை3** | = | சுவாஸம் கபம் விக்கல் முதலிய ஆந்தரமான துன்பங்களால், |
| **ஆர்திம் ஆபாத்4யமனே** | = | வேதனை அடைவிக்கப்படும், |
| **காலேபி** | = | அந்த ஸமயத்திலாவது, |
| **ஹே அந்தராத்மன்** | = | அந்தர்யாமியாகவுள்ள பரமாத்மாவே, |
| **மம ஆத்மா** | = | என் ஜீவன், |
| **தவ** | = | உன்னுடைய, |
| **அங்க்ரித்3வந்த்3வே** | = | இரு பாதங்களில், |
| **நிவிசதாம்** | = | ஈடுபடவேண்டும். |

**(கருத்துரை)** அந்தியகாலத்தில் வைத்யர்கள் கை விட்டபிறகு பந்துக்களும் நண்பர்களும் கிரமமாக க்ஷீணித்துவரும் சுவாஸத்தை பரீக்ஷித்துக் கொண்டு பக்கத்தில் நெருக்கமாய்க் கூடிக்கொண்டு துக்கம் மிகுந்து ஓலமிடும் அந்த சமயத்தில், உயிர் வெளிச் செல்லுவதால் உண்டாகும் வேதனை, சரீரத்தினுள் பலவாறு பெருகி பொறுக்க முடியாதபடி துன்புறுத்தவும் கூடும். அந்தக்காலத்தில் கூட எனது அந்தக்கரணம் உனது திருவடிகளில் லயமடையவேண்டும்.

**(விசேஷவுரை)**

**एष त आत्मा अन्तर्याम्यमृतः -**

**ஏஷ த ஆத்மா அந்தர்யாம்யம்ருதঃ -**

என்கிற உபநிஷத் பரப்ரஹ்மமே ஜீவனின் வாஸ்தவமான ஸ்வரூபம் என்பது புலப்படும்.

## -* एतत्प्रार्थनादृढीकरणम् *-

**अन्तर्बाष्पाकुलितनयनानन्तरङ्गानपश्यन्**
**अग्रे घोषं रुदितबहुलं कातराणमशृण्वन् ।**
**अत्युत्क्रान्तिश्रममगणयन्नन्तकाले कपर्दिन**
**अद्वन्द्वे तव निविशतामन्तरात्मन्ममात्मा ॥ ३९ ॥**

## -* ஏதத்ப்ரார்த²நாத்³ருடீ⁴கரணம் *-

**அந்தர்பா³ஷ்பாகுலிதநயனானந்தரங்கா³னபஶ்யன்**
**அக்³ரே கோ⁴ஷம் ருதி³தப³ு³லம் காதராணமஶ்ருண்வன் ।**
**அத்யுத்க்ராந்திஶ்ரமமக³ணயன்னந்தகாலே கபர்தி³ன**
**அத்³வந்த்³வே தவ நிவிஶதாமந்தராத்மன்மமாத்மா ॥ 39 ॥**

**(பதவுரை)** அதே வேண்டுகோளை மேலும் வலியுறுத்துகிறார்.

| | | |
|---|---|---|
| **கபர்தி³ன்** | = | ஜடாதாரியான பரமேச்வரனே!, |
| **அந்தராத்மன்** | = | அந்தர்யாமியே!, |
| **அந்தகாலே** | = | ப்ராண வியோக காலத்தில், |
| **அந்தர்பா³ஷ்பாகுலித நயநான்** | = | உள்ளூரப் பெருகிய கண்ணீரால் கலங்கிய கண்ணுடைய, |
| **அந்தரங்கா³ன்** | = | ஆப்த ஜனங்களை, |
| **அபச்யன்** | = | பார்க்காமலும், |

| | |
|---|---|
| **அக்ர** | முன்னால், |
| **காதராணான்** | பயந்த ஸ்திரீகளின், |
| **ருதி3தப3குலம்** | அழுதை மேலிட்ட, |
| **கோ4ஷம்** | பெருங்குரலையும் (காதில் வாங்காமலும்), |
| **உக்ராந்திச்ரமமபி** | மரண வேதனையையும், |
| **அக3ணயன்** | பொருட்படுத்தாமலும், |
| **தவ** | உன்னுடைய, |
| **அங்க்4ரித்3வந்த்3வே** | இருபாதங்களில், |
| **மம** | என்னுடைய, |
| **ஆத்மா** | ஜீவன், |
| **நிவிசதாம்** | அடைக்கலம் புகவேண்டும். |

**(கருத்துரை)** தாங்கமுடியாத துக்கத்தினால் பக்கத்தில் கண் கலங்கி நிற்கும் உயிருக்கு உயிரான என் சொந்த ஜனங்களைக் கண்ணால் பார்க்காமலும், மரிப்பவனைக்கண்டு பயத்துடனும் சோகத்துடனும் ப்ரலாபம் செய்பவர்களின் கூக்குரல்களைக் காதில் வாங்கிக் கொள்ளாமலும் ப்ராணன் வெளிக்கிளம்பும் போது ஏற்படும் சரீராவஸ்தைகளை லக்ஷ்யம் செய்யாமலும் அந்திய காலத்தில் என் மனம் அந்தராத்மாவான உன்னிடம் ஐக்யமடையட்டும்.

**(விசேஷவுரை)** இந்திரியம் முதலியன நல்ல நிலையில் இருக்கும் பொழுது, ஐயம் திரிபு இல்லாமல் ஸ்வாநுபவ விஷயமாக ஆன சிவோஹம் என்ற பாவனை அந்திய காலத்திலும் தொடர்ந்து இருக்கும். இஃது, வித்யாரண்ய முனிவரால்

**दिने दिने स्वप्नसुप्त्योः अधीते विस्मृते ऽप्ययम् ।**
**परोद्यननिधीतः स्यात्तद्वद्विद्या न नश्यति ॥**

**प्रमाणोत्पादिता विद्या प्रमाणं प्रवलं विना ।**
**न नश्यति न वेदान्तात् प्रबलं मानमिष्यते ।**

**தி3னே தி3னே ஸ்வப்னஸுப்த்யோ: அதீ4தே விஸ்ம்ருதே (அ)ப்யயம் ।**
**பரோத்3யனநிதீ4த: ஸ்யாத்தத்3வத்3வித்3யா ந நஶ்யதி ॥**

**ப்ரமாணோத்பாதி3தா வித்3யா ப்ரமாணம் ப்ரவலம் வினா ।**
**ந நஶ்யதி ந வேதா3ந்தாத் ப்ரப3லம் மானமிஷ்யதே ॥**

என்று விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

## -* ईश्वरप्रत्यक्षानुभवः *-

चारुस्मेराननसरसिजं चन्द्ररेखावतंसं
फुल्लन्मल्लीकुसुमकलिकादामसौभाग्यचोरम् ।
अन्तः पश्याम्यचलसुतया रत्नपीठे निषण्णं
लोकातीतं सततशुभदं रूपमप्राकृतं ते ॥ ४० ॥

### -* ஈஶ்வரப்ரத்யக்ஷானுப⁴வ: *-

**சாருஸ்மேரானனஸரஸிஜம் சந்த்³ரரேகா²வதம்ஸம்**
**பு²ல்லன்மல்லீகுஸுமகலிகாதா³மஸௌபா⁴க்³யசோரம் ।**
**அந்த: பஶ்யாம்யசலஸுதயா ரத்னபீடே² நிஷண்ணம்**
**லோகாதீதம் ஸததஶுப⁴த³ம் ரூபமப்ராக்ருதம் தே ॥ 40 ॥**

**(பதவுரை)** ஈச்வராநுபவத்தை வேண்டுகிறார்:

| | | |
|---|---|---|
| **சாருஸ்மேரானன ஸரஸிஜம்** | = | அழகிய புன்னகை கொண்ட வதனத் தாமரையை யுடையவரும், |
| **சந்த்³ரரேகா²வதம்ஸம்** | = | இளம் பிறையைச் சிரஸில் சூட்டியவரும், |
| **பு²ல்லன்மல்லீகுஸும கலிகாதா³ம ஸௌபா⁴க்³யசோரம்** | = | மலர்ந்த மல்லிகை மொக்குகளால் தொடுத்த மாலையின் மங்களகரமான எழிலைப் பரிப்பதும், |
| **அசலஸுதயா** | = | மலை மன்னனின் மகளொடு, |
| **ரத்ன பீடே²** | = | ரத்னமய பீடத்தில், |
| **நிஷண்ணாம்** | = | வீற்றிருப்பதும், |
| **லோகாதீதம்** | = | லோகங்களுக்கு எட்டாததும், |
| **ஸததசுப⁴த³ம்** | = | நித்ய மங்களங்களைக் கொடுப்பதும், |
| **அப்ராக்ருதம்** | = | ஸாதாரணமல்லாததும் ஆகிய, |
| **தே ரூபம்** | = | உன் ஸ்வரூபத்தை, |
| **அந்த: பச்யாமி** | = | உள்ளத்தில் காண்கிறேன். |

**(கருத்துரை)** மனதின் தியான ஸமாதியில் உதிக்கும் ஈச்வர ஸ்வரூப ஸாக்ஷாத்காரத்தை சித்திரத்தில் வரைவது போல வர்ணித்துக் கூறுகிறார். ஈச்வர னின் சரீர காந்தியை மலரும் தருவாயிலிருக்கும் மல்லிகை மொட்டுகளின் மாலைக்கு ஒப்பிடிகிறார். அதில் வெண்மை, மணம், மென்மை, குளிர்ச்சி இவை யெல்லாம் தோன்றுகின்றன. பகவான் பார்வதீ தேவியுடன் யோகாஸனத்தில் வீற்றிருக்கும் வைபவம் தோன்றுகிறது. கருணாமூர்த்தியின் வதனத்தில் மந்தஹா ஸம் தவழுகிறது. முடியில் இளம் பிறை ஒளி வீசுகிறது. அந்த ஸ்வரூபம் எங்கும் காணக்கிடைக்காத திவ்யமங்களமானது. 224 லோகங்களுக்கு அப்பாலிருந்து பிரகாசி ப்பது. அத்தகைய உன் ரூபம் எனக்கு இப்பொழுது தென்படுகிறது. அடுத்த

சுலோகத்துடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது **अन्तःपच्यामि அந்த:பச்யாமி** என்ற வாக்யத்திற்கு நான் காண்பேனா? என் அந்திய காலத்தில் உன் திருவுருவத்தை நான் காண்பது ஸாத்யமாகுமா? என்று அர்த்தம் செய்து கொள்வதே உசிதம் எனத் தோன்றுகிறது.

(விசேஷவுரை) शुभद सततं **ஶுப⁴த³ ஸததம்** என்று பாடம் சில பிரதிகளில் உள்ளது.

**तथैव योगिनां चापि ज्ञानिनां मन्त्रिणामपि ।**
**जपपूजानिमित्ताय निष्कलं सकलं भवेत् ॥**

**ததை²வ யோகி³னாம் சாபி ஜ்ஞானினாம் மந்த்ரிணாமபி ।**
**ஜபபூஜாநிமித்தாய நிஷ்கலம் ஸகலம் ப⁴வேத் ॥**

என்ற ஆகம வாக்கியத்தின்படி ஸகளமாகத்தோன்றும்

**या ते रुद्र शिवा तनूरघोरा**

**யா தே ருத்³ர ஶிவா தனூரகோ⁴ரா**

என்ற சுருதியில் **अपापकाशिनी அபாபகாஶினீ** என்பது ஸகளரூபம் என்று கூறுகின்றனர்.

### - * प्रार्थना दौर्लभ्यान्निर्वेदः * -

**स्वप्ने वापि स्वरसविकसद्दिव्यपङ्केरुहाभं**
**पश्येयं किं तव पशुपते पादयुग्मं कदाचित् ।**
**काहं पापः क्व तव चरणालोकभाग्यं तथापि**
**प्रत्याशां मे घटयति पुनर्विश्रुता तेऽनुकम्पा ॥ ४१ ॥**

### * ப்ரார்த²னா தௌ³ர்லப்⁴யாந்நிர்வேத³:

**ஸ்வப்னே வாபி ஸ்வரஸவிகஸத்³தி³வ்யபங்கேருஹாப⁴ம்**
**பஶ்யேயம் கிம் தவ பஶுபதே பாத³யுக்³மம் கதா³சித் ।**
**காஹம் பாப: க்வ தவ சரணாலோகபா⁴க்³யம் ததா²பி**
**ப்ரத்யாஶாம் மே க⁴டயதி புனர்விஶ்ருதா தே(அ)னுகம்பா ॥ 41 ॥**

(பதவுரை) அந்திய காலத்தில் அந்த பாக்யம் கிடைப்பது அரிது எனினும் ஸொப்பனத்திலாவது உன் தரிசனம் எப்பொழுதாவது ஒரு சமயம் கிடைக்குமா? என்று வேண்டுகோள் கிடைக்கப் பெறாமையால் வருந்துகிறார்.

| | | |
|---|---|---|
| **பஶுபதே** | = | ஹே ஈசவரா!, |
| **ஸ்வரஸவிகஸத்³தி³வ்ய பங்கேருஹாப⁴ம்** | = | தானாக மலர்ந்த தேவலோகத்துத் தாமரைப் புஷ்பத்தின் அழகு பொருந்திய, |
| **தவ பாத³யுக்³மம்** | = | உன்னிரு பாதங்களை, |
| **கதா³சித்** | = | எப்பொழுதாவது, |
| **ஸ்வப்னே வாபி** | = | ஸ்வப்னத்திலாவது, |
| **கிம் பஶ்யேயம்** | = | நான் பார்ப்பேனா?, |
| **பாபः க்வ அஹம்** | = | பாபியான நான் எங்கே?, |
| **தவ** | = | உன்னுடைய, |
| **சரணாலோகபா⁴க்³யம் க்வ** | = | உன் பாதங்களைக் காணும் பாக்கியம் எங்கே?, |
| **ததா²பி** | = | அப்படி இருப்பினும், |
| **விஶ்ருதா** | = | உலகப் பிரஸித்தமான?, |
| **தே** | = | உன்னுடைய, |
| **அனுகம்பா புன:** | = | தயவு மட்டும், |
| **மே** | = | எனக்கு, |
| **ப்ரத்யாஶாம்** | = | நம்பிக்கையை, |
| **க⁴டயதி** | = | ஏற்படுத்துகிறது. |

**(கருத்துரை)** தானாக மலரும் தாமரைப் புஷ்பத்தின் அழகு வாய்ந்த உன் பாதங்களை கனவிலாவது நான் தெய்வச் செயலாகவாவது பார்க்க நேரிடலாகாதா? அதற்குக்கூட நான் கொடுத்து வைத்தவனில்லை. ஏனெனில் நான் அவ்விதமான பாபி. ஆனாலும் உலகம் புகழும் உன் கருணையைக் கருணையைக் கடைப்பிடித்துக் கொண்டு கனவிலாவது அந்த திவ்ய தரிசனத்தின் பாக்கியம் எனக்குக் கிடைக்கும்படி நீ அனுக்ரஹம் செய்வாய் என்று நான் நம்பி ஆவலுடனிருக்கிறேன்.

**(விசேஷவுரை)** க்வ என்று இரண்டு தரம் கூறியது உன் திருவடி தரிசன பாக்கியம் கிடைப்பது மிகவும் அரிது என்பதை உணர்த்துகிறது.

## * भिक्षाचर्यादिकापट्यनिरूपणम् *-

**भिक्षावृत्तिं चर पितृवने भूतसङ्घैर्भ्रमेदं**
**विज्ञातं ते चरितमखिलं विप्रलिप्सोः कपालिन् ।**
**आवैकुण्ठद्रुहिणमखिलप्राणिनामीश्वरस्त्वं**
**नाथ स्वप्नेऽप्यहमिह न ते पादपद्मं त्यजामि ॥ ४२ ॥**

## - ⁕ பி⁴க்ஷாசர்யாதி³காபட்யநிரூபணம் ⁕ -

**பி⁴க்ஷாவ்ருத்திம் சர பித்ருவனே பூ⁴தஸங்கை⁴ர்ப்⁴ரமேத³ம்**
**விஜ்ஞாதம் தே சரிதமகி²லம் விப்ரலிப்ஸோ꞉ கபாலின் ।**
**ஆவைகுண்ட²த்³ருஹிணமகி²லப்ராணிநாமீஶ்வரஸ்த்வம்**
**நாத² ஸ்வப்னே(அ)ப்யஹமிஹ ந தே பாத³பத்³மம் த்யஜாமி ॥ 42 ॥**

**(பதவுரை)** நீ பிக்ஷை எடுத்தல் முதலியன கபடமாக ஏற்பட்டன என்று கூறுகிறார்.

| | | |
|---|---|---|
| **கபாலின்** | = | கபாலதாரியான சிவனே, |
| **பி⁴க்ஷாவ்ருத்திம் சர** | = | பிச்சை எடுப்பதை அனுஷ்டி, |
| **பித்ருவனே** | = | சுடுகாட்டில், |
| **பூ⁴தஸங்கை⁴:** | = | பிசாசங்களுடன், |
| **ப்⁴ரம** | = | சுற்று (எனினும்), |
| **அகி²லம் இதம்** | = | இது எல்லாம், |
| **விப்ரலிப்ஸோ꞉ தே** | = | ஏமாற்றும் எண்ணமுடைய உன்னுடைய, |
| **சரிதம்** | = | நடவடிக்கை (என்று), |
| **விஜ்ஞாதம்** | = | தெரிந்துவிட்டது, |
| **ஆவைகுண்ட²த்³ருஹிணம்** | = | விஷ்ணு ப்ரஹ்மா பர்யந்தமான, |
| **அகிலப்ராணினாம்** | = | எல்லா ஜீவராசிகளுக்கும், |
| **ஈஶ்வர: த்வம்** | = | ஈசன் நீ, |
| **நாத²** | = | ஓ ஸ்வாமி, |
| **ஸ்வப்னேபி** | = | கனவிற்கூட, |
| **இஹ** | = | இந்த ஜன்மத்தில், |
| **அஹம்** | = | நான், |
| **தே பாத³பத்³மம்** | = | உன் சரணகமலத்தை, |
| **ந த்யஜாமி** | = | விடமாட்டேன். |

**(கருத்துரை)** நீ பிக்ஷை எடுப்பதானாலும் சுடுகாட்டில் சஞ்சரித்தாலும் பூதங்களுடன் கூடித்திரிந்தாலும் மண்டை யோட்டைப் பூண்டிருந்தாலும் உன் மகிமையை என்னிடமிருந்து மறைத்துவிட முடியாது. நீ எப்படி நடித்துக்காண்பித்தாலும் நீதான் கொசுகு முதல் பிரமன் விஷ்ணு முதலிய தேவதைகள் பரியங்தம் ஸகல பிராணிகளுக்கும் அதிபதி. இதை நான் அறிந்தவனாதலால் நினைவுள்ளபோது மட்டுமல்லாமல் ஸ்வப்னதசையில் கூட உன் சரணகமலங்களை நான் விடவே மாட்டேன்.

**(விசேஷவுரை)**

**यस्यानवद्यं चरितं मनीषिणो**
**गृणन्त्य विद्यापटलं बिभित्सवः ।**

**निरस्तसाम्यातिशयोऽपि यः स्वयं**
**पिशाचचर्यामचत्सतां गतिः ॥**

**யஸ்யானவத்3யம் சரிதம் மனீஷிணோ**
**க்3ருணந்த்ய வித்3யாபடலம் பி3பி4த்ஸவ: |**
**நிரஸ்தஸாம்யாதிஶயோ(அ)பி ய: ஸ்வயம்**
**பிஶாசசர்யாமசத்ஸதாம்' க3தி: ||**

என்று பாகவதத்தில் கூறியதும் ஈண்டு கவனிக்கத்தக்கது.

### - * ईश्वरस्य ऐश्वर्यं श्रुतिसिद्धम् * –

**आलेपनं भसितमावसथः श्मशानम्**
**अस्थीनि ते सततमाभरणानि सन्तु ।**
**नितुमीश निखिलश्रुतिसारसिद्धम्**
**ऐश्वर्यमम्बुजभवोऽपि च न क्षमस्ते ॥ ४३ ॥**

### - * ஈஶ்வரஸ்ய ஐஶ்வர்யம்' ஶ்ருதிஸித்3த4ம் * -

**ஆலேபனம் ப4ஸிதமாவஸத2: ஶ்மஶானம்**
**அஸ்தீ2னி தே ஸததமாப4ரணானி ஸந்து |**
**நிதுமீஶ நிகி2லஶ்ருதிஸாரஸித்3த4ம்**
**ஐஶ்வர்யமம்பு3ஜப4வோ(அ)பி ச ந க்ஷமஸ்தே || 43 ||**

**(பதவுரை)** ஈசனின் பெருமை வேதஸித்தம் எனக் கூறுகிறார்.

| | | |
|---|---|---|
| **ஆலேபனம் ப4ஸிதம்** | = | நீ பூசிக்கொள்ளுவது விபூதி, |
| **ஆவஸதம்** | = | உனதிருப்பிடம், |
| **ஶ்மஶானம்** | = | சுடுகாடு, |
| **தே** | = | உனக்கு, |
| **ஸததம்** | = | எப்பொழுதும், |
| **ஆப4ரணம்** | = | அணியாக இருப்பன, |
| **அஸ்தி2னி** | = | எலும்புகள், |
| **ஸந்து** | = | இவ்வாறு இருக்கட்டும், |
| **ஈசா** | = | ஈச்வரனே!, |
| **ஸகலஶ்ருதி ஸாரஸித்3த4ம்** | = | ஸகல வேதங்களாலும் ஸாரமென்று நிச்சயமாகத் தெரிகிற, |
| **தே** | = | உன்னுடைய, |
| **ஐஶ்வர்யம்** | = | ஈச்வரத் தன்மையை, |
| **நின்ஹோதும்** | = | மறைக்க, |

**அம்பு⁴ஜ ப⁴வோபிச** = ப்ரஹ்மாவும்,
**ந க்ஷம:** = முடியாதவர்.

**(கருத்துரை)** சாம்பலைப் பூசி சுடுகாட்டில் வசித்து எலும்புமாலை பூண்டு நீ ஏழைக் கோலத்தை ப்ரகடனம் செய்தாலும் ஸகல வேதங்களாலும் உபநிஷத்துக்க ளாலும் தீர்மானமாய் கோஷிக்கப்படும் உன் ஐச்வர்யத்தை மறைக்கும் திறமை ப்ரஹ்ம தேவனுக்கும் கிடையாது.

**(விசேஷவுரை)** சுருதி பாரஸித்தம் என்று ஒரு பாடம் உண்டு. ப்ரஹ்மதர்க்க ஸ்தவத்தில்

**दग्धे तवाक्षिनयनेन चराचरेऽस्मिन् त्वत्तोऽखिलं भुवनमेव महाश्मशानम् ।**
**तत्र स्थितिं विबुधनाथ तवासहायां, सन्तः श्मशानवसतिं समुदाहरन्ति ॥**

**த³க்³தே⁴ தவாக்ஷிநயனேன சராசரே(அ)ஸ்மின் த்வத்தோ(அ)கி²லம்**
**பு⁴வனமேவ மஹாஶ்மஶானம் ।**
**தத்ர ஸ்தி²திம் விபு³த⁴நாத² தவாஸஹாயாம், ஸந்த:**
**ஶ்மஶானவஸதிம் ஸமுதா³ஹரந்தி ॥**

ஸகல ஸம்ஹார காலத்தில் ஒருவகை ஈசனிருக்கும் நிலையை மஹாச்மசான வாஸி என்ற சொல் உணர்த்துவதாகக் கூறுகிறார். சிவபுராணத்தில் எலும்புகள் விஷ்ணுவினுடையன என்பது விரிவாகக் கூறப்படுகிறது. வேதங்களைக் கவர்ந்து சென்ற ஸோமகா ஸுரனைக் கொன்று மத்ஸ்யரூபத்துடன் அட்டஹாஸம் செய்த விஷ்ணுவை குஹன் சிக்ஷித்தான். அவர் தன்னுடைய நேத்ரவலய ரூபமான எலும்பைக் கொடுத்தார். செறுக்குற்ற ஆதி கூர்மம் கணேசனால் துன்புறுத்தப்பட்டு தனது முதுகு கபாலாஸ்தியைக் கொடுத்தார். வீரபத்ரனால் பீடிக்கப்பட்ட ஆதி வரா ஹம், தெத்துப்பல்லைக் கொடுத்தார். சரபத்தினால் ஹிம்ஸிக்கப்பட்ட ந்ருஸிம்ஹன் தனது தோலையும் ஆகாசபைரவரால் சிக்ஷிக்கப்பட்ட திரிவிக்ரமன் வீணா தண்டத் தையும் கொடுத்தார் என்பது சிவபுராணம். பிக்ஷாடனம் தாருகாவன மஹர்ஷிகளு க்கு ஜ்ஞானோபதேசம் செய்யவென்பது ப்ரஸித்தம். சவேதாச்வதரோபநிஷத், சங்கர ஸம்ஹிதா, ஸனத்குமார ஸம்ஹிதா, சிவபுராணம் முதலியன ஈசனுக்கு உள்ள குணாதிசயங்களைக் கூறுகின்றன.

**ईशावास्यमिदं सर्व, सर्वव्यापी स भगवान् तस्मात्सर्वगतः शिवः –**

**ஈஶாவாஸ்யமித³ம் ஸர்வ, ஸர்வவ்யாபீ ஸ ப⁴க³வான்**
**தஸ்மாத்ஸர்வக³த: ஶிவ: -**

என்பது உபநிஷத்.

## - * शिवानुचरभृत्यभावाभ्यर्थनम् * –

विहर पितृवने वा विश्वपारे पुरे वा
रजतगिरितटे वा रत्नसानुस्थले वा ।
दिश भवदुपकण्ठं देहि मे भृत्यभावं
परमशिव तव श्रीपादुकावाहकानाम् ॥ ४४ ॥

### - * ஶிவானுசரப்⁴ரு'த்யபா⁴வாப்⁴யர்த²னம் * -

விஹர பித்ருவனே வா விஶ்வபாரே புரே வா
ரஜதகி³ரிதடே வா ரத்னஸானுஸ்த²லே வா ।
தி³ஶ ப⁴வது³பகண்ட²ம் தே³ஹி மே ப்⁴ரு'த்யபா⁴வம்
பரமஶிவ தவ ஶ்ரீபாது³காவாஹகானாம் ॥ 44 ॥

(பதவுரை)

| | | |
|---|---|---|
| **பித்ருவனே வா விஹர** | = | நீ சுடுகாட்டில் சஞ்சரித்தாலும் சரி, |
| **விஶ்வபாரே புரே வா** | = | ஸகலபுவனங்களுக்கு அப்பாலுள்ள உன் லோகத்தில் நீ வஸித்தாலும் சரி, |
| **ரஜதகி³ரிதடே வா** | = | வெள்ளிமலையான கைலாஸத்திலானாலும் சரி, |
| **ரத்னஸானுஸ்த²லே வா** | = | அல்லது ரத்ன தாழ்வரையுடன் கூடிய மேருமலையிலானாலும் சரி, |
| **ஹே பரமஶிவ** | = | ஏ பரமசிவனே, |
| **ப⁴வது³பகண்ட²ம்** | = | உன் சமீபத்திலிருத்தலை, |
| **தி³ஶ** | = | எனக்கு ஏற்படுத்து, |
| **தவ** | = | உன்னுடைய, |
| **ஶ்ரீபாது³காவாஹகானாம்** | = | பாதுகைகளைத் தாங்கும் நந்தி பிருங்கி முதலியவர்களுக்கு, |
| **ப்⁴ரு'த்யபா⁴வம்** | = | ஸேவகனாயிருத்தலை, |
| **மே தே³ஹி** | = | எனக்கு கொடு. |

**(கருத்துரை)** நீ சுடுகாட்டில் வஸித்தாலும் சரி அல்லது 224 புவனங்களுக்கு அப்பாலுள்ள உன் லோகத்தில் வசித்தாலும் சரி. நீ கைலாஸத்திலோ மேரு மலையிலோ இருந்தாலும் சரி. நீ எங்கிருப்பினும் உன் சமீபத்தில் சிச்ரூஷை செய்து கொண்டிருக்கும் பக்தர்களின் அடிமையாக என்னை ஏற்படுத்து.

**(விசேஷவுரை)** அடியார்க்குமடியேன் என்றது தேவாரம்.

## -* अर्थवादस्तुतामरानीश्वरत्वकथनम् * -

विविधमपि गुणौघं वेदयन्त्यर्थवादाः
परिमितविभवानां पामराणां सुराणाम् ।
तनुहिमकरमौले तावता तत्परत्वे
कति कति जगदीशाः कल्पिता नो भवेयुः ॥ ४५ ॥

## - * அர்த²வாத³ஸ்துதாமரானீஸ்வரத்வகத²னம் * -

**விவித⁴மபி கு³ணௌக⁴ம் வேத³யந்த்யர்த²வாதா³ः**
**பரிமிதவிப⁴வானாம் பாமராணாம் ஸுராணாம் ।**
**தனுஹிமகரமௌலே தாவதா தத்பரத்வே**
**கதி கதி ஜக³தீ³ஶாः கல்பிதா நோ ப⁴வேயுः ॥ 45 ॥**

**(பதவுரை)** அர்த்த வாதத்தினால் துதிக்கப்பட்டவர்கள் ஈசனல்லர் என்கிறார்.

| | | |
|---|---|---|
| **தனுஹிமகரமௌலே** | = | இளம் பிறையை முடியிற் சூடியவரே, |
| **பரிமிதவிப⁴வானாம்** | = | கணக்கிடப்படும் பெருமை வாய்ந்த, |
| **பாமராணாம்** | = | அஜ்ஞானிகளான, |
| **ஸுராணாம்** | = | தேவர்கள் விஷயத்தில், |
| **அர்த்த² வாதா:** | = | வேதங்களின் தாற்காலிகப் புகழ்ச்சிகள், |
| **விவித⁴மபி கு³ணௌக⁴ம்** | = | பற்பலவிதமான குணவிசேஷங்களை, |
| **வேத³யந்து** | = | விளம்பரப்படுத்தட்டும், |
| **தாவதா** | = | அந்தக் காரணத்தைக் கொண்டே, |
| **தத்பரத்வே** | = | அந்த தேவர்களுக்கு உன்னைவிட உயர்ந்த ஸ்தானமானது கிடைத்து விடுமானால், |
| **கதி கதி ஜக³தீ³ஶாः** | = | எத்தனை எத்தனை ஜகதீசர்கள், |
| **கல்பிதா** | = | ஏற்படுத்தப் பட்டவர்களாக, |
| **நோ ப⁴வேயுः** | = | ஆகமாட்டார்கள். |

**(கருத்துரை)** பரமேசுவரன் ஒருவனே ஒழியப் பல பேர்கள் இருப்பது அஸாத்யம். அந்த ஒருவனுக்கு உட்பட்டே மற்றவர்கள் ஆட்சி நடத்துவது கிரமமாகும். இல்லையேல் உலகங்களுக்குக் கேடு விளையும். ஆனால் உன்னைத் தவிர மற்ற விஷ்ணு முதலிய தேவதைகளின் பெருமைகளை விரிவாய் வர்ணிக்கிறார்களே என்றால் அவ்வித வர்ணனைகள் அர்த்தவாதங்கள் ஆகின்றன. அவை தாற்காலிகமான ஸ்துதிகள். முடிவான தீர்மானத்தைக் குறிக்கின்றனவாகமாட்டா. ஸர்வேச்வரனான உன்னைத் தவிர மற்ற தேவர்கள் ஒரு வரம்புடன் கூடிய மகிமையைப் பெற்றவர்களே. அவர்கள் தவறுகளைச் செய்பவர்களாயும், அந்தப் பாப பயன்களை அடைபவர்களாயு மிருக்கிறார்கள். ஆதலால் அவர்கள் பாமரர்கள். நீயோ

ஞான கலைக்கு அடையாளமான சந்திரகலையை தரித்தவன். அளவற்ற தடையற்ற மகிமை வாய்ந்தவன்.

**(விசேஷவுரை)**

**ज्ञानचन्द्रकलाचूडं दशदिग्बाहुमण्डलम् –**

**ஜ்ஞானசந்த்³ரகலாசூட³ம் த³ஶதி³க்³பா³ஹுமண்ட³லம் -**

என்பது ஆகமம். அர்த்தவாதங்கள், நிந்தை, ஸ்துதி, ப்ரக்ருதி, புராகல்பம் என்று பலவகைப்படும்.

**शिवस्य परतत्त्वस्य स्वभावः सकलं शुक |**
**तद्धीनं तदन्येषां इति तत्त्वविदां स्थितिः ॥**

**ஶிவஸ்ய பரதத்த்வஸ்ய ஸ்வபா⁴வ: ஸகலம் ஶுக |**
**தத்³தீ⁴னம் தத³ன்யேஷாம் இதி தத்த்வவிதா³ம் ஸ்தி²தி: ||**

என்பதனால் மற்ற தேவர்களின் மஹிமை அளவுக்கடங்கியது என்பது புலனாகும். விருத்திரஹத்தி, கௌதம பத்னி தர்ஷணம் முதலியவற்றால் இந்திரன் பாபத்தையும், அதன் பயனையும் அடைந்தான் என்பது பிரசித்தம். ப்ரஹ்மா, விஷ்ணு முதலிய தேவர்களும் அவ்விதமே.

**- * ब्रह्मादिभिः निष्कृष्टं शिवपारम्यम् * -**

**बलमबलममीषां बल्बजानां विचिन्त्यं**
**कथमपि शिव कालक्षेपमात्रप्रधानैः ।**
**निखिलमपि रहस्यं नाथ निष्कृष्य साक्षात्**
**सरसिजभवमुख्यैः साधितं नः प्रमाणम् ॥ ४६ ॥**

*** ப்³ரஹ்மாதி³பி⁴: நிஷ்க்ரு’ஷ்டம்’ ஶிவபாரம்யம் -**

**ப³லமப³லமமீஷாம் ப³ல்ப³ஜானாம் விசிந்த்யம்**
**கத²மபி ஶிவ காலக்ஷேபமாத்ரப்ரதா⁴னை: |**
**நிகி²லமபி ரஹஸ்யம் நாத² நிஷ்க்ருஷ்ய ஸாக்ஷாத்**
**ஸரஸிஜப⁴வமுக்²யை: ஸாதி⁴தம் ந: ப்ரமாணம் || 46 ||**

**(பதவுரை)** ப்ரஹ்மா முதலியவர்களால் சிவ பரத்துவம் தீர்மானிக்கப்பெற்றுள்ளது.

| | | |
|---|---|---|
| **ஶிவ** | = | சிவபெருமானே, |
| **ப³ல்ப³ஜானாம் அமீஷாம்** | = | துர்பலர்களான இந்த தேவர்களின், |
| **ப³லம்** | = | பலமும், |
| **அப³லம்** | = | பலமற்ற தன்மையும், |
| **கத²மபி** | = | வெகு சிரமப்பட்டு, |
| **காலக்ஷேபமாத்ரப்ரதா⁴னைः** | = | பொழுது போக்குவதிலேயே முக்கிய நோக்கமுடையவர்களால், |
| **விசிந்த்யம்** | = | ஆராய்ச்சி செய்யப்படவேண்டியது, |
| **நாத²** | = | ஸ்வாமி, |
| **நிகி²லமபி ரஹஸ்யம்** | = | வேதபுராணங்களின் ஸர்வ ரஹஸ்யத் தையும், |
| **நிஷ்க்ருஷ்ய** | = | கடைந்தெடுத்து (ஒருங்கே திரட்டி), |
| **ஸாக்ஷாத் ஸரஸிஜப⁴வமுக்²யைः** | = | நேராக ப்ரஹ்மா முதலியவர்களாலேயே, |
| **ஸாதி⁴தம்** | = | எது ஸாதிக்கப்பட்டிருக்கிறதோ அதுவே, |
| **நः ப்ரமாணம்** | = | எமக்குச் சான்று. |

**(கருத்துரை)** தேவர்களின் பரஸ்பர பலாபலங்களை ஆராய்ச்சி செய்து கொண்டு பொழுது போக்கிக் கொண்டிருக்கிறார்கள் பலர். அப்படி வீண் பொழுது போக்க எனக்கு அவசியமில்லை. கர்ம, உபாஸனா, ஜ்ஞான காண்டங்களின் பரம ஸித்தாந்தத்தைப்ரஹ்மா முதலியவர்கள் கடைந்து எடுத்துத் தெளிவாய் உரைத்து விட்டபடியால் நான் அவர்களின் வாக்கியத்தைக் கடைப்பிடித்துக்கொண்டு உன்னைச் சரணமடைவதே கதி என்பதை அறிந்திருக்கிறேன்.

**(விசேஷவுரை)**

**न वा ओजीयो रुद्र त्वदस्ति**

**ந வா ஓஜீயோ ருத்³ர த்வத³ஸ்தி**

என்று வேதம். "எல்லோரையும் விட ஈசன் பலவான்" எனபதை உணர்த்துகிறது.

**मायाबलेनैव हरिं शिवेन समानमाहुः पुरुषाधमा हि ॥**

**மாயாப³லேனைவ ஹரிம் ஶிவேன ஸமானமாஹுः புருஷாத⁴மா ஹி ॥**

என்பது ப்ரஹ்மகீதை. மேலும்

**परमशिवसमुद्रेऽहं हरिः**
**सर्वदेवा मनुजपशुमृगाद्याः शीकरा एव सत्यं**

**பரமஶிவஸமுத்³ரே(அ)ஹம் ஹரிः**
**ஸர்வதே³வா மனுஜபஶும்ருகா³த்³யாः ஶீகரா ஏவ ஸத்யம்**

என்று கூறியுள்ளது.

**विमलमतिभिरेवं वेदवेदान्तनिष्ठैः हृदयकुहरनिष्टं वेदितुं शक्यते हि**

**விமலமதிபி⁴ரேவம் வேத³வேதா³ந்தநிஷ்டை²:**
**ஹ்ருத³யகுஹரநிஷ்டம் வேதி³தும் ஶக்யதே ஹி**

என்றும் ப்ரஹ்மகீதை.

### – * शिवपदाब्जमन्तरा नान्यत्र मे स्पृहा * –

**न किंचिन्मेनेऽतः समभिलषणीयं त्रिभुवने**
**सुखं वा दुःखं वा मम भवतु यद्भावि भगवन् ।**
**समुन्मीलत्पाथो रुह कुहरसौभाग्यमुषि ते**
**पदद्वन्द्वे चेतः परिचयमुपेयान्मम सदा ॥ ४७ ॥**

### - ⁎ ஶிவபதா³ப்³ஜமந்தரா நான்யத்ர மே ஸ்பூஹா ⁎ -

**ந கிஞ்சின்மேனே(அ)த: ஸமபி⁴லஷணீயம் த்ரிபு⁴வனே**
**ஸுக²ம் வா து³:க²ம் வா மம ப⁴வது யத்³பா⁴வி ப⁴க³வன் ।**
**ஸமுன்மீலத்பாதோ² ருஹ குஹரஸௌபா⁴க்³யமுஷி தே**
**பத³த்³வந்த்³வே சேத: பரிசயமுபேயான்மம ஸதா³ ॥ 47 ॥**

**(பதவுரை)** சிவனது திருவடியன்றி வேறிடம் எனது விருப்பமில்லை என்கிறார்.

| | | |
|---|---|---|
| **த்ரிபு⁴வனே** | = | மூன்று உலகங்களிலும், |
| **அத:** | = | இதைக் காட்டிலும், |
| **ஸமபி⁴லஷணீயம்** | = | விரும்பத்தகுந்ததாக, |
| **ந கிஞ்சின்மேனே** | = | நான் எதையும் மதிக்க வில்லை, |
| **ப⁴க³வன்** | = | ஈச்வர! |
| **ஸுக²ம் வா து³:க²ம் வா** | = | சுகமோ துக்கமோ, |
| **மம** | = | எனக்கு, |
| **யத்³பா⁴வி** | = | பிராரப்தவசமாய் எது வரக்கூடியதோ, |
| **ப⁴வது** | = | அது வரட்டும், |
| **ஸமுன்மீலத்பாதோ² ருஹ குஹரஸௌ பா⁴க்³யமுஷி** | = | மலர்ந்த தாமரைப்பூவின் உட்புறத்தின் அழகைத் திருடும், |
| **தே பத³த்³வந்த்³வே** | = | உன்னிரு பாதங்களில், |
| **மம சேத:** | = | என் மனம், |

| | | |
|---|---|---|
| **ஸதா³** | = | எப்பொழுதும், |
| **பரிசயம்** | = | நட்பை |
| **உபேயாத்** | = | அடையட்டும். |

**(கருத்துரை)** எனக்கு இம் மூன்று லோகங்களிலும் வேண்டக் கூடியது மற்றொன்று மில்லை. கர்மவசமாய் சுகமோ துக்கமோ எது வரவேண்டிய பிராப்தி யோ அது வரட்டும். அதைப் பற்றி நான் கவலை கொள்ள வில்லை. நான் வேண்டு வது ஒன்றே தான். எப்பொழுதும் என்மனம் மலர்ந்த தாமரையின் உட்புறம் போல் அழகு மிகுந்த உன் இருசரணங்களில் ஈடுபடட்டும்.

**(விசேஷவுரை)**

**ऐश्वर्यमद्रयमनुपाधिमती च लक्ष्मीः शौर्यं च वीर्ययशसी च विरागता च।**
**एते गुणाः षडपि ते भगसंज्ञयोक्ताः, सन्तीत्यनेन भगवानिति ते निराहुः॥**

**ஐஶ்வர்யமத்³ரயமனுபாதி⁴மதீ ச லக்ஷ்மீ: ஶௌர்யம்**
**ச வீர்யயஶஸீ ச விராக³தா ச ।**
**ஏதே கு³ணா: ஷட³பி தே ப⁴க³ஸஞ்ஜ்ஞயோக்தா:,**
**ஸந்தீத்யனேன ப⁴க³வானிதி தே நிராஹு: ॥**

என்பது சுதர்சனாசாரயார் வாக்கு. மற்ற தேவர்களை பகவான் என்ற சப்தம், அடைமொழியுடன் கூடியே சுக்ரபகவான், சூரியபகவான் என்று உணர்த்தும். ரிஷிகளுக்கும் ஏனைய தேவர்களுக்கும் பொருந்துமாறு

**उत्पत्तिं निधनं चैव भूतानामा गतिं गतिम्।**
**वेत्ति विद्यामविद्यां च स वाच्यो भगवा निति ||**

**உத்பத்திம் நித⁴னம் சைவ பூ⁴தாநாமா க³திம் க³திம் ।**
**வேத்தி வித்³யாமவித்³யாம் ச ஸ வாச்யோ ப⁴க³வா நிதி ॥**

லக்ஷணம். புராணங்களில் கூறப்பட்டுள்ளது

**ऐश्वर्यस्य समग्रस्य वीर्यस्य यशसः श्रियः |**
**ज्ञानवैराग्ययोश्चापि षण्णां भग इतीरणा॥**

**ஐஶ்வர்யஸ்ய ஸமக்³ரஸ்ய வீர்யஸ்ய யஶஸ: ஶ்ரிய: ।**
**ஜ்ஞானவைராக்³யயோஶ்சாபி ஷண்ணாம் ப⁴க³ இதீரணா ॥**

என்ற லக்ஷணம் சிவபெருமானுக்கே பொருந்தும்.

## - * हीनस्तुत्युच्छिष्टभावक्षमापणम् * -

**उदरभरणमात्रं साध्यमुद्दिश्य नीचे-**
**ष्वसकृदुपनिबद्धामाहितोच्छिष्टभावाम् ।**
**अहमिह नुतिभङ्गीमर्पयित्वोपहारं**
**तव चरणसरोजे तात जातोऽपराधी ॥ ४८ ॥**

## - * ஹீனஸ்துத்யுச்சி2ஷ்டபா4வக்ஷமாபணம் * -

**உத3ரப4ரணமாத்ரம் ஸாத்4யமுத்3தி3ஶ்ய நீசே-**
**ப்வஸ்க்ருது3பனிவத்3தா4மாஹிதோச்சி2ஷ்டபா4வாம்।**
**அஹமிஹ நுதிப4ங்கீ3மர்பயித்வோபஹாரம்**
**தவ சரணஸரோஜே தாத ஜாதோ(அ)பராதீ4 ॥ 48 ॥**

(**பதவுரை**) நீசர்களைத் துதித்து தாழ்மை யடைந்த நாவால் உன்னைத் துதித்த குற்றத்தை மன்னிக்க வேண்டுமென பிரார்த்திக்கிறார்.

| | | |
|---|---|---|
| **தாத** | = | அப்பா!, |
| **உத3ரப4ரணமாத்ரம் ஸாத்4ய** | = | வயிற்றை நிரப்பும் பலனை மட்டும், |
| **உத்3தி3ஶ்ய** | = | உத்தேசம் செய்து, |
| **அஸக்ருத்** | = | அடிக்கடி, |
| **நிசேஷு** | = | அல்பர்கள் விஷயத்தில், |
| **உபநிப3த்3தா4ம்** | = | சுலோக ரூபமாய் அமைக்கப்பட்டு அதனால், |
| **ஆஹிதோச்சி2ஷ்ட பா4வாம்** | = | உச்சிஷ்டம் என்ற தன்மையை அடைவிக்கப்பட்ட, |
| **நுதிப4ங்கீ3ம்** | = | ஸ்தோத்திரத்தை, |
| **தவ** | = | உன்னுடைய, |
| **சரணஸரோஜே** | = | திருவடித் தாமரையில், |
| **உபஹாரம்** | = | காணிக்கையாக, |
| **அர்ப்பயித்வா** | = | அர்ப்பணம் செய்துவிட்டு, |
| **அஹம்** | = | நான், |
| **அபராதி ஜாத:** | = | அபராதம் செய்தவனானேன். |

(**கருத்துரை**) ஸ்வாமி! நான் இங்கு உன்னைத் துதிக்ககும் முன் எவ்வளவோ அதமர்களை இந்த வாக்கினால் துதித்திருக்கிறேன். வயிறு வளர்ப்பதற்காக அல்பர் களைத் துதித்த வாக்கினால் உன்னைத் துதிப்பது பெரிய அபராதமாகும். நிந்திக்கத் தக்க காரியத்தில் ஈடுபட்டிருந்த என் வாக்கு அசுத்தமாகிவிட்டது. அதை இப்போது உன் விஷயத்தில் பிரயோகிப்பதனால் நான் செய்யும் அபராதத்தை நீ க்ஷமித்துக் கொள்வாயா?

**(விசேஷவுரை)** வர்ணம், ஆச்ரமம் வயது, கர்ம, நிலை முதலியவற்றால் குறைந்தவர்களாயினும், பொருளின் நிமித்தம் துதித்ததால் வாக்கு அசுத்தமாயிற்று என்றார்.

## - * सर्वापराधक्षमापणम् *—

**सर्वं सदाशिव सहस्व ममापराधं**
**मग्नं समुद्धर महत्यमुमापदब्धौ ।**
**सर्वात्मना तव पदाम्बुजमेव दीनः**
**स्वामिन्ननन्यशरणः शरणं गतोऽस्मि ॥ ४९ ॥**

## - * ஸர்வாபராத⁴க்ஷமாபணம் * -

**ஸர்வம் ஸதா³ஶிவ ஸஹஸ்வ மமாபராத⁴ம்**
**மக்³னம் ஸமுத்³த⁴ர மஹத்யமுமாபத³ப்³தௌ⁴ ।**
**ஸர்வாத்மனா தவ பதா³ம்பு³ஜமேவ தீ³னः**
**ஸ்வாமின்னனன்யஶரணः ஶரணம் க³தோ(அ)ஸ்மி ॥ 49 ॥**

**(பதவுரை)** எல்லாக் குற்றங்களையும் பொறுக்க வேண்டுகிறார்.

| | | |
|---|---|---|
| **ஸதா³ஶிவ** | = | ஏ சதாசிவமே, |
| **ஸர்வம் மம அபராத⁴ம்** | = | என்னுடைய எல்லா அபராதங்களையும், |
| **ஸஹஸ்வ** | = | பொறுத்துக்கொள், |
| **ஆபத³ப்³தௌ⁴** | = | ஆபத்துக்கடலில், |
| **மக்³னம்** | = | மூழ்கின, |
| **அமும்** | = | இந்த என்னை, |
| **ஸமுத்³த⁴ர** | = | கை தூக்கிவிடு, |
| **ஸ்வாமின்** | = | ஸ்வாமியே, |
| **தீ³ன: (அஹம்)** | = | எளிய நான், |
| **அனன்ய ஶரணம்** | = | வேறு அடைக்கல மற்றவனாய், |
| **ஸர்வாத்மனா** | = | என் முழுத் தீர்மானத்துடன், |
| **தவ** | = | உன்னுடைய, |
| **பதா³ம்பு³ஜமேவ** | = | திருவடித் தாமரையையே, |
| **ஶரணம் க³தோஸ்மி** | = | சரணமடைந்திருக்கிறேன். |

**(கருத்துரை)** என் அபராதங்களை யெல்லாம் பொறுத்துக்கொண்டு என்னை இந்த ஆபத்துக்களினின்றும் நீ கைதூக்கி விடுவாயாக. ஸதாசிவ! எளியவனா ஹே கிய நான் எல்லாப்பற்றுகளையும் விட்டு வேறு சிந்தனை யில்லாமல் என்னை நீயே காப்பாய் என்று நம்பி உன்னையே சரணமடைந்து விட்டேன்.

**(விசேஷவுரை)** ஈண்டு ஆபத்து என்று ஸம்ஸார துக்கத்தைக் குறிப்பிடு கிறார். உலக ரீதியில் அவர்கள் பெரியவர் எனினும், தன்னுடைய வித்யேச்வர பதவி யைத் திரும்பவும் பெறுவதற்கு ஈசனது கிருபை வேண்டப்படுவதால் அதைப் பெறவே எளியவன் என்று தன்னைக் குறிக்கிறார்.

**चिदम्बरमिदं पुरं प्रथितमेव पुण्यस्थलं**
**सुताश्च विनयोज्ज्वला : सुकृतयश्च कश्चित्कृताः ।**
**वयांसि मम सप्ततेरुपरि नैव भोगे स्पृहा**
**न किंचिदपि चिन्तये शिवपदं दिदृक्षे परम् ॥**

**சித³ம்ப³ரமித³ம் புரம் ப்ரதி²தமேவ புண்யஸ்த²லம்**
**ஸுதாஸ்ச வினயோஜ்ஜ்வலா: ஸுக்ருதயஸ்ச கஸ்சித்க்ருதா: ।**
**வயாம்ஸி மம ஸப்ததேருபரி நைவ போ⁴கே³ ஸ்ப்ருஹா**
**ந கிஞ்சித³பி சிந்தயே ஶிவபத³ம் தி³த்³ருக்ஷே பரம் ॥**

என்று தீக்ஷிதர் அவர்களே கூறுகிறார்கள்.

**- * स्तुतिसमर्पणपूर्वकं प्रार्थना * -**

**आत्मार्पणस्तुतिरियं भगवन्निबद्धा**
**यद्यप्यनन्यमनसा न मया तथापि ।**
**वाचापि केवलमयं शरणं वृणीते**
**दीनों वराक इति रक्ष कृपानिधे माम् ॥ ५० ॥**

**- * ஸ்துதிஸமர்பணபூர்வகம்’ ப்ரார்த²னா * -**

**ஆத்மார்பணஸ்துதிரியம் ப⁴க³வநிப³த்³தா⁴**
**யத்³யப்யனன்யமனஸா ந மயா ததா²பி ।**
**வாசாபி கேவலமயம் ஶரணம் வ்ருணீதே**
**தீ³னோம் வராக இதி ரக்ஷ க்ருபாநிதே⁴ மாம் ॥ 50 ॥**

**(பதவுரை)** ஸ்துதியை ஈசனிடம் ஸமர்ப்பணம் செய்து வேண்டுகிறார்.

| | | |
|---|---|---|
| **ப⁴க³வன்** | = | ஓ ஈச்வர, |
| **இயம்** | = | இந்த, |
| **ஆத்மார்பணஸ்துதி** | = | ஆத்மார்ப்பண ஸ்துதியானது, |
| **மயா** | = | என்னால், |

| | | |
|---|---|---|
| **அனன்ய மனஸா** | = | வேறு விஷயங்களிலிருந்து கட்டுப்படுத்தப்பட்ட மனதுடன், |
| **யத்யப்பின நிப$^{3}$த்$^{3}$தா$^{4}$** | = | இயற்றப்படவில்லை, |
| **ததா$^{2}$பி** | = | அப்படியிருப்பினும், |
| **க்ருபாநிதே$^{4}$** | = | தயாநிதியே, |
| **அயம் தீன: சராக:** | = | இவன் எளியவன் அற்பன், |
| **வாசா கேவலம்** | = | வெறும் வார்த்தையினால் மட்டுமாவது, |
| **சரணம் வ்ருணீதே** | = | சரணத்தை வேண்டுகிறான், |
| **இதி** | = | என்ற காரணத்தைக்கொண்டு, |
| **மாம் ரக்ஷ** | = | என்னை ரக்ஷிக்க வேண்டும். |

**(கருத்துரை)** நான் ஏகாக்ரசித்தனாக இருந்து இந்த ஆத்மார்ப்பண ஸ்துதியை இயற்றவில்லை எனினும் தயாநிதியே! ஸ்துதி ரூபமான வார்த்தைகளை (மனமுருகாமல்) மட்டுமாவது சொல்லுகிறானே என்று கருணை புரிந்து என்னை ரக்ஷிப்பாயாக.

**(விசேஷவுரை)** நீ தயாநிதி; ஆதலின், நான் எவ்விதம் பிரார்த்தனை செய்தாலும் பயன் அளிப்பாய் என்பது தோன்ற கிருபாநிதே என்று ஸம்போதனம் செய்தார்.

**முற்றிற்று.**